உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

---

பவழப்பாடிபதிதனில்

எழுந்தருளியிருந்த

பவழப்பாடிப்புலவரவர்கள்

இயற்றிய

# சானந்தகணேசர்புராணம்

மூலமும்உரையும்.



இஃது

## வா-கர்ஸுமகேஸரவர்கள்

வேண்டுகோளின்படி,

வித்வான்

தி-முத்துசாமிபிள்ளையவர்களிடங்கிடைத்த

ஏட்டுப்பிரதிப்படி,

### சிதம்பரம்-சிங்காரவேலுபிள்ளை

அவர்களால்

சென்னை:

மனோன்மணிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1910.

---

இதன்விலை அணா—12.



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.





சானந்தகணேசர்.



# முகவுரை.

இப்பூமண்டலத்தின்கண்ணே அனாதிகாலந்தொட்டுப் பிரமன் சிருட்டிப்பால் அனேக ஜீவராசிகளுள ; அதில் மானிடப்பிறவி மேலெனப் பேறறியுடையோர்களாலும் ஆகமபுராணச் சாத்திரங்களாலுங்கண்டு முணர்ந்திருக்கிறோமல்லவா ; அதிலுங் கூன் குருடு செவிடு முதலியவைகளிலாமலும் பாபக்கிரத்தியங்கட்குடன்படாமலும் பேரின்பவீடடைவதற்குக் காரணபூதராய்விளங்காநின்ற பெரியோனெனப் பேர்பெற்றச் சானந்தகணேசமூர்த்தியே போதுமான வத்தாக்ஷியாயிருக்கின்றனர் ; எவ்வாறெனில், பாபத்தொழிற்குடன்பட்டு கடைசியாய்க் காலன்பாசத்திற்சிக்குண்டு நரகவீடடைந்து வேதனைக்குள்ளாகாமல் இப்புராணசாராம்சங்களைக்கிரகித்துச் சிவானுக்கிரகம்பெற்று சாயுச்சியபதவி யடையவேணுமென்னுங் கருத்து ஒவ்வொருவருக்கு மிருக்கவேண்டுமென்று இச்சானந்தகணேசர்புராணத்தை யச்சிட்டு வெளியிடமுயன்று பலவிடங்களிலுஞ்சென்று கடைசியாக காமக்கோட்டி பீடமென்னுங் காஞ்சிமாநகரத்தில் வசித்த வித்வான் ஸ்ரீ-முத்துசாமிபிள்ளையவர்களிடங்கிடைத்த சுத்த வேட்டுப்பிரதிப்படி ஆராய்ச்சிசெய்து பரோபகார நிமித்தமாய் வா-காள மகேசரவர்கள் வேண்டுகோளின்படி வெளியிட்டனன். ஆகையால் இரு சமயத்தாரும் நன்மார்க்க நன்னெறியைக்காட்ட ஹேதுவாயிருக்கும் இப்புராண சங்கையைத்தெரிந்து கொள்ளவேண்டுமென அடியேன் கருத்து.

சி. சி. பி.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## சானந்தகணேசர்புராணத்தின் சருக்க

# அட்டவணை.





சானந்தகணேசர் புராணத்தின் சருக்க

அட்டவணை முற்றிற்று.





உ

கணபதிதுணை.







திருச்சிற்றம்பலம்.

# சானந்தகணேசர்புராணம்

## மூலமும்-உரையும்.



## காப்பு.

### விநாயகர்-துதி.

வெண்பா.

என்ற னகத்துதல்லை யிரித்தே கதிராக்கி
நன்றி நெறிக்கான நடைகாட்டி-நின்றநிலத்
தையான னத்தா னரியாக்கை நீக்கியருங்
கையான னத்தான் கழல்.

(என்பது) என்னிடத்திலிருக்கப்பட்ட அஞ்ஞானவிருளை நீக்கி, சுஞ்ஞான பிரகாச முண்டாக்கி, ஆனந்தமார்க்கத்துக்கான நடையைக்காட்டி, பூமியினிடத்தே யெனக்கு முன்னின்று இரட்சிப்பது எவருடைய பாதமென்னில், அழகான சங்கத்தை யூதிய விஷ்ணுவிற்குச் சாபத்தால்வந்த சர்ப்பரூபத்தை நீக்கின அழகிய துதிக்கையையும் யானைமுகமுமுள்ள நமது விக்கினேஸ்வரருடையபாதம். என்றவாறு.

### பாயிரம்.

### உமாபதி-துதி.

பருதிமதித்தீயெனுமூன்றும் பார்வையாகத்திகழ்ந்திடினுங்
கருகுதிமிரம்புலராதகளத் தெம்பெருமான்மலைவில்லோன்
சுருதிபரவுமிமையமக ளேணவனுமைப்புணைபற்றி
பெருகுதுயரத்திரையொழியாப் பிறவிக்கடலையகற்றுவாம்.

(எ-து.) சூரியன் சந்திரன் அக்கினியென மூன்றும் கண்களாக விருந்தாலும், கரியவிருள்நீங்காத கண்டத்தையுடைய பரமேஸ்வரன் மகாமேருவை வில்லாகவளைத்தவர், வேதங்கள் துதிக்கப்பட்ட மலையரையன்மகளுக்குப்பதியானவர், இப்படிப்பட்ட சிவனுடையபேரைத் தெப்பமாகப் பிடித்துக்கொண்டு மிகதுக்கமாகிய அலைகளொழியாத பிறவிக்கடலைக் கடத்துவாம். எ-று. (க)

## உமையவள்-துதி.

அலகின்முதுபேரண்டமளித் தருளுமயிலையயன்முதலாய்ப்
பலருமிறைஞ்சுமுயரரசின் பாலிற்படர்ந்தபசுங்கொடியை
யிலகுமொருகொம்புடைக்கரியை யீன்றபிடியையுளக்கமலத்
துலவுமிளவோதிமப்பெடையையுன்னிப்புகழ்ந்துவணங்குவாம்

(எ-து.) எண்ணிறந்த பெரிய பிரமாண்டங்களாகிய முட்டைகளைப்பெற்ற மயிலையும், பிரமன்முதலான தேவர்கள் பணியப்பட்டவுயர்ந்த பரமேஸ்வரனிடத்தேபடரப்பட்ட பச்சைக்கொடியையும், பிரகாசிக்கப்பட்ட வொற்றைக்கொம்புடைய விநாயகனென்னும் யானையை யீன்றருளிய பெட்டையானையையும், அன்பர்களுடைய ஹிருதயதாமரையிலே சஞ்சரிக்கப்பட்ட இளமையுள்ள பெண்ணன்னப்பட்சியையும் ஒத்த உமாபரமேஸ்வரியை, மனதினாலேநினைத்து, வாக்கினாலேதுதித்துக் காயத்தினால் வணங்குவாம். எ-று. (உ)

வேறு.

## விக்கினேசுரர்-துதி.

மறைமுடிக்கரியவெங்கோன் வளர்சடைத்தரங்கநீரை
முறைமுறைபுழைக்கரத்தான் முகந்துவிண்ணவர்கண்மீது
நிறைகமழ்பூப்பத்தூவும் நெடுமதக்களிநல்லியானை
நறைகமழ்கமலத்தாளை நாடொறுமிறைஞ்சல்செய்வாம்.

(எ-து.) வேதத்தினுடைய சிரசுக்கு அருமையான பரமேஸ்வரனுடைய சடையிலிருக்கப்பட்ட கெங்காஜலத்தைத் துவாரம்பொருந்திய நீண்டதுதிக்கையினாலே அடிக்கடி முகந்துகொண்டு கூட்டமான தேவர்கள்பேரிலே நிறைந்த சந்தோஷமுண்டாக விரைக்கப்பட்ட கெம்பீரமதமுள்ள யானையாகிய நல்ல விக்கினேஸ்வரருடைய வாசனைபொருந்திய பாதாரவிந்தங்களைத் தினந்தோறு மிறைஞ்சுவாம். எ-று. (ங)

## சுப்பிரமணியர்-துதி.

காவிசெங்கமலமாம்பல் செழுங்குமிழ்காந்தளென்னும்
பூவொடுவெழுங்குமென்ற புனத்துறுமொருகொடிக்கு
மேவுநன்னிழல்செய்து வேங்கையந்தருவாய்நின்ற
கோவையம்பிகைப்பயந்த குமரனையிறைஞ்சல்செய்வாம்.

(எ-து.) கண்ணாகிய நீலப்பூவும், முகமாகிய செந்தாமரைப் பூவும்,வாயாகியகுமுதப்பூவும், நாசியாகியகுமிழம்பூவும், கையாகியகாந்தட்பூவும், என்று சொல்லப்படுமிவைகளை உறுப்பாகக் கொண்டு விளங்கிய வள்ளியம்மனென்னு மொருபூங்கொடிக்கு இத்தினைப்புனத்தில்நல்ல நிழல்பொருந்த வேங்கைவிருக்ஷமாக நின்றவரும், பெண்ணாகிய பார்வதியம்மனாற் பெற்றவருமாகிய குமாரசுவாமியை நமஸ்காரம் பண்ணுவாம். எ-று. (௪)

வேறு.

## திருஞான சம்பந்த சுவாமிகள்-துதி.

நீறடங்குண்டிடுஞ் சிறியவென்புபோய்
நானமென்குவிமுலை நாரியாகவோர்
பானலம்பொருவுசொற் பதிகம்பாடிய
ஞானசம்பந்தனை நாடிவாழ்த்துவாம்.

(எ-து) நெருப்பானது பற்றிவெந்த சாம்பலான எலும்பு போய்க் களபமணிந்த மிருதுவான குவிந்த தனவாரத்தை யுடைய ஒரு பெண்ணாக அமிர்தம்போன்ற நலமானசொல்லைப் பொருந்தியதிருப்பதிகம்பாடியருளினதிருஞானசம்பந்தமூர்த்தியை நோக்கித் துதிப்பாம். எ-று. (௫)

## அப்பர்சுவாமிகள்-துதி.

அற்படுமிடத்தின னருளினாலொரு
கற்புணையாகமாக் கடல்கடந்தவர்
நற்பெயர்தன்னையே நவிறியுள்ளமே
பற்பலபிறவியாம் பரவைநீந்தவே.

(எ-து) இருள்பொருந்திய கண்டத்தினையுடைய பரமேஸ்வரனருளினாலே ஒரு கல்லைத் தெப்பமாகப் பெரிய சமுத்திரத்தைக்கடந்த அப்பர்தம்பிரானிட திருப்பெயரை நெஞ்சமே அனேக பிறவியென்னும் சமுத்திரத்தை நீந்திட நீ தோத்திரம் பண்ணிக்கொள். எ-று (௬)

## சுந்தரமூர்த்திசுவாமிகள்-துதி.

அன்றுவன் செங்கல்லை யம்பொன்னாக்கிய
தென்றமிழ்நாவலன் றீயவெவ்வினையுந்

துன்றியநலந்திகழ் தூயனுக்குவ
னென்றவனிணையடி யிறைஞ்சுவேனரோ.

(எ-து.) வலிமைபொருந்திய செங்கல்லெல்லாம் அன்று பொன்னாகப்பாடிய அழகுபொருந்திய தமிழ்ப்புலவனானசுந்தரப்பெருமானானவர் திமைபொருந்திய என்னையும் நன்மைவிளங்கப்பட்ட ஞானதேகமாக்குவரென்று அவரிரண்டு பாதங்களையுமிறைஞ்சுவேன். எ-று. (எ)

வேறு.

## மாணிக்கவாசகசுவாமிகள்-துதி.

முதிர்பெரும்புகழ் முத்தமிழ்மாறன்முன்
மதுரைவீதியில் மால்விடையூர்பவன்
குதிரையேறி வரக்கவிகூறிய
சதுரனொண்மலர்த் தாளையிறைஞ்சுவாம்.

(எ-து.) மேலான பெருங்கீர்த்தியை வாய்ந்த இயலிசை நாடகமென்னு முத்தமிழ்விளங்கிய பாண்டியன் முன்னே, மதுராபுரிவீதியில் மாலாகிய ரிஷபமேறி நடத்தப்பட்ட பரமேஸ்வரன் குதிரைமேலேறிவரத்தக்கதாக திருவாசகஞ் செய்தருளிய மாணிக்கவாசகருடைய பிரகாசமுள்ள மலர்போன்ற பாதத்தை நமஸ்கரிப்பாம். எ-று. (அ)

## வசவேசர்-துதி.

மல்லலம்புவி மீதுவளைந்துகொண்
டெல்லையின்றி யிருந்தசமணனு
மல்லகற்றி யருள்வசவேசனை
யொல்லையேத்தி யுளத்திருள்மாற்றுவாம்.

(எ-து.) வளப்பமான அழகிய பூலோக மெங்கும் வளைந்துகொண்டிருந்த எண்ணிலாத சமணமாகிய விருளைத் துறத்தியருளின வசவேசனைச்சீக்கிரமாகத் துதித்து மனதிலுள்ள அஞ்ஞானவிருளை நிவர்த்திப்போம். எ-று. (கூ)

வேறு.

## சானந்தகணேசர்-துதி.

அத்தியினகன்றமா நிரையத்தாழ்ந்துளோர்க்
கெத்தவத்தோர்களு மெய்தொணாததோர்
முத்தியையுதவுசா னந்தமூர்த்தியைப்
பத்தியினொடுமிகப் பணிந்துபோற்றுவாம்.

(எ-து.) சமுத்திரத்திலும் விசாலமான பெரிய நரகங்களிலே அழுந்திக்கிடந்த பேர்களுக்கெல்லாம் அறியதவங்களைச் செய்தபேர்களு மடைதற்கருமையான மோக்ஷத்தைக் கொடுத்தருளிய சானந்த கணேசமூர்த்தியைப் பத்தியுடனே மிகத்தெண்டனிட்டுத் தோத்திரம் பண்ணுவாம். எ-று. (க0)

வேறு.

## திருத்தொண்டர்கள்-துதி.

நீக்கரும்பிற வித்தனைநீங்கவும்
போக்கில்லாதநன் முத்திபொருந்தவுந்
தேக்குமன்பிற் சிவசிவவென்னுமோர்
வாக்கையென்றும் வழுத்திவணங்குவாம்.

(எ-து.) விலக்கவரிதாகிய பிறவிபின்னலை நீங்கவும், அழியாத நல்லமுத்தியிலே சேர்ந்திருக்கவும், முதிர்ந்தவன்பினால் சிவசிவவென்னும் வாக்கையுடைய ஒப்பற்ற அடியார்களை வணங்குவாம். எ-று. (கக)

வேறு.

## அவையடக்கம்.

மேலுயர்மதியுட னாடவேண்டியோர்
பாலகன்விளித்திடும் பான்மைபோலுமால்
ஞாலமேழ்புகழ்கண நாதன்மாக்கதை
வாலறிவொன்றிலேன் வழுத்தநின்றதே.

(எ-து) உயர்ந்த ஆகாசத்திலிருக்கப்பட்ட சந்திரனுடனே விளையாடவேண்டி ஒன்றுமறியாத ஒருபிள்ளையானது அழைத்தவிதம்போலாகும் ஏழுலோகமும் புகழப்பட்ட சானந்தகணநாதருடைய மகாகதையை மெய்யறிவில்லாத நான் பாடத்தொடங்கினது. எ-று. (கஉ)

விடந்தனையமுதென மிசைந்தகோனரு
ளடைந்தசானந்தனோ ரறிவிலேன்சொலின்
நடந்திடுபுன்மையும் நன்மையென்றுகொண்
டுடன்படுமெனவவன் கதையையோதுகேன்.

(எ-து.) ஆலகாலவிஷத்தை யமுதமாகக்கொண்ட பரமேஸ்வரனருள்பெற்ற சானந்தகணேசுரர் ஓரறிவுமில்லாத வென்னுடைய சொல்லிலே உண்டான களங்கங்களையும் நன்மையாகக்கொண்டருளுவரென்று அவர்கதையைச்சொல்லப் புகுந்தேன்.

பாயிரம் - முற்றிற்று.

---

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்.

# புராணவரலாறு.



தாதவிழ்மலர்பொழி தருநிறைந்ததோர்
கோதறுநைமிச வனத்திற்கூடிய
போதமாமுனிவரர் புகலருந்தவ
சூதனைநோக்கிமற் றினையசொல்லுவார்.

(எ-து.) மகரந்தங்களுதிராநின்ற புஷ்பங்களைப் பொழியும் விருக்ஷங்கள் நிறைந்தலப்பிலாதகுற்றமற்ற நைமிசாரணியவனத்திலே கூடியிருக்கப்பட்ட ரிஷிகளெல்லாம் சொலற்கரிய தவசிரேஷ்டராகிய சூதமகாரிஷியைப்பார்த் திதனைச் சொல்லுவார்கள். எ-று. (க)

கண்ணுதலெம்பிரான் கதைகள்யாவையு
முண்ணயங் தெங்களுக் குதவல்செய்தனை
யண்ணனன்மாதவ ஹரிதேவருக்
கெண்ணரும்பரமனே யிலையென்றோர்ந்தனம்.

(எ-து.) நெற்றிக்கண்ணையுடைய பரமேஸ்வரனது கதைகளெல்லா மெங்களுக்கு மனது சந்தோஷமாகச் சொன்னீர், சூதமகாரிஷியே விஷ்ணுமுதலான தேவர்களுக்கெல்லாம் எண்ணுதற்கரிதாகிய பரமேஸ்வரனே மேலான கர்த்தாவென்று அறிந்துகொண்டோம். எ-று. (௨)

கயல்விழிப்பிறைநுதற் கன்னிபாலுறை
புயனிகர்கண்டனுக் கன்புபூண்டிடு
மயலறுமினியசா னந்தமாதவ
னுயர்கதைகேட்கவெம் முள்ளத்தெண்ணினேம்.

(எ-து.) மீனைப்போன்ற கண்ணும், பிறைபோன்ற நெற்றியுமுள்ளபார்வதிதேவி,பக்கத்திலுறைந்தமேகம்போன்ற கண்டத்தையுள்ள பரமேஸ்வரனுக்கு அடிமைபூண்டுமயக்கங்களையெல்லாமறுத்த சானந்தமகாரிஷியினுடைய கதையைக்கேட்கவேணுமென்று எங்களுடையமனதில் நினைத்தோம். எ-று. (௩)

அன்னவனியமபுர மடைந்ததன்மையும்
பன்னருநிரையமுற் றழுந்தும்பாபரை

யின்னலில்சிவபுரத் திருத்துநீர்மையு
முன்னருளாலெமக் குரைத்தல்வேண்டுமால்.

(எ-து.) அந்த சானந்தமகாரிஷி இயமலோகத்திற்குப் போனவிருத்தாந்தமும் அவ்விடத்தில் சொல்லுதற்கரியதாயிருக்கும் நரகங்களில் விழுந்தழுந்திக்கிடந்த பாவிகளையெல்லாம் துக்கமில்லாதசிவலோகத்தி லடைவித்ததன்மையும் சூதமகாரிஷியேயெங்களுக்கு அருள் செய்யவேணுமென்றார்கள். எ-று. (௪)

அக்கதைகேண்மினென் றுசையானது
மிக்கெமையீர்த்தது விளம்புவாயெனப்
புக்குறுசவுனகா தியற்குப்போதனை
யொக்கநற்புராணமா முனிவனோதுவான்.

(எ-து.) அந்தச்சானந்தமகாரிஷியின்கதையைக்கேளுங்களென்று விருப்பமானது மிகவுமெங்களைத்தூண்டுகின்றது, தேவரீர் சொல்லவேண்டுமென வந்தடைந்தநைமிசாரணியத்திலிருக்கும் ரிஷிகள் நாற்பத்தெண்ணாயிரவர்களுக்கும், பதினெண்புராணமும் போதிக்கவல்லவராகிய சூதமகாரிஷியானவர் சொல்லுகிறார். எ-று. (௫)

புராணவரலாறு முற்றிற்று.

---



உ
கணபதிதுணை.




திருச்சிற்றம்பலம்.

## உற்பத்திச் சருக்கம்.

ஆரணருரைக்குமெட் டாதிருந்திடுங்
காரணமுணர்ந்தவர்க் காதலாவுறுஞ்
சீரணிபதரிகாச் சிரமந்தன்னிலோர்
பூரணவித்தெனும் புனிதன்வாழ்ந்தனன்.

(எ-து.) வேதவாக்கியத்துக்கும் எட்டாமலிருக்கப்பட்ட மூலகாரண கர்த்தாவாகிய பரமசிவனையறிந்த பெரியோர்களெல்லாம் ஆசையுடனே சேர்ந்திருக்கும் அழகான பதரிகாசிரமத்திலே பூரணவித்தென் றொருபெயரையுடைய தூயவன் வாழ்ந்து கொண் டிருந்தான். எ-று. (க)

அத்தவன்பெருமையை அனந்தனென்றுள
வித்தகன்விளம்பினும் விளம்பவொண்ணுமோ
வுத்தமநல்லற முடம்புமெய்ச்சிவ
பத்தியாருயிரெனப் படைத்தமேன்மையான்.

(எ-து.) தவமுள்ள அந்தப்பூரணவித்து என்னும் மகாரிஷியின் பெருமையை ஆதிசேஷனாகிய விற்பன்னனால் சொன்னாலுஞ் சொல்லி முடியுமோ, உத்தமமானநல்லதர்மங்களெல்லாஞ் சரீரமாகவும் சிவபத்தியே தனக்குப்பொருந்திய சீவனாகவும் படைத்த மேன்மையுள்ளவர். எ-று. (உ)

அருமறைநான்குமா றங்கமுங் கெடா
உரனருள்புராணமீ ரொன்பதுந்தவ
வரர்புகழாகமப் பரப்புமற்றவுங்
கரதலநெல்லியி னுணர்ந்தகாட்சியான்.

(எ-து.) அந்தப்பூரணவித்து மகாரிஷியானவர் அரிதாகிய நாலுவேதமும் ஆறுசாத்திரமும் அழியாதஞானந்தரப்பட்ட பதினெண்புராணமும் தவசிரேஷ்டர்கள்புகழும் இருபத்தெட்டாகமமும் மற்றவனைத்தும் உள்ளங்கைநெல்லிக்கனிபோலக்கற்றுணர்ந்த காட்சியையுள்ளவர். எ-று. (ங)

அதிகமாலயன்முத லாருயிர்க்கெலாம்
பதிசிவனேயென நினைவிற்பற்றியே

சிதைவிலனவனிரு செம்பொற்றுண்மல
ரிதையதாமரைமிசை யிருத்துமன்கினன்.

(எ-து.) உயர்வாகிய விஷ்ணுமுதலிய பசுக்களுக்கெல்லாம் உயர்ந்தவர் பரமசிவனே என்று நினைவில்மாறாமல்கொண்டவர் அப்பசுபதியினது உடையதிருவடிப்பொற்றாமரையை இருதைய கமலத்திலிருத்தும் அன்புடையவர். எ-று. (ச)

மயலறுமைவகை மகனெனப்படும்
பயிரிடைவருமுயர் பயனைப்பெற்றுளான்
வியன்மிகுகடலுடைப் புவியின்மேவிய
வுயிரெலாந்தன்னுயி ரொக்கவோம்புவான்.

(எ-து.) மயக்கமறுக்கும் * ஐந்துவகையாகமென்னும்பயிரினிடத்தேவரப்பட்ட அதிகபலனைப்பெற்றவர், விரிவானசமுத்திரஞ் சூழ்ந்த பூமியினிடத்திலேயிருக்கு முயிரையெல்லாந் தன்னுயிர்போலக் காக்கப்பட்டவர். எ-று. (ரு)

புலனெறியறிவினைப் போக்கல்செய்திடாத்
தலைமைபெற்றுடையவன் றனையடைந்தவன்
சூலைவறத்தவநெறி யுதவும்பான்மையா
னலகில்பேரருட்கட லாயபண்பினன்.

(எ-து.) ஐம்புலன்வழியிலேதன்னுடையபுத்தியைப்போகவிடாமல் நிறுத்தியமேன்மைபெற்றவர் தன்னைவந்தடைந்தபேர்களுக்குச் சஞ்சலம்நீங்கத் தவசுசெய்யும் வழியைக் கற்பிக்குங் குணமுள்ளவர் மிதமில்லாதகிருபைக்கடலாகியபண்புள்ளவர்.()

விரதமெய்ப்பூரண வித்தென்றோதுமவ்
வரமுனிக்கினியவில் வாட்கைக்கேற்றிடு
முரியவள்கற்பினுக் கொப்பிலாள்பெயர்
தரைபுகழ்பத்திர தத்தையாமரோ.

(எ-து.) மெய்யாகிய சிவவிரதங்களைப்பூண்டபூரணவித்தென்றுசொல்லப்பட்டஅச்சிறந்தமுனிவருக்குஇனிமையானவில்லறவாட்கைக்குரியஒப்பிலாதகற்பினையுடையமனைவியின்பெயரை பெரியோரால் பத்திரதத்தையம்மையென்று சொல்லுவர். (எ)

அருந்ததியுடனன சூயையாதியாம்
திருந்திழையார்களுஞ் செப்பத்தக்கதோ

---

* ஐந்து சிவயாகங்களாவன:—சிவனையே குறித்துச்செய்யுந்தவமும், சிவனையே அர்ச்சிக்குஞ் சிவபூசாகர்மமும், சீருருத்திரபிரணவ பஞ்சாக்ஷர முதலானசெபமும், சிவவடிவங்களையே நினைக்குந்தியானமும், சிவாகமத்தின் பொருளையே அறியும் ஞானமுமாம்.

ரிருந்தவமுடையவ ளிறைவனுனதன்
பெருந்தவனேயுயி ரென்னப்பெற்றுளாள்.

(எ-து.) அருந்ததியுடனே அனசூயை முதலான பெண்க ளெல்லாருங் கொண்டாடத்தக்ககற்புள்ளவள், ஒப்பிலாதபெரு மையையுடைய பூரணவித்து மகாரிஷியேதன்னுடைய சீவனெ னப்பெற்றவள். எ-று. (அ)

கொழுநனைவன்சினங் கூறநேக்கினே
ருழுவையாயுதிப்பரென் றுன்னித்தான்றினந்
தொழுதெழுமிறையவன் முனிந்துசொல்லினும்
வழுவறுமுளத்திடை மகிழ்வுகூர்வளால்.

(எ-து.) புருஷனை கடுங்கோபங்கொண்டுபார்த்தஸ்திரீகள் புலியாகப் பிறப்பார்களென்றறிந் ததைநினைத்து தினந்தோறும் தான் பணியப்பட்ட புருஷனவர் கோபித்துச் சொன்னலும் தவறில்லாததன்மனதினிடத்தேசந்தோஷங்கொள்ளுவாள் எ-று

மாறிநின்றுத்தரஞ் சொல்லிவைதவர்
சீறிடுங்கொள்ளிவா யாகிச்சீரிழந்
தீறிலாதுழல்வரென் றெண்ணிக்கோனெடு
பேறுறத்தொழுதுமென் மொழிகள்பேசுவாள்.

(எ-து.) புருஷனுக்கெதிராக நின்றுகொண்டு உத்தரஞ் சொல்லிவையப்பட்ட பெண்கள் சீறப்பட்ட கொள்ளிவாய்ப்பி சாசமாகிச் சிறப்புகெட்டு வெகுநாளைக் குழலுவார்களேயென் றெண்ணித்தன் பதியுடனேபிறவிப்பயனையடையவேண்டி வண ங்கி இனியவார்த்தைக்கொண்டு வேசுவள். எ-று. (க0)

பேசருங்கணவர்முன் கிடந்தபெய்வளைப்
பாசிழைமடந்தையர் பாந்தளாகிமற்
றேசுறுமுழைகளிற் கிடப்பரென்றுதன்
னேசமோடிறைவரி லெழுந்து நிற்பளால்.

(எ-து.) புருஷனுக்கு முன்பாகக் காலைநீட்டியும் படுத்துக் கொண்டுமிருந்த வளையலணிந்தபெண்கள், பெரும்பாம்பாகப் பிறந்து குகையிலே கிடப்பார்களென்று தன் புருஷன் வந்தால் அன்புடனே யெழுந்து நிற்பாள். எ-று. (கக)

மேவியதன்பதி யன்றிவேறெருரு
தேவுளதெனுமுறை சிந்தையுட்கொளா

ளாவியாங்கணவனைத் தூற்றுமாய்வளைப்
பாவையரானனம் பார்க்கக்கூசுவாள்.

(எ-து.) பொருந்திய தன் புருஷனே தனக்குத் தெய்வமல்லாமல் வேறு ஒருதெய்வமுண்டென்னும்வார்த்தையைதன்மனதிலேயுட்கொள்ளாதவள், சீவனுனதங்கள்புருஷரைத் தூறுசொல்லப்பட்ட பெண்களுடைய முகத்தைப்பார்க்கக் கூசுவாள். ()

இத்தகைச்செயலுட னியையும்பத்திர
தத்தையுஞ்செயற்கருந் தவத்துப்பூரண
வித்தெனுமுனிவனும் வேறெனுதுநெஞ்
சொத்துநன்மனையறத் தொழுகுநாளிலே.

(எ-து) இந்தப்பெருமையானநடக்கையுடனேஒப்புரவான பத்திரதத்தையம்மையும் ஒருவராற்செய்ய வருமையானதவத்தையுள்ள பூரணவித்தெனுமுனிவரும்பேதமில்லாமல், ஒருமனதாகவிருந் திருவரு மில்லற தர்மத்தில் நடந்துவருகிறநாளையில்.

என்னனைபத்திர தத்தை யென்பவள்
மன்னியசீருடை மகவிலாமையால்
தன்னுளமென்னுடல் சாம்பித்தன்னுயிர்
மன்னனையிணையடி வணங்கிக்கூறுவாள்.

(எ-து.) என்மாதாவாகிய பத்திரதத்தைஅம்மையானவள் நிலைபெற்ற சிறப்புடைய புத்திரனில்லாதபடியினுலே தன்மனதைப்போலத் தன்சரீரமும் மெலிந்துபோய் தன்னுடைய பிராணநாயகரான பூரணவித்து மகாரிஷியினது இரண்டுபாதத்தையும் வணங்கிச் சொல்லுவாள். எ-று. (௧௪)

வேறு.

இந்துவானதி யிலைச்சியசெஞ்சடையிறைவ
*னந்துசீர்பல வளித்தனனருளொடுமெமக்கு
மைந்தனீந்தில னன்னதைமரபொடுமதித்து
நொந்துநொந்தயர் கின்றதென்சிந்தனை நுடங்கி.

(எ-து.) சந்திரனையும், கங்கையையும், தரித்தருளிய சிவந்த சடையினையுடைய பரமேஸ்வரன்மிக்கசெல்வத்தையும் சிறப்பினையுங்கொடுத்தவர் கிருபயோடு நமக்கு ஒருபுத்திரனைத் தயவு பண்ணவில்லை அதனுல்குலம்விளங்கவேணுமேயென்று யோசித்துஎன்சிந்தையானதுவாடிநொந்து நொந்திளைக்கின்றதென்றுள்.

---

*நந்து செல்வம்.

தாதுலாவுசெங் தாமரையிலாதபைந்தடமும்
சோதிதந்தவெண் கலைமதிதோன்றிடாவிரவும்
போதிலாதுசெய் திடுமுயர்பூசையும்பொருவு
மாதரந்தரு நன்மகவின்மையாமகமே.

(எ-து.) தாதுப்பொடிகள்விளங்கப்பட்டசிவந்ததாமரைக ளில்லாத தடாகம்போலும்,வெள்ளையானகாந்திதரப்பட்ட கலை யுள்ள சந்திரனில்லாத இராக்காலம்போலும், புஷ்பமில்லாமற் செய்யும்உயர்ந்த பூசையைப்போலும்இருக்கின்றதுபிரியங்கொ டுக்கும் நல்ல பிள்ளைகளில்லாத வீடுகள். எ-று. (௧௬)

மகவிலாதவற் குயர்கதியிலையெனமறைநூல்
புகலுகின்றது முருகனையீன்றநம்புனித
னகமகிழ்ந்துமைந் தனையளித்தருளுவனருளா
லிகலின்மாதவஞ் செய்திடப்போதிரென்றிசைத்தாள்.

(எ-து.) புத்திரனில்லாதபேருக்கு மேலான கதியில்லையெ ன்று வேதங்கள்சொல்லுகின்றது, சுப்பிரமணியரைப்பெற்றநம் மிட பரமேஸ்வரன் மனது சந்தோஷமாய் நமக்குப்புத்திரனைத் தயவு பண்ணுவார், நீரிப்போது அன்புடனே நிலைபெற்ற தபசு பண்ணப்போமென்றுபூரணவித்துமகாரிஷியுடனே சொன்னாள் பத்திரதத்தை யம்மை. எ-று. (௧௭)

என்னுமாற்றமங் குரைத்தலுமேந்திழைகேட்டி
யொன்னலார்புர மெரித்தவனுமைக்கொருதலைவன்
உன்னருங்கொடைக் கிறையவன்கொடாததொன்றுளதோ
பன்னியென்றெலா முணர்ந்தருள்முனிவரன்பகரும்.

(எ-து.) இப்படிக்கொத்த வார்த்தையைப் பத்திரதத்தை யம்மைசொல்ல, முனிவர் தன்பெண்சாதியைப்பார்த்துகேளும் பெண்கள்நாயகமேசத்துருக்களுடைய திரிபுரத்தையெரித்தவர் உமாபரமேஸ்வரிக்கு நாயகரானபரமேஸ்வரர், நினைக்கவரிதான கொடைகளுக் கதிபதியா யிருக்கின்றவர்,அவர்கொடாததொன் றுண்டோ, வருந்தாதேயென்றுமனைவிசொல்லியயெல்லாமறிந்த முனிவர் சொல்லுகின்றார். எ-று. (௧௮)

அரியமாதவ நிதிகளைத்தனபதிக்களித்தான்
பொருவிலிந்திரற் களவறுபோகமீய்ந்தனனாற்
பரவுசீதரற் கருளினன்சக்கரப்படையை
விரவுமும்பருக் குதவினன் மேருமால்வரையே.

(எ-து.) அரிதானசங்கநிதிபத்மநிதியென்றுசொல்லப்பட்ட புதுமையுள்ள திரவியபொக்கிஷத்தைக் குபேரனுக்கும், ஒப்ப ற்றதேவேந்திரனுக்குஅளவற்றவைபவங்களையும்,பூசிக்கப்பட்ட விஷ்ணுவுக்கு சக்கிராயுதத்தையும்கூடிய தேவர்களுக்குமகாமே ருவையும் கொடுத்தார் பரமேஸ்வரர். எ-று. (௧௯)

அருள்விநாயகற் களித்தனன்விஞ்சைகளனைத்து
மிரதிமாதினுக் குதவினனெழிலுடைமதனை
வரனெடுஞ்சடை தனிலிடங்கொடுத்தனன்மதிக்கன்
ஒருருசுவேதனுக் குதவினனுயர்பதந்தனையே.

(எ-து.) கிருபையுள்ள விநாயகமூர்த்திக்குச் சகலவித்தை களையும், அழகுடையரதிதேவிக்கு இறந்துபோனமன்மதனைவர வழைத்தும்,தன்னுடையநெடியசடையிலேயிருக்கச் சந்திரனுக் கு இடமும், முன்னொருசுவேதனுக்கு மேலான பதவியையுங் கொடுத்தார், பரமேஸ்வரர். எ-று. (௨௦)

இன்னுமாங்கவ னளித்தனனியாமிவணிருந்து
பன்னினலவை முடியுமோபனிமதிச்சடையோன்
றன்னருந்திரு வருளினியானினைத்ததுந்தருவ
னென்னவோதியே மனையிடைப்பன்னியையிருத்தி.

(எ-து.) இன்னம் அந்தப் பரமேஸ்வரன் கொடுத்தருளி யதை நாமிங்கேயிருந்துசொன்னாலுமதுதொலையுமோ, குளிர்ந்த சந்திரனைத்தரித்த சடாமகுடத்தையுடைய பரமேஸ்வரன் தம் முடைய திருவருளினாலே நாம் நினைத்த காரியந் தருவாரென்று சொல்லி மனையினிடத்திலே தன்பெண்சாதியானபத்திரதத்தை யம்மையை வைத்து. எ-று. (௨௧)

கண்ணுதற்பிரா னிமையவற்கரியநங்கடவு
ளண்ணல்சேவடிக் கமலமீதுளந்தனையமைத்து
நண்ணருந்திரைக் கடலுடைநங்கைசெய்தருளும்
புண்ணியந்தனை யொத்ததோர்வனத்திடைபுகுந்தார்.

(எ-து.) தேவர்களுக்கும் அருமையான நமதுதேவனாகிய நெற்றிக்கண்ணுள்ள கர்த்தாவான பரமேஸ்வரனுடையபாதகம லத்திலே மனதைவைத்து சொல்லுதற்கரிய அலையுள்ள சமுத் திரத்தை யுடையாகத் தரிக்கப்பட்ட பூமிதேவிபண்ணிய புண் ணியம்போலதழைத்தவொருவனத்திலேதவஞ் செய்யப்போய்ப் புகுந்தார். எ-று. (௨௨)

குலவுஞனிலத் துள்ளனதருக்களுங்கொடியும்
பலநிறைந்திடு புதற்களும்பிறவுமிப்படிமே
விலகியோரிடத் திருந்திடவேண்டுமென்றெண்ணி
மலரினான்முகம் படைத்ததொத்திருந்ததவ்வனமே.

(எ-து.) பூரணவித்துமகாரிஷி தபசு செய்யப்போன வனமானது பூலோகத்திலுண்டான விருக்ஷங்களையும், கொடிகளையும், பலசெடிகளையும்மற்றுமுண்டானபலவளப்பங்களும்நெருங்கி நிறைய ஓரிடத்திலேவர்த்தித்திருக்க வேணுமென்றெண்ணி பிரமதேவனானவன் சிருஷ்டித்து வைத்ததுபோலவிருந்தது. ()

சித்திரக்கொழும்பிடவுகள் சிறப்புறநிரையே
மொய்த்ததண்மலரொடுமிக முடிவிலாதுறைத
லத்தனித்திருவனத்தற மகளிர்பார்த்தருள
நித்திலத்தினிற்புரிநிலைத் தேர்களைநிகர்க்கும்.

(எ-து.) அழகான செழிப்புள்ள பிடவ விருக்ஷங்கள் அங்கு சிறப்புடனே வரிசையாக மொய்த்திருக்குங்குளிர்ச்சியானபூக்களோடே முழுதுநிறைந்திருப்பது அந்த வொப்பில்லாதவனத்தினுடைய அலங்காரத்தை ரம்பாஸ்திரீகள் ஏறிப்பார்க்கவேண்டி முத்தினாலேசெய்த நிலைத்தேர்களைப் போலிருக்கிறது. எ-று. ()

காந்திபெற்றுமேலெங்கணுங் கவினுறத்தளிர்த்த
மாந்தருத்தலையிடையொரு தோகைதான்வதிதல்
சேர்ந்ததீயிடைகுளித்திடு காலையச்செழுந்தீ
யேந்திநின்றருள்சீதையை நிகர்த்திடுமியம்பில்.

(எ-து.) அந்தவனத்திலே சிவப்பான காந்தியைப்பெற்று மேலெங்குமழகுபொருந்தித் தளிர்கள்குழைந்திருக்கும்மாமரத்துச்சி நடுவே யொரு தோகை மயிலிருப்பது சீதா தேவியாரை சிறைமீட்டி நெருப்பிலே முழுகிவாவென்று ஸ்ரீராமர் சொன்னபோது அந்தத் தேவியார் சிவந்த தீயினிடத்திலே முழுகின காலையில் அந்தச் செழிப்பான அக்கினி அந்த வம்மனையேந்திக் கொண்டு நின்றதுபோல விருந்தது. எ-று. ([illegible])

விண்புக்கோங்கிய தருக்களின் வெண்மலர்வீழ்ந்து
தண்பெற்றீர்ந்தளிர்நிழல்களிற் றகையுறக்கிடத்தல்
நண்புற்றேவனம்பார்த்திட நண்ணுமாதவர்க்கு
வெண்பட்டாதனம்விரித்திடுந் தன்மையின்விளங்கும்.

(எ-து.) ஆகாசமளவும் புகுந்தோங்கிவளர்ந்த விருக்ஷகங்களிலே பூத்திருக்கும் வெள்ளையான புஷ்பங்கள் குளிர்ந்ததளிரு

ள்ள மரத்தினிழல்களிலே உதிர்ந்து கிடக்கிறது ஆசையோடு அந்த நந்தனவனம்பார்க்க வேண்டிவரப்பட்டமகாரிஷிகளுக்கு வெள்ளைப்பட்டாலாசனம்விரித்ததுபோலவிளங்கியது. எ-று. ()

சாலவேமலர்ந்திடுநறும் பலாசமென்றருவி
வேலமாகிய பசுங்கொடி படர்ந்துமேலிலங்கல்
வாலபானுந்தன்மிசையொளிர் மரகதமணிமா
மாலைபற்பலபுனைந்து வீற்றிருந்திடல்மானும்.

(எ-து.) பின்னையும் அந்தவனத்திலே மிகுதியாகப்புஷ்பங்கள் மலர்ந்திருக்கப்பட்டமிருதுவானவாசனையுள்ளபுன்முருக்கமரத்தின்மேலே படர்ந்த பசுங்கொடிகள், விளங்குகிறதுஇளஞ்சூரியனானவன் தன்சரீரத்தின்மேல் பெருமையுடனே பிரகாசிக்கிற மரகதமணிமாலைகளனேகந்தரித்துக்கொண்டுவீற்றிருக்கின்றதுபோல விருந்தது. எ-று. (உஎ)

மலர்நிறைந்திடுகொன்னி காரமுமதின்மருங்கே
யிலைசிறந்ததோர்புன்னையு மிணைந்துநின்றிடுதல்
துலைவில்நான்மறைவேதனும்முகுந்தனுந் தொடர்போ
டிலகியோரிடத்தெய்திவீற் றிருந்திடல்பொருவும்.

(எ-து.) புஷ்பங்கள் நிறையப் பூத்திருக்கப்பட்டகோங்குமரமு மதன்பக்கத்திலேயிலைகள்தழைந்தவொருபுன்னைமரமும் இணைந்து நிற்றலானது முடிவில்லாத நான்குவேதத்தையுடைய பிரமதேவனும், மஹாவிஷ்ணுவுஞ் சிநேகத்தோடே தங்கள் பொன்னிறமும் பச்சைநிறமும் பிரகாசிக்க வோரிடத்திலேகூடி வீற்றிருந்ததுபோல விளங்கியது. எ-று. (உஅ)

திசையில்யோசனை கமழுமிவ்வனத்திடைசெறிவி
லிசைபொருந்தளிப் படலம்வந்திடுமெழினோக்கி
வசையில்விண்ணிடை நடந்ததண்முகிலெனமதித்து
நசையொடுஞ்சிறை விரித்தருந்தோகைகணடிக்கும்.

(எ-து.) பின்னையும் எட்டுத்திசையிலேயு மொருயோசனை அந்தத்துக்குவாசனைபரிமளிக்கப்பட்டஇந்தவனத்தில் கீதம்பொருந்திவண்டுக்கூட்டங்களிடந்தேடிவரும்அழகைப்பார்த்துநிர்மலமான வாகாசத்திடத்தே தவழுங்குளிர்ச்சியுள்ளமேகமெனவெண்ணிஆசையுடனே சிறகைவிரித்துக்கொண்டு அரிதானமயில்களாடும். எ-று. (உகூ)

தரித்தசீரிளங்கழைமிசை தனிக்குயிலொன்று
திருத்தமாகவேநின்றுகூ வுதன்மிகுசிறப்போ

டருத்திபெற்றிடுமோங்குறு கம்பமீதாட
வொருத்தியேறியேகாண்மினென்றிறைத்திடலொக்கும்.

(எ-து.) அழலினால்தகிக்கப்படும்போது மூங்கிலின்மேலே யொப்பில்லாத இளமைதங்கிய வொரு குயிலானது திருத்தமாகவிருந்துகொண்டுகூவுகிறது ஒருதொம்பரப்பெண்ணவள் மிக்க சிறப்போடு களரியில் நட்டிருக்கும் கம்பத்தின்பேரிலேறி ஆடப்போவதை எல்லாரும் பாருங்களென்று ஆசையுடன் கூப்பிடுதல்போலவிருந்தது அந்தவனத்தில். எ-று. (௩0)

மீதுயர்ந்திடுநெட்டிலையிருப்பையின் விரைகொள்
போதனந்தம்வீழ்ந்தெங்கணும் பொலிவுறக்கிடத்தல்
ஆதவன்பொருதுடுக்கண மன்னிரைபொழிலின்
சீதம்வேண்டிவந்தொளியொடு திகழுதல்பொருவும்.

(எ-து.) மேலேயுயர்ந்து வளர்ந்து நீண்ட இலைகளையுள்ள இலுப்பைமரத்திலிருக்கப்பட்ட வாசனையுள்ள புஷ்பங்களுதிர்ந்தெங்கும் பொலிவுடனே கிடைக்கிறது சூரியனது உஷ்ணம்பொறுக்கமாட்டாமல்நட்சத்திரக்கூட்டங்களெல்லாம்நிறைந்து அந்ததோப்பிலேகுளிர்ச்சிவேண்டிவந்து பிரகாசத்துடனே விளங்கினதுபோலவிருந்தது. எ-று. (௩௧)

நெடுவிசும்புதோய்கோளியாமாசினிநிரையிற்
குடமெனும்படி தூங்கியநறுங்கனிகுலவல்
வடுவின்மைந்தர்பாலுளத்தினிற் குழைவொடுமறுவிக்
கடினமானது காட்டியதந்தையறகடுக்கும்.

(எ-து.) உயர்ந்த ஆகாசத்தையளாவிய பூவில்லாமல்காய்க்கும் பலாமரங்களில்வரிசையாகக்குடங்களென்று சொல்லும்படிக்குஅசைவில்லாம லுறங்கிக்கிடக்கிறமணமுள்ளபலாப்பழங்கள் விளங்குவதுகுற்றமில்லாத பிள்ளைகளிடத்தில்மனதுக்குள்ளேபக்ஷத்துடனேகூடி வெளியே கோபத்தைக்காட்டிக்கொண்டிருக்கும் தகப்பனைப்போல அந்தப் பலாப்பழங்களுள்ளே கனியும் மேலே முள்ளுமாயிருக்கின்றது. எ-று. (௩௨)

வான்றொடப்படர்ந்தெழுந்துமே வளர்ந்ததேமாவி
னூன்றபொன்னிறப் பைங்கனித்தன்மையையறையி
லேன்றவன்கடினந்தனை யுள்ளுறவிருத்தித்
தேன்றரும்படி யொழுகிடுவாறெனத்திகழும்.

(எ-து.) மேகமண்டலத்தை யளாவி கிளைத்தெழுந்துவளர்ந்தமதுரமுள்ளமாமரத்தில்நிறையக்காய்த்து பசும்பொன்னிற

மாகப்பழுத்த மாம்பழத்தின் குணமானது உண்டான கடூரத்தை மனதுக்குள்ளே யிருக்கவைத்துவெளியிலேதேனைப்போல ருசிக்கும்படி யிங்கிதம் பேசிக்கொண்டு வாழ்பவர்களைப்போல மாம்பழமானது உள்ளே துவர்த்த கொட்டையும் மேலேயினிப்புமாயிருக்கின்றது. எ-று. (௩௩)

மாதவிக்குலம்போதலா தளவின்மாவகுளம்
பாதிரித்தொகைமாதளை பணைவழைமாவுந்
தாதகித்திரள்புன்னையால் சண்பகந்திலகஞ்
சீதளப்பலாமுதலிய செறிந்ததவ்வனமே.

(எ-து.) குறுக்கத்தியினம்புஷ்பத்திருப்பதுமல்லாமல் அளவற்ற மாமரங்களும் மகிழமரங்களும், பாதிரிமரங்களும் மாதளைப்புதர்களும், அரசமரங்களும், சுரபுன்னையும், குங்குமமரங்களும் ஆத்திவிருக்ஷங்களும், புன்னை, ஆல், சண்பகம், சிறுசண்பகவிருக்ஷங்களும், சீதளப்பலாமுதலான இன்னமனேக விருக்ஷங்களெல்லாம் நெருங்கி புஷ்பித்திருந்தது அந்தப்பூரணவித்து மகாரிஷி தபசுசெய்யப் புகந்தவனமானது. எ-று. (௩௪)

இன்னதன்மையின் விண்டொடவெழுந்தகானிடையே
நன்னதிப்புனல் பரந்தவேணியன்றிருநயன
மன்னபன்னமே பொதுளியதலரிவிற்புகறத்
துன்னருந்தனி வில்வநல்வனமுமொன்றுளதால்.

(எ-து.) இப்படிப்பட்டதன்மையுடன் மேகமண்டலத்தை அளாவி வளர்ந்திருந்த அந்த ஆரணியத்து நடுவே நல்ல கங்காஜலந் தவழ்ந்த சடையையுள்ள பரமேஸ்வரனிட திருநேத்திரம் போல் இலைகள் துளிர்த்ததாய் சூரியனது வெயிலும் நுழையமாட்டாத தாய் நினைக்கவரிதாகிய ஒப்பற்ற வொருவில்வவனமுண்டாயிருந்தது அதனை பூரணவித்துமகாரிஷிகண்டார்எ-று.

அந்தவில்வநல்வனத்திடை யவனியாமரிவை
யுந்தியொத்துளம் வழுவுதலிலாதகற்புடைய
சந்தமங்கையருள்ளமும் போன்றதுததுநீர்க்
கந்தநாண்மலர்பைந்தடங் கவினுறவிளங்கும்.

(எ-து.) அந்தவில்வ வனத்து நடுவே பூமிதேவியினுடைய உந்திக் கமலம்போன்ற ஒருதடாகம், அதில் தவறில்லாதகற்பும் அழகும் வாய்ந்த பெண்களது மனதைப்போல மாசற்றஜலமும் மணமுமுள்ள புதிய மலர்களும் பூத்து விளங்கியிருந்ததையுங் கண்டார், எ-று. (௩௫)

கரையினின்றவெண்மலரொடு கலந்தமந்தாரை
தருவளங்கெழுநிழல்செழும் புனலிடைதயங்கல்
வருமராத்தனே விழுங்கிடா வகைமதிமதித்துப்
பரையிலார்கலியுள்ளொளித் திருந்திடல்பொருவும்.

(எ-து.) அத்தடாகத்தின்கரையில்நிற்கிறவெள்ளைமலரோடுகூடிய மந்தாரை மரத்தின் நிழலானது செழிப்பானஜலத்தினிடத்தில் பிரகாசித்துத் தோன்றுவது, வருகின்றகேதுவென்னும் பாம்பானது தன்னைவிழுங்காத வகையையோசித்துக்கெடுதலில்லாத சத்தமுள்ள சமுத்திரத்தினுள்ளே சந்திரன்ஒளித்துக்கொண்டிருப்பதுபோல விருந்தது. எ-று. (௱எ)

திருந்தனங்கடாமரைகளிற் செறிந்துவீழ்ந்திடலும்
பொருந்தளிக்கணமெழுந் தெழுந்தப்புறம்போதல்
வருந்திமுற்பவத்தியற்றிய புண்ணியம்வருங்கா
லிருந்தபாவம்விட்டகன்றிடு மியல்பினையொக்கும்.

(எ-து) அழகிய அன்னப்பக்ஷிகளந்தத்தடாகத்திலே யிருக்குந் தாமரைப்பூக்களில் நெருங்கிவந்துவிழ முன்னந்தப் பூவிலிருந்த வண்டினங்களெழுந் தெழுந்து புறப்பட்டுப்போவது வருத்தப்பட்டு முற்பிறப்பில்செய்த புண்ணியபலன்வருங்காலத்திலே, யொருவரைத் துன்பப்படுத்திக்கொண்டிருந்த பாவமானது விட்டுப்போகிறதுபோல விருந்தது. எ-று. (௱அ)

மிகநலங்கிளரமுதமும் வெள்ளைவாரணமும்
புகலருங்களியரியு மேனகையுமர்ப்புதமு
மிகலிலன்புகொண்டருஞ் சிருமெய்த்திடலாற்
றகைமைபெற்றிடுதுறக்கமே யொத்ததத்தடமே.

(எ-து.) அமிர்தமும் வெள்ளையானையும் தேவேந்திரனும் மேனகையும் அதிசெயமும் பகையுமில்லாத அன்புகொண்டு வாழும் தேவர்கள் சொர்க்க லோகத்திலிருப்பதுபோல இந்தத் தடாகமானது மிகுதியான நலமுள்ளதண்ணீரும்வெள்ளைச்சங்கும் சொல்லுதற்கரிய சந்தோஷத்தையுள்ள வண்டுகளும் அங்கே வந்தபேர்களுக்கு மேலான நகைப்பும் அதிசயமும் மாறுபாடில்லாத பக்திகொண்டு பெறற்கரிய சிறப்பும்உண்டாதலினாலே பெருமைபெற்ற சொர்க்கத்திற்குச் சமானமாகவிருந்தது.எ-று.

உலைவின்முத்திதன்பான்மிகத் தோய்ந்தவர்க்குதவும்
நிலைகொள்வாவிபொற்றாமரை செறிவொடுநிகழ்த்த




விலைகளைப்பெரும்பாணிதான் பெற்றமைக்கேற்கு
மலைவிலாமுகம்படைத்தது போன்றதையன்றே.

(எ-து.) தன்னிடத்திலே அடுத்து முழுகினபேருக்கு அழிவில்லாத மோக்ஷத்தைக்கொடுக்குங்கிலைபெற்றவந்தப்பொய்கை பொற்றாமரை நெருக்கத்தோடேயிருப்பதுகங்கையொன்றிற்கே அனேக முகங்களுண்டானதுபோல, அளக்கவரிதானஜலத்தைத்தான் பெற்றதுக்கேற்ப அளவில்லா முகங்களைப் படைத்துக் கொண்டிருந்ததுபோல விருந்தது. எ-று. (௬௰)

சாற்றுமித்தடத் துளவளந்தனைமிகநோக்கிற்
றேற்றமோடுயர் பூரணவித்துவன்சிவனைப்
போற்றியன்பொடு கலந்திருந்தருந்தவம் புரிதற்
கேற்றதிவ்விட மென்றுளத்தெண்ணிவந்திருந்தான்.

(எ-து.) இவ்வாறு சொல்லப்பட்ட இந்தத் தடாகத்திலேயுண்டான வளப்பங்களைப் பூரணவித்து. மகாரிஷியானவர்மிகுதியாகப்பார்த்துத் தெளிவான மனதுடனே வுயர்வாகிய பரமசிவனைத் தோத்திரம்பண்ணி அன்போடே சிவனுநாமும் ஏகீபாகமாகக் கலந்திருந்துகொண்டு அரிதாகிய தபசுபண்ணுதற்கேற்ற விடமிதுவே யென்று மனதிலெண்ணி வந்திருந்தார். எ-று. (௬௧)

வேறு.

அரும்பதுமாசனத்தி னமர்ந்துநற்பூதசுத்தி
புரிந்துவெண்ணீறணிந்து புனிதவொண்மணிதரித்து
விரும்புமைந்தெழுத்தையுன்னிவிழைவெலாமுளத்தடக்கித்
திருந்துமட்டாங்கயோகத் திருநெறியிடைப்புகுந்து.

(எ-து.) அரிதாகிய பதுமாசனத்திலே யிருந்து நல்லபூதசுத்திபண்ணி வெண்மையுள்ள திருநீறணிந்து பரிசுத்தமுள்ள உருத்திராக்ஷமாலைகளைத்தரித்து மேலோர்களால்விரும்பத்தக்க பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்து ஆசையெல்லாமுள்ளத்திலேயடக்கி திருத்தமான அஷ்டாங்கயோக மார்க்கத்தினைச் செய்யத் தலைப்பட்டு. எ-று. (௬௨)

முன்புபெற்றுென்றிரண்டு மூன்றுநான்கைந்தாறேழெட்
டொன்பதுபத்தடக்கி யொளிர்சுழிமுனைகாலேற்றி
வன்பணிதனையெழுப்பி வரைகளாறையுங்கடந்து
மின்புறுமதியினேடு மேவியவமுதைவீழ்த்தி.

(எ-து.) முன்னே யொரு சிவஞானத்தைப்பெற்று, இடைபிங்கலையென்னுமிரண்டுவழியையடைத்தடைபண்ணி, மூன்றுகுணங்

களையுங் கடந்து, நான்கு கரணங்களையு நிருத்தி, ஐம்புலன்களை யுந் தடுத்து, ஆறுபகையைச் செயித்து, ஏழு ஆத்துமதத்துவத் தையும் விட்டு, எட்டுச்சிந்தையுந்தள்ளி, ஒன்பதுநவத்துவாரங் களையுமடைத்து,பத்துதசவாயுக்களையடக்கி, பிரகாசிக்கப்பட்ட சுழிமுனைவழியிலே பிராணவாயுவையேற்றி, நாபிக்குங்கீழ்மூல த்திலே வளைந்துகிடக்கிற குண்டலி யென்னும் வலியபாம்பை யெழுப்பி சடாதாரங்களாறையும் மேலாக்கி,அங்கேசந்திரமண் டலத்திலுள்ள அமிர்தத்தை விழுகப்பண்ணி அந்தஅமிர்தத்தா லுடலெங்குந் தேக்கவிட்டு. எ-று. (௬௩)

புரையிலாநாதங்கேட்டுப் புகலருமொளிதனைக்கண்
டிருதயகமலபீடத் திருவருந்தேடிக்காணுப்
பரசிவன்றனையிருத்திப் பாவனைப்பொருளினாலே
அருமையிற்பூசைசெய்தாங் குரைந்தனன்முனிவர்கோமான்.

(எ-து.) களங்கமில்லாத பரனாத சத்தங்களைக் காதிலே கேட்டு சொல்லுதற்கரிய பேரொளிப் பிரகாசத்தைத் தரிசித்து ஹிருதய கமல பீடத்திலே பிரம விஷ்ணுக்களிருவருந்தேடியுங் காணாத பரமசிவனைவைத்து தியானித்துதிருமஞ்சனம், புஷ்பங் கள் முதலானதுகளெல்லாம் பாவனையாகநினைத்து அப்பொருள் களினாலே பெருமையாகப் பூசைபண்ணிக்கொண் டங்கேயிருந் தார்முனிவர்களுக்கெல்லாம்பெரியவரான பூரணவித்துமகாரிஷி.

சூரியகிரணத்திற்குஞ் சொரிந்திடுபுயன்மாரிக்கும்
பேருறுமனிலத்திற்கும் பேசருங்குளிர்பனிக்குங்
கோரவாளரியோரியாளி கொடும்புலிசர்ப்பாதிக்குஞ்
சீருளமஞ்சானாகிச் செழுந்தவம்புரியுங்காலை.

(எ-து.) சூரியனால் காயப்பட்ட வெய்யலுக்கும், மேகம் சொரியப்பட்ட மழைக்கும்,பெருங்காற்றுக்கும், சொல்லுதற்க ரியகுளிருக்கும், பனிக்கும், பொல்லாத சிங்கம், யாளி, புலி, சர் ப்பமுதலானதுஷ்டமிருகங்களுக்கும்உள்ளம் பயப்படாதவனாகி த்தடுமாற்றமில்லாதமனதுடனே பூரணவித்துமகாரிஷியானவர் தபசு பண்ணுகிறகாலத்தில். எ-று. (௬௫)

அமரர்துந்துமிமுழங்க வளப்பருங்கணங்கள்சூழ
விமையவர்முனிவர்சித்த ரியக்கர்கந்தருவர்போற்றக்
கமையொடுமலருளானுங்கண்ணனும்புடையின்மேவ
விமலவெண்பாரிசாத விரைமலர்மாரிசிந்த,

(எ-து.)தேவதுந்துமிமுழங்களண்ணுதற்கரியசிவகணங்கள் புடைசூழத், தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், இயக்கர், கந்தருவர், தோத்திரம் பண்ணிக்கொண்டுவர, பிரமாவும், விஷ்ணுவும்,பக்கத்தில் அடங்கிநிற்க,நிருமலமான ஆகாசத்தினி டமாயிருந்து வாசனையுள்ளபாரிசாதபுஷ்பமாரிவருஷிக்க. எ-று.

தருமதேவதையென்றோதுந் தனிவிடையேறியெங்கோன்
பரசுமான்பிடித்தகையும் பணிதவழ்புயமும்போர்த்தக்
கரியினதுரியும்வேணிக் கங்கையுந்திகழ்முக்கண்ணு
மொருகளக்கடுவுந்தோன்ற வுமையொடுந்தோன்றினால்.

(எ-து) எமது கர்த்தனான பரமேஸ்வரனானவர் தருமதேவ தையென்று சொல்லப்பட்ட வொப்பில்லாதரிஷபவாகனத்தின் மேலேறிக்கொண்டு மழுவையும், மானையும்பிடித்த கைகளும் சர்ப்பங்களூரப்பட்ட புசங்களும் மேலேபோர்த்திருக்கப்பட்ட யானைச்சருமமும், சடையிலிருக்கப்பட்டகங்கையும், பிரகாசிக் கிற மூன்றுகண்களும், ஒப்பற்ற கண்டத்திலேயிருக்கும் ஆல கால விஷமும், இதுவெல்லாம் பூரணவித்துமகாரிஷிக்குத் தெரி யத்தக்கதாக உமையவளுடன் பரமேஸ்வான் பிரசன்னமாகத் தோன்றினர். எ-று. (சஎ)

வரமுனியெழுந்து தாழ்ந்து வாழுநம்முக்கட்டேனை
யிருகணுற்பருகிப்பின்னு மிறைஞ்சிமெய்புளகமெய்திச்
சிரமிசையங்கைகூப்பி செறிமயிர்சிலிர்ப்பநெஞ்ச
முருகநின்றுடிப்பாடி யுளங்கொளத்துதிக்கலுற்றான்.

(எ-து) இப்படி பரமேஸ்வரரெழுந்தருளி வந்தமாத்திரத் தில் பூரணவித்து மகாரிஷியானவர் எழுந்திருந்து தீர்க்கதெண்ட னாக விழுந்து நித்தியனான மூன்றுகண்களுள்ள நமது சிவஞான தேவனை இரண்டு கண்ணினாலேயும் குளிரப்பார்த்து பின்னையுந் தொழுது சரீரமானது பூரித்து சிரசின்பேரிலே கையைக்குவி த்து நெருங்கிய மயிர்குச்செரிய மனமுருகிநின்றுகொண்டு ஆடி ப்பாடி நேசமானது உள்ளத்திலே நிறையப் பூரணவித்து மகா ரிஷியானவர் பரமேஸ்வரன் முன்பாகத் தோத்திரம் பண்ணத் தலைப்பட்டார். எ-று. (சஅ)

அய்யனேபோற்றியெங்க ளருட்பெருங்கடலேபோற்றி
மெய்யனேசிவனேபோற்றி விண்ணவர்கோவேபோற்றி
தையலோர்பாகாபோற்றி சதுமறைப்பொருளேபோற்றி
பையராவரைக்கிசைந்த பண்ணவாபோற்றிபோற்றி.

(எ-து.) சகலசீவன்களுக்கும்பிதாவானகர்த்தாவேபோற்றி அடியார்களான எங்களுடைய பெரியகிருபா சமுத்திரமே போற்றி, உண்மையானவனே, சிவனேபோற்றி, தேவர்களுக் கரசே போற்றி, பெண்ணொருபாதியானவனே போற்றி, நான்கு வேதத்தின் பொருளானவனே போற்றி, படத்தையுள்ள நாகத் தைக் கச்சையாகவிடையிற்கட்டியதேவனே போற்றி போற்றி.

விழித்துணைகாணப்பெற்றேன்மெய்யினால்வணங்கப் பெற்றேன்
கழற்கமலந்தனக்கென் கையினைக்கூப்பப்பெற்றேன்
பழுத்தபேருட்கண்ணனே பரமனேவுன்னைநாவால்
வழுத்திடப்பெற்றேனென்ன மாதவமியற்றினேனோ.

(எ-து.) பரமசிவனே, உம்மை என திரண்டு கண்களால் தரிசிக்கவும்,தேகத்தினால்வணங்கவும்பெற்றேன், உமது பாதார விந்தங்களுக்குஎனதிரண்டு கைகளையுங் குவித்துக் கும்பிடவும் பெற்றேன், கனிந்தபேரருட்கண்ணுள்ளவனேசிவனே, உம்மை என்னாவினால் தோத்திரஞ் செய்யவும் பெற்றேன், இவைகளெ ல்லாமடைய நான் என்னதவம் பண்ணினேனோ. எ-று. (ருo)

அரும்பெறற்பிரமாண்டங்க ளனைத்தையுங்கற்பாந்தத்திற்
சர ந்திரமாகுமாவி தம்மொடுதுடைக்கநின்ற
கருங்கடுமிடற்றுயன்று கருதலார்முப்புரத்தை
யொருங்குறவெரித்தாயென்ப ருனக்கதுபுகழதாமோ.

(எ-து) திரிகிறது நிற்கிறதுமான சராசரப் பிராணிகளுட னே கிடைக்கவரிய பிரமாண்டங்களெல்லாவற்றையுங்கற்பாந்த காலத்தில் சர்வசங்காரம் பண்ணவிருக்கிற கறுத்தவிஷத்தை யுண்ட கண்டத்தையுள்ள சிவனே, முன்னொருநாள் அசுரர்களு டைய திரிபுரமடங்கலு மெரித்தவனென்று உலகத்தார் சொல் லுவது உமக்குப் புகழாமோ. எ-று. (ருக)

படைத்தருள்பிரமனீயே பரிவொடுகாத்துநிற்கு
முடைப்புகழ்முகுந்தனீயே வுலகமோடுயிரையெல்லாந்
துடைத்தருள்வானுநீயே தொல்லுயிர்க்குயிருநீயே
விடைத்தனிக் கொடியாயுன்றன்மெய்ம்மையாரறியவல்லார்.

(எ-து.) சிருஷ்டிக்கப்பட்ட பிரமனுநீயே, சந்தோஷத்து டனே இரட்சிக்கும் கீர்த்தியைவகித்த விஷ்ணுவுநீயே,சகலலோ கங்களுடனே சராசரமான சீவன்களையெல்லாமொருமிக்கச்சங் காரப்பண்ணும் உருத்திரனுநீயே, பழமையானசிவனுக்குச் சீவ

ுயிருப்பவனும்நீயே, ஒப்பில்லாத ரிஷபக் கொடியையுடைய கர்த்தனேஉன்னுடையஉண்மையையாரறியவல்லவர்கள். எ-று.

முத்தியங்கனியோவெய்ய மோகவாரிதிகடத்துஞ்
சித்திரப்புணையோகஞ்சத் திருமலர்க்குறவோநல்ல
பத்தர்தம்பதமோவுள்ளப்பதுமமோவுயிரோமாறு
நித்தியமளிக்குந்தூய நிதிகொலோநின்பொற்றுனே.

(எ-து.) சுவாமி, உன்னுடைய பாதமானது அழகுள்ள மோக்ஷமானபழமோ! பொல்லாதமோகவிகார சமுத்திரத்தைக் கடத்தும் பேரழகுள்ள வோடமோ ! திருவிருக்கிற தாமரை மலருக்கு உறவோ! நல்ல அடியார்களுடைய பதவியோ! சர்வப் பிராணிகளுடைய ஹிருதய கமலமோ ! சிவன்றுனே! அழிவில் லாதநிலைமையைத் தரப்பட்ட சுத்தமான நிக்ஷேபமோ. எ-று.

என்பனபலவும்பன்னி யிதமுனிதுதித்துநிற்க
வன்புறுசேய்சொற்கேட்குமன்னைபோற்செவியைத்தாழ்த்தி
யுன்பெருந்தவந்தனைக்கண் டுளத்திடையருள்சுரந்தோ
மன்பெறுவரங்கேளென்றுன் மறைகளுந்தேடகின்றுன்.

(எ-து.) இப்படி பல துதிகளுஞ்சொல்லிஇதமுள்ளபூரண வித்து முனிவனுனவர் நின்றமாத்திரத்தில் அன்புள்ள பிள்ளை சொல்லைக் கேழ்க்கிற தாயைப்போலச்செவிகொடுத்துக்கேட்டு பூரணவித்து மகாரிஷியே உன்னுடைய பெரிதான தவத்தைக் கண்டு நம்மனதிலே தயை யுண்டானேம் நிலைபெற்றபெரியவர த்தைக் கேளென்றுர் வேதங்களுந்தேடநின்ற பரமேஸ்வரர். ()

அன்னசொல்லமுதமென்ன தன்செவிபுகுதலோடும்
முன்னருஞ்சிலாதனுக்கன் றெழிவினந்தியையளித்த
தென்னவுன்பதத்திவன்புற் றிருந்திடுஞானப்பிள்ளை
தன்னையேற்குதவல்வேண்டுமென்றனன்றருமமிக்கான்.

(எ-து.) பரமேஸ்வரன்சொன்ன அந்த சொல்லாகிய வமுதம் அழகிய தன்செவியிற் புகுந்த மாத்திரத்தில் நினைக்கவரிதான சிலாதப்பிரமரிஷிக்கு முன்னே அழிவில்லாத பத்தியையுடைய நந்திகேஸ்வரரைத்தந்ததுபோல, உமது திருவடிக்குப் பத்திசெய்யும் ஞானமுள்ள புத்திரனை யடியேனுக்குக்கொடுக்க வேணுமென்றுர்தருமமேசொருபமாகியபூரணவித்துமகாரிஷி.

நமதிடத்தன்புஞ்சாந்த நலமுமெய்யருளுமுள்ளத்
தனமவுமெண்ணில்லாதோங்கு மாயுளும்பாசஞ்சாரா

விமலமும்புவனம்போற்றும் மேன்மையுமெழிலும்பெற்ற
குமரனேயளித்தோம்போதி யென்றருட்குழகன்போனன்.

(எ-து.) அப்படிகேட்டபூரணவித்துவைப்பார்த்துநம்மிடத்தில் அன்புஞ் சாந்தமு நன்மையுஞ் சத்தியமுமருளும் மனேடைக்கமும் தீர்க்காயுளும் பந்தபாசமில்லாதநின்மலமும்உலகங் கொண்டாடப்பட்டமேன்மையும்அழகுமுதலிய வெல்லாமுள்ள புத்திரனையுனக்குக்கொடுத்தோம் போவென்றருளிச்செய்து கிருபா சொரூபனுன சுந்தரேஸ்வரன் மறைந்தார். எ-று. (ருசு)

எந்தைதான்போயபின்றை யிணைதவிர்முனியுமில்லில்
வந்துதன்மனைவியோடு மகிழ்வுறவாழுநாளில்
தந்தியீருரியணிந்த சங்கரன்கருணைதன்னுற்
கந்தவார்குழல்வயிற்றிற் கருப்பம்வந்துதித்ததன்றே.

(எ-து.) எந்தையான பரமேஸ்வரர் அந்தர்த்தானமான பிறகு ஒப்பில்லாத பூரணவித்து முனியானவர் தன்வீட்டில் வந்து தன்னுடைய பெண்சாதியான பத்திரதத்தையம்மனேடு மகிழ்ச்சியுடனே வாழ்கின்ற நாளையில், ஆனையையுரித்ததன்சருமத்தையணிந்தபரமேஸ்வரனுடையவருளினலேவாசனை வீசும் அளகபாரத்தையுடைய பத்திரதத்தை யம்மன்வயிற்றில்கருப்ப முண்டாயது. எ-று. (ருஎ)

தமனியக்குடமுகட்டிற் றக்கநன்னீலந்தன்னே
யமையுறவைத்ததேபோ லணிமுலைக்கண்கறுத்தாள்
சுமையொடுபுவனமூன்று முய்யவேகருப்பத்துற்றேன்
விமலவான்புகழ்பரந்த தெனவுடல்வெளுத்ததன்றே.

(எ-து.) பொற்குடத்தின் முகட்டிலே விலையுயர்ந்தநீலரத்தினம் பதித்ததுபோல பத்திரதத்தை யம்மனுக்கு அழகுள்ள முலைக்கண் கறுத்தது மூன்றுலோகமும் பிழைக்க பொறுமையோடு கெர்ப்பத்திலிருக்கும் நிர்மலனதுபிரபலகீர்த்திபரவினது போலபத்திரதத்தை யம்மனுடைய சரீரமெல்லாம்வெளுத்தது.

மயலிலாக்கும்பனன்ன மாதவப்பெரியோனைத்தா
ணியலுறத்தாங்கலானே னெழுந்திடப்படாதிருந்தா
ளுயர்புடைவயிற்றிலியோகத் துறங்குவானுரைதலானே
வியனுடைமுனிவன்பன்னி வுறக்கமேமிகுந்தாளன்றே.

(எ-து.) மயக்கமில்லாத அகத்தியரைப்போன்ற மகத்துவமுள்ள தபசிற்பெரியவனுன இந்தப்பிள்ளையை தாளியலுடன்

தாங்குகிறபடியினாலே எழுந்திருக்கப் படாமலிருந்தாள், மேன்மையுள்ள முனீஸ்வரன் மனைவியாகிய பத்திரதத்தையம்மனது உயர்ந்தகருப்பத்தில்யோகநித்திரைசெய்பவனிருப்பதனால் உறக்கமே மிகுந்திருந்தாள். எ-று. (ருகூ)

இன்னணங்கருப்பச்சின்ன மெய்தவீரைந்தாந்திங்க
டன்னில்வன்கிரகமெல்லாந் தகுமிடத்தினிலிருப்ப
நன்னிலையோரைதன்னில் நவைதவிர்மகப்பயந்தாள்
பன்னருங்கற்பின்மிக்க பத்திரதத்தையென்பாள்.

(எ-து.) இவ்விதமாகக் கருப்பச்சின்னம் பத்துமாதமான பின்வன்மையுள்ளகிரகங்களெல்லாம்இருக்கிறதானத்திலே நன்மையாயிருக்கநிலையான நல்லலக்கினத்திலேகுற்றமற்ற புத்திரனைப்பெற்றாள் சொல்லுதற்கரிய கற்பில்மிகுந்த பத்திரதத்தையம்மை. எ-று. (சூ0)

பெறற்கருமினியமைந்தன் பிறந்திடுங்காலையம்ம
துறக்கமீதிருக்குந்தெய்வ துந்துமிமுழங்கித்தங்க
ணறைக்கொழும்பூவின்மாரி சிந்தினர்நவையில்வானோ
ரறப்பெருந்தெய்வந்துள்ளியெழுந்தெழுந்தாடிற்றன்றே.

(எ-து.) கிடைத்தற்கருமையும்இனிமையுமான அந்தமைந்தன் பிறந்திடும்வேளையிலே தேவேந்திரலோகத்திலுள்ள தெய்வதுந்துமிமுழங்கியது, அவ்விடத்திலுள்ள மணமும் வளமுமான பாரிசாதமலர்மாரியைமாசற்றதேவர்கள்பொழிந்தார்கள். அன்றியும் தர்மதேவதை மிகுந்தகளிப்புடனே துள்ளியெழுந்தெழுந்து கூத்தாடியது. எ-று. (சூக)

மேனிலைச்சுற்றத்தோடு மேவிவந்தினியமைந்த
னானனந்தன்னைநோக்கி யந்தணர்தமக்குமுக்கண்
வானவனடியருக்கும் வளர்கனகாதிநல்கி
மானநற்றந்தைமிக்க மகவிழாநடத்தினால்.

(எ-து.) மேலான நிலையுள்ள தன்னுறவினோடு கூடிவந்து இனிமையான தன்புத்திரன் முகத்தைப்பார்த்து மனமகிழ்ந்து பிராமணர்களுக்கும் திரிநேத்திரதாரியானபரமசிவனடியார்களுக்கும் உயர்வாகிய சொர்னதானமுதலான சோடசதானங்களுங் கொடுத்து பெருமையுள்ள பிதாவான பூரணவித்துமகாரிஷியானவர் அப்பிள்ளைக்கு புத்திரோற்சவம்பிரபலமாகநடத்தினார். ()

வேறு.

ஆனந்தமுறுமுனிவ ரனைவோருமவணெய்தி
மானந்துபவந்தீர்க்கும் மருந்தானதிருநீற்றை
யூனந்தானணுகாதிட் டுயர்மகவுதனக்கினிய
சானந்தமுனிவனெனுந் திருநாமந்தரித்தார்கள்.

(எ-து.) பிர்மானந்தமுற்ற முனிவர்களெல்லாரும் அவ்விடத்திலேவந்து ஒழியாத மாபாவங்களைத் தீர்க்குமருந்தாகிய திருநீற்றையெடுத்துப் புத்திரனுக்கு யாதொரு துன்பங்களுமணுகாதிருக்கும்படி தரித்துநல்லசுபதினத்தில் சானந்தமுநிவனென்னுந் திருநாமந் தரித்தார்கள். எ-று. (சுரு)

மற்றுமுளகருமமெல்லாம் வழுவாதுபுரிந்ததற்பின்
சுற்றமெல்லாங்களிப்பெய்த தோன்றியவத்தோன்றலுக்குப்
பற்றுபவக்களைகளைந்த பாவகராந்தவராச
ருற்றுமறைநூல்வழியே யுரத்தினினூலிருத்தினரால்.

(எ-து.) பின்னையுமுண்டான அன்னப்பிராசனஞ்சவளமுதலான சடங்குகளெல்லாம் தப்பாமற்செய்து, பிறகு சுற்றத்தாரெல்லாஞ் சந்தோஷிக்கப்பிறந்த அந்தச்சானந்த முநிவனாகிய பிள்ளைக்குப்பீடிக்கப்பட்டபாவ மென்னுங்களையையறுத்து சுத்தஞ்செய்யவல்லவராகிய தவசிரேஷ்டரெல்லாரும்வந்துகூடிவேதசாஸ்திரஞ்சொன்னபடிக்கு மார்பிலே பூணநூல்தரித்தார்கள்.

உயர்பிறைபோல்வளர்நாளி லொருபெரியோன்முன்னிலையாய்
மயலறமுன்வைத்தபொருள் பின்னெடுத்தவாறென்ன
வியன்மறைநூல்பக்கமுயர் மிகுதிமுதற்கலையாவும்
பயனுடையவுலகத்தில் வடுத்தவிரப்படித்தனனால்.

(எ-து.) வளர்பிறைபோலே அந்தச்சானந்த முநிவன்வளருநாளையில் முன்ஒருவன்தேடிவைத்தபொருளை மயக்கமின்றிபின்னெடுத்த வாறுபோல ஒருபெரியவர்முன்னிலையாக அழகிய வேதநூல் மற்றசாஸ்திரமுதலான பயனுள்ள கலைகளெல்லாம் உலகத்திற் குற்றமறப்படித்தார். எ-று. (சுரு)

அயற்கரியான்றனைப்பணிதலன்றியொருவெருவிளையாட்
டியற்றியிடான்சிவசரிதை யல்லாமலியாதொன்றும்
பயிற்றல்புரியான்சிவநூல் பாராட்டலன்றியொரு
மயற்கலையும்புகன்றிடான் மணிவாய்ச்சிற்றடிமைந்தன்.

(எ-து.) பிரமாவுக்கும் அருமையானசிவனை வழிபாடுசெய்வதேயல்லாமல் விருதாவாகிய விளையாட்டுளொன்றையும்விளையாடுகிறதேயில்லை,சிவனிடசரித்திரமேயல்லாமல்பின்னைவேறொன்றையும் பழக்கம்பண்ணுவதேயில்லை, சிவபுராணங்கள் தவிர மூவாசையை விளைவிக்கும் நூல்களைப்படிப்பதேயில்லை, அழகுள்ள வாயுஞ் சிற்றடியுமுள்ள பிள்ளையாகிய அந்தச்சானந்த முநிவன். எ-று. (௬௬)

பெற்றவிருகுரவருக்கும் பெரும்புவியிலியாவருக்கும்
மற்றமுநிவாருக்கும் மகிழ்வெய்தநன்னெறிக்க
ணுற்றொழுகுநாண்மைந்த னொருசார்பின் மாதவர்கள்
கற்றசிவகதையுரைக்குங் காலையவணெய்தினனால்.

(எ-து.) தன்னைப்பெற்ற மாதாபிதாவாகிய, பத்திரதத்தையம்மைக்கும், பூரணவித்துமகாரிஷிக்கும், பெரிதாகியபூலோகத்திலுண்டான பேர்களெல்லோருக்கும், பின்னையுமுண்டானமுநிவர்களுக்கும், நல்லமகிழ்ச்சியுண்டாக சன்மார்க்கத்தினிடத்திலே தானே அடங்கி நடந்துவருகின்றநாளையிலே ஒருநாள் அந்தச்சானந்தமுநியாகிய பிள்ளையானவர்ஓரிடத்தில்ரிஷிகளெல்லாருங் கூடிச்சிவகதைகள்படிக்கிறவேளையிலே அவடத்திற்குப்போனார்.

உற்பத்திச்சருக்கம் - முற்றிற்று.

ஆகூ பாயிரம் உட்பட - திருவிருத்தம்-அரு.

---



கணபதிதுணை.




திருச்சிற்றம்பலம்.

## இரண்டாவது

# நல்வினைச்சருக்கம்.



அன்னமுனிவரர்வாழு மாச்சிரமந்தனிலென்றுந்
துன்னுமரும்பறவைகளுந் தொலையாதவிலங்குகளுந்
தன்னெடியபகையின்றி தவறுநண்பொடுவாழு
மென்னிலதன்பெருமைதனை யாவரேயுரைசெய்வார்.

(எ-து.) தவங்களைச்செய்தும்.சிவபுராணங்களைப்படித்தும், அதைப்பிரசங்கம் பண்ணிக்கொண்டுமிருந்துவாழுகின்ற அந்த முனிவர்கள் ஆச்சிரமத்திலேயிருக்கிற பட்சிகளு மிருகங்களும் ஒன்றுக்கொன்று தங்களுக்குண்டான கடும்பகைகளைநீக்கி ஒழியாதவுறவோடு வாழ்ந்துகொண் டிருக்குமென்று லவ்வனத்தின் பெருமையையாவரால் சொல்லப்படும். எ-று. (க)

புலிக்குருளைக்குழையன்பு புணர்ந்துமுலைப்பாலூட்டும்
எலிக்குழவிக்கரும்பணிகளெழிற்படத்தானிழல்காட்டும்
கலைக்குழுவும்புலிக்குழுவும் கலந்துறையுநெறிப்பரலை
யிலைத்துணராலகற்றுமற மலிமுனிவர்வருங்காலை.

(எ-து.) அந்தவனத்திலே மான்கள் புலிக்குட்டிக்கு அன்புடன் முலைப்பாலூட்டும், எலிக்குஞ்சுகளுக்கு வெயில்படாமல் பாம்புகளானது படத்தினாலே நிழல்காட்டும், மான்கூட்டமும் புலிக்கூட்டமு மொன்றாய் வாழ்ந்திருக்கும்,அம்முனிவர்கள் வருகிறவேளைபார்த்து யானைகள் பூங்கொத்துகளை யொடித்துக்கொண்டு வழிகளிலேகிடக்கிற பருக்கைக்கல் முதலியவைகளையும் கூட்டித்தள்ளும். எ-று. (உ)

கீரத்தைக்கண்டவுடன் கிளரன்புகொளும்பூசை
சாரத்திக்குறவாகுந் தலையானமாவரசுஞ்
சீருற்றபுண்டரிக மாம்பலொடுசேர்ந்திருக்கு
மூரப்பூவிரைந்தணையு முயரரியும்பூமயிலும்.

(எ-து.) மேலும் கிளிப்பிள்ளையைக் கண்டவுடனே பூனையானது அன்புகொண்டிருக்கும், அழகியயானைக்குச்சிங்கமானது உறவாகவிருக்கும், புலியானதுயானையினுடனே சேர்ந்திருக்கும் உயர்ந்தரத்தினத்தைத்தரும்பாம்பும் அழகியமயிலும், பக்ஷமாகக் கூடியிருக்கும். எ-று. (ங)

பூவையொடுகிள்ளையினம் புகலரியபசுவுக்குத்
தாவிலுயர்சங்கரனே பதியென்றுசாற்றியிடும்
மேவரியநன்பினொடு வெய்யகருங்கரடிக்கொன்
காவிலுறும்யூகங்கள் கையுகிரான்மயிர்வகிரும்.

(எ-து.) பின்னையும் நாகணவாய்ப்பிள்ளையுடனேகிளிப்பிள்ளையானது பசுவர்க்கங்களுக்கெல்லாம் பதியாயிருக்கப்பட்டவர் சங்கரனாகியபரமேஸ்வரனேயென்றுசொல்லிக்கொண்டிருக்கும் பொல்லாத கரடிகளுக்கெல்லாம் வானரங்கள் வாஞ்சையுடன் தன்கைநகத்தினாலே மயிர்வகிர்ந்து பேனெடுக்கும். எ-று. (ச)

இத்தகைமைத்தாயவனத் தியல்புடையதாபதர்முன்
சித்தியுறப்பவதிமிரந் தீரநெடுநிலவெறிக்கும்
மெத்தவளத்திருநீறும் விமலமுடையக்கமணிக்
கொத்துமுருவிற்பிறழக் குறுகினன்மாதவக்குமரன்.

(எ-து.) இப்படிமிருகசாதிகளும் பக்ஷிசாதிகளும்பகையில்லாமல்ஒன்றுக்கொன்று உறவாகவிருக்கப்பட்ட அந்தவனத்திலே புராணசாஸ்திரங்களை வாசித்துக்கொண்டிருக்கிறசடாதாரிகளானதபசிகளுக்கு முன்பதாக நிலவெரிப்பதுபோலவிபூதியும்உருத்திராக்ஷமாலைகளுஞ்சரீரத்திலணிந்துகொண்டு சானந்தமுனிவர் ஞானமென்னு மொளியுண்டாக பாவமானவிருள்நீங்க அவடத்திற்குவந்தார். எ-று. (ரு)

வந்தவுடனினிதெழுந்து மறைமுனிவரனைவோரும்
மிந்தவிளம்பருவத்தி லிவனைப்போல்சிவபத்தி
புத்தியுள்வைத்தவரில்லை யென்றுமிகப்புகழ்ந்தவர்க்கு
நந்துமருக்கியமாதி நல்கியருகிருத்தினரால்.

(எ-து.) சானந்தமுனிவர் அவடத்திற்குவந்தமாத்திரத்திலேவே தாகமங்களுணர்ந்தமுனிவர்களெல்லாருமெழுந்திருந்து இந்த இளம்பருவத்திலே இவரைப்போலேசிவபத்தியுண்டானபேர்களை நாம்கண்டதே இல்லையென்றுபுகழ்ந்து அவர்க்குபாதப்பிரக்ஷாடனஞ்செய்ய ஜலமுதலானதுங்கொடுத்து தங்கள்பக்கத்திலே யிருக்கவைத்துக்கொண்டார்கள். எ-று. (௬)

இருந்துமறைவாயமைந்த னியல்முனிவீர்பரமகதி
பொருந்துமனுபவநன்னூல் புகன்றிடுவதெதுநீவீர்
திருந்தவுரைத்திடுமினெனச் சிவகதையேபாராட்டு
மருந்தருமப்பிரசங்க னென்னுமுநிபறைகின்றான்.

(எ-து.) முனீஸ்வரர்கள் எல்லாமிருக்கச்சொல்ல இருந்து முனிவர்களே நீங்கள்பரமகதியடையத்தக்கதாய் வாசிக்கிறதென்னபுத்தகஞ்சொல்லுங்களென்று கேழ்க்க அவர்களுக்குள்ளே பெரியவராக சிவகதைகளைப்படிக்கிற தர்மப்பிரசங்க ரிஷியென்கிறமுனிவர் வேதசொரூபியான சானந்தமுனிவரைப் பார்த்துச் சொல்லுகிறார். எ-று. (எ)

இப்போதுபெருந்தரும மியற்றினோரெய்துகதி
தப்பாமலுரைக்கின்றோ மெனவதனைத்தாழாம
லொப்பேதுமில்லாத வுயர்முனிவநீயெனக்கு
மெய்ப்போதமுறப்புகறீ யென்னவவன்விளம்புவான்.

(எ-து.) இப்பொழுது வாசிக்கிற சிவதர்மவுத்தரத்திலேபெரியதருமஞ்செய்தபேர்போம்வழியைச் சொல்லுகின்றோமெனத் தருமப்பிரசங்கரிஷிசொல்லச் சானந்தமுனிவர்கேட்டுஒப்பில்லாத ரிஷியே மெய்ஞ்ஞானம்வரச்சொல்லுமையாவென்றுகேட்கஅவரைப்பார்த்துச் சொல்லுகிறார். எ-று. (அ)

வேறு.

தருமமியற்றிய தாழ்வறுநல்லோ
ரரியவிமான மிவர்ந்தளவற்ற
திருமருவிப்புகு சென்னெறியின்சீ
ரொருமணிவாய்கொ டுரைக்கப்படுமோ.

(எ-து.) பூலோகத்திலே தருமங்களைப்பண்ணின புண்ணியவான்கள் இயமலோகத்துக்குப் போகிறபோது விமானமேறிக்கொண்டு வெகுசிறப்போடுபோவார்கள், அவர்கள்போகிறவழியினிட சம்பிரமங்களை யொருவரால் சொல்லிமுடியாது.எ-று. ()

மேதகுதெய்வத நன்னறைவீசுந்
தாதவிழ்தாமரை யோடைதயங்கும்
போதலர்வாவியி னூடுபுகுந்து
சீதமளாவிய தென்றலுலாவும்.

(எ-து.) அவ்வழிகளில் மேலான தெய்வீகபரிமளம்வீசும், தாமரையுள்ளவோடைகள்பிரகாசிக்கும், புஷ்பவாசனைகளோடு அத்தடாகங்களுள் தென்றல்காற்றுப்படிந்து குளிர்ச்சியுடன்வந்து வீசும். எ-று. (௧0)

பன்மலரின்பொடி பாடிதமன்ன
மென்மணலம்ம விளங்குறுமெங்கும்
நன்மறையோய்வழி நாடிருபாலும்
பொன்மலர்சிந்துபு பூவனமெங்கும்.

(எ-து.)அவ்வழியெங்கும்நானாவிதபுஷ்பத்தின்பொடிகளும் பச்சைகற்பூரப் பொடியைப்போல் நொய்ய வெண்மணல்களும் பரப்பியிருக்கும்நல்லமறையவரேவழியினிருபுறமும்பொற்பூவுகளுதிரப்பட்டதாயிருக்கும் அந்த பூங்காவனமெங்கும். எ-று. ()

துன்றியமாதவி சூழவுயர்ந்த
மென்றளிர்மானிழல் மேவிடுமெங்கும்
மன்றனறும்புனல் வைத்திடுபந்த
ரொன்றியமாலிகை யோடுவயங்கும்.

(எ-து.) பின்னுமவ்வழிகளிலே துளிர்த்துநெருங்கியகுருக்கத்திபடர்ந்தநிழல்களுண்டாயிருக்கும்அடிக்கடிவாசனையூட்டிய தண்ணீர்க்குடங்கள் வைத்திருக்கிற பந்தல்களில் மலர்மாலைகள் கட்டி தொங்கவிட்டிருக்கும். எ-று. (௧௨)

மாடுதொறுஞ்சிறு வன்குயிலென்னப்
பாடுமரம்பையர் பல்லிசைமல்கும்
நீடியதாள விதங்கணிரம்பக்
கோடுதழங்குறு முன்னர்குலாவி.

(எ-து.)பின்னும்இரண்டுபக்கங்களிலும்குயில்களைப்போல தேவரம்பைகள்பாடுகிறபலசங்கீதங்களுண்டாயிருக்கும், தாளத்தின் விநோதங்களுடனே நாகசுரமுதலான கொம்புகள் எதிரில் முழங்கும். எ-று. (௧௩)

மின்னனையார்நடை யென்னவியப்ப
நன்னெடுவேழ நடந்தெழில்செய்யுந்

தன்னிகர்தண்டை— சதங்கைதயங்க
முன்னதுரங்க முழங்கநடிக்கும்.

(எ-து.) மேலும்மின்னலுக்குச்சமானமானபெண்கள்நடக்கிற நடையைப்போல, அசைந்து அசைந்து யானைகள் நடந்து வரும்,பின்னையும்எதிரில்தேவக்குதிரைகளானது நாலுகால்களிலேயுந் தரிக்கப்பட்ட தண்டைசதங்கைகள்முழங்கநடனம்பண்ணும். எ-று. (கச)

உறுநவமாமணி யோடொளிரம்பொற்
சிறுகொடிமேவிய தேர்கள்வயங்கும்
கறைதவிழ்வாழைகள் கானமெனத்தா
ணிறைதுகிலின்கொடி நின்றுலாவும்.

(எ-து.) மேலும் அந்தவழிகளிருபக்கத்திலும் நவரத்தின மாலைகளாலேஅலங்கரித்துபிரகாசிக்கப்பட்ட அழகுள்ளபொன்னினுற்செய்தசிறியகொடிகள்நாட்டியதேர்கள்அங்கங்கேநிறுத்தியிருக்கும் அந்தவழிகள்முற்றும்வாழைக்காடுகள் போலஆலவட்டங்கள் நாட்டியிருக்கும். எ-று. (கரு)

செறுநவமாமணி யாலணிசெய்த
மறுவறுதோரண நின்றுவயங்கும்
நறுமுதலார்செய் நடத்திசையானே
யுறுமுபலங்களும் மூடுருகும்மே.

(எ-து.) இன்னும் அந்தவழிகளில்நவரத்தினங்கள்கோர்த்துத் தொங்கவிட்டதோரணங்கள் அடிக்கடிகட்டியிருக்கும், ஜவ்வாதுபொட்டுள்ள நீங்காதநெற்றியையுடையபெண்கள்செய்கின்றநடனசங்கீதங்களினால் கல்லுகளும் உருகிப்போம். எ-று. (கசு)

ஆரமுதந்நிக ழாறுகளோடுஞ்
சீரியவிண்மலர் மாரிகள்சிந்தும்
வேரிகொள்பூமனை மேவுறுமம்ம
வோரசேர்வை யுகந்தவுளத்தோய்.

(எ-து.) ஒப்பில்லா சிவதரிசனமுவந்த சானந்தமுனிவரே பின்னையும்அவ்வழிகளில்அமிர்தத்தையொத்தஆறுகள் அடிக்கடியோடும் மேகமானது புஷ்பமாரிவருஷிக்கும் வழிகளில் தங்கியிருந்துபோக வாசனையுள்ள புஷ்பங்களினால் அலங்கரித்த வீடுகளும் பூப்பந்தல்களும் உண்டாயிருக்கும். எ-று. (கஎ)

இவ்வணியாயின யாவையுநோக்கி
அவ்வியமற்ற வறத்தொழிலுற்ருர்
செவ்வியமான கணங்கள்சிறந்த
நவ்விலியம்புர நண்ணிடுகாலை.

(எ-து.) இப்படி வேடிக்கைகளை யெல்லாம்பார்த்து மனமகிழ்ச்சியுடனே தர்மஞ்செய்த புண்ணியவான்கள்போகும்வேளையில் செவ்வியோர்கூட்டத்தால்சிறப்புற்றிருக்கிறஇயமபுரத்திலே நடக்கிற சம்பிரமத்தைச் சானந்தமுனிவருக்குத் தர்மப்பிரசங்கரிஷி சொல்லுகிருர். எ-று. (கஅ)

வேறு.

தேவர்மாதரியக்கர்மங்கையர் சித்தர்சாரணர்மின்னனு
ரோவிலாதுநெருங்குபன்மணி யோங்குமாளிகைவீதியில்
யாவரும்புகழ்தருமநாயக னேவலாளர்கைகூப்பியே
தாவிலாதவனந்தமாமுப சாரநின்றுவிளம்புவார்.

(எ-து.) மேலுமங்கே தேவர் இயக்கர் சித்தர் சாரணர்முதலிய பெண்கள் எல்லாருங்கூடியிருக்கிற பலவிரத்தினங்களாலிழைத்த உப்பரிகைகளையுடைய வீதிகளிலே புண்ணியவான்கள் வருகிறவேளையில் அவடங்களில் இயமதூதரானபேர்கள்கையெடுத்து கும்பிட்டு நின்றுகொண்டுஅனேகமுபசாரங்கள்சொல்லுவார்கள். எ-று. (கசு)

விண்ணுடைக்கனிவாயரம்பையர் மிக்கநன்னடனந்தனைக்
கண்ணிணைக்கினிதாகவன்பொடுகாண்மினென்றுவிளம்புவார்
பண்ணுறுஞ்சிறுபல்லியந்திகழ் பாணிவிஞ்சையர்மாதரார்
நண்ணுகின்றனர்தேவரீர்மிக நாடுவீரெனவோதுவார்.

(எ-து.) இமயபுரத்துக்குள்வீதியிலே வந்தபுண்ணியவான்களைப்பார்த்து இமயதூதர் சுவாமீஇவர்கள் தேவலோகத்து ரம்பைகள் தேவரீர் அண்டையிலே நாட்டியம் பண்ண வந்தார்கள் அந்த நாட்டியத்தைச்சற்றே நின்றுபார்க்க வேணுமென்றும் இவாள் விஞ்ஞையப்பெண்கள் தம்பூருகளினலேபாட கூடிவந்திருக்கிருர்கள்தேவரீர்சற்றே கேழ்க்கவேணுமென்றும்சொல்லுவார்கள். எ-று. (உ0)

சந்தனம்புனுகாதிகொண்டு தயங்குசாரணர்மின்னனர்
வந்துநின்றனர்பூசுவீரென வாய்புதைத்துவிளம்புவார்

நந்துவாரமுதத்தையொத்தசொன் னன்மடந்தையரேந்திளு
ரந்தமாலிகைதோளிடத்தி லணிந்துகொள்ளுமினென்பரால்.

(எ-து.) சாரணப்பெண்கள் சந்தனம் புனுகுசவ்வாதுமுத லானகதம்பங்கள் கொண்டுவந்துநிற்கிறார்கள், அதைத் தேவரீர் பூசிக்கொள்ள வேணுமென்றும், அமிர்தம்போன்ற வார்த்தை யையுடையபெண்கள் பாரிசாதகப்புஷ்பமாலைகளேந்திக்கொண் டுநிற்கிறார்கள், அந்தமாலையைத்தோளிலே அணிந்துக்கொள்ளு ங்களென்று வாய்பொத்தி இயமதூதர்கள் உபசாரஞ் சொல்லு வார்கள். எ-று. (உக)

ஏரிருந்தமணிக்கிரீடம தாணியாழியிலங்குகே
யூரமொண்குழையாதிபூண்மி னெனக்கொடுப்பருவந்துபோய்
வேரிதங்கியவிண்சுவைப்புன லுண்மினென்றுவிளம்பிவிண்
ணாரரம்பையர்நின்றுமுன்ன ரளிப்பர்சிந்தைகளிக்கவே.

(எ-து.) பின்னுந்தேவரம்பையர்கள் உபசாரமாக மனக் களிப்புடன் அழகுள்ளநவரத்தினக்கிரீடங்கள்பதக்கங்கள்கணே யாழிமோதிரம் வாகுவலயம் குண்டலமுதலான பொற்பூஷண ங்களைப் பூண்டுகொள்ளுங்களென்றும் வாசனையுள்ளஆகாயகங் கையைக் கொள்ளுங்களென்றுஞ்சொல்லிமுன்னாகநின்றுக்கொ ண்டுகொடுப்பார்கள். எ-று. (உஉ)

பானுரைக்கிணையானவாடை பரிந்துடுத்துமினென்பரா
னுனமொன்பதுபாளிதப்பொடி நாடியள்ளியிரைப்பராற்
றானலந்திகழாடிகொண்டெதிர் சொற்றரும்படிநிற்பரா
லானபற்பலகற்பகக்கனி யன்பினோடுமளிப்பரால்.

(எ-து.) தேவகன்னிகைகள் புண்ணியஞ்செய்தவர்கள்வீதி களிலேவரும்போது அவர்களுக்குபால்நுரைபோலொத்தபட்டு வஸ்திரங்களைக் கொண்டுவந்து இதையுடுத்துங்களென்றுசொல் லுவார்கள், சந்தனக்குழம்பு கற்பூரம்கதம்பப்பொடிகளிதுகளை யள்ளி யள்ளி யெங்குமிறைப்பார்கள், கண்ணாடியைக்கொண்டு வந்து உபசாரஞ்சொல்லி எதிர்காட்டிநிற்பார்கள்,பலபலகற்பக விருக்ஷத்தின் பழங்களைக்கொண்டுவந்துமிக்க அன்புடன்கொடு ப்பார்கள். எ-று. (உ௩)

மிக்கசர்க்கரையாதிகொண்டு வியந்தமைத்தமோதகம்
தக்கபால்தயிர்தேன்னெய்யைக்குவி.சருகுவித்தொகைபலகறி

யொக்குமென்றலிலாதபொற்கல னுள்ளிருத்தியருத்தியா
லிக்குநேர்மொழிமின்னனூர்பல ரீவர்சுந்தரமேவவே.

(எ-து.) மிகுந்த சர்க்கரை ஏலம் முதலியபலவஸ்துக்களைச் சேர்த்துசெய்த அப்பவர்க்கம், இதுபால் தயிர் தேன்நெய்இவைகளைத் தக்கதாய்ச்சேர்த்துசெய்த தேவருணவாகிய சோறு, இச்சிறியதொகைகள் பலகறிகளாம், என்றுகரும்பையொத்த சொல்லும் மின்போன்ற சாயலுமுடைய பலஸ்திரீகள் இனிமையான மொழிகளால் இதற்கொப்பிலையென்றுசொல்லத்தக்க பொற்கும்பாளத்தில்வைத்துக்கொண்டு சொல்லிக்கொடுப்பார்கள். எ-று.

மாலைவெண்குடைகொண்டுசெல்குவர் மாசில்சாமரைவீசுவா
ராலவட்டமெடுப்பர்கோலமோ டாடுவார்பலர்பாடுவார்
மேலுமேலுமிருந்துசிரொடு வாழ்கவென்றுவிளம்புவார்
சாலவக்கதைநின்றிரைப்பர் சரம்படுங்கணரம்பையார்.

(எ-து.) மேலும் அவர்களுக்கு மாலைதொங்கவிட்ட வெள்ளைக்கொடையெடுப்பார்கள், வெண்சாமரைவீசுவார்கள் ஆலவட்டம்பிடிப்பார்கள், ஆடுவார்கள், பலர்பாடுவார்கள், மேன்மேலுஞ் சிறப்புடனேயிருந்து வாழ்கவென்றுவாழ்த்துவார்கள், மிக்கஅட்சதைகொண்டுஇரைப்பார்கள், இப்படியாகஅம்பைப்போலொத்தகண்களையுடைய தேவரம்பையர்கள் உபசரிப்பார்கள். எ-று.()

கேடின்மங்கையரிவ்வகைத்தொழில்கிட்டியங்கணியற்றவக்
தூடெழுங்களியோடருஞ்சம னுற்றகோவிலின்வாய்தலிற்
கோடிசந்திரர்கோடியாதவர் கூடுபேரொளிவீசுஞ்சீர்
நீடுமானமிறங்கிநிற்பர்க ளேவலாளர்நிகழ்த்தவே.

(எ-து.) புண்ணியவான்களாயிருக்கப்பட்டபேர்கள் இயமதருமராஜனுடையபட்டணத்துவீதிவழியேபோகிறபோது அந்தப் பட்டணத்திலுள்ள குற்றமற்ற மங்கையர்களிந்தப்படி யனேகம் வேடிக்கைகள்நடத்த அதிக சந்தோஷத்துடனேகூடவந்து இயமதரும ராஜனிருக்கப்பட்டஅரண்மனைவாசலுக்குமுன்பாகக்கோடிசூரியனும் கோடிசந்திரனுமொன்ருகக்கூடினதுபோல பிரகாசிக்கப்பட்டதங்கள்விமானத்தைவிட்டுக்கீழேயிறங்கி இயமதூதரானவர்கள்சொல்லஅவடத்திலே நிற்பார்கள். எ-று. (உ௬)

வேறு.

இயமனதவையையநண்ணி யேவலரிறைஞ்சியைய
பயனுடையநீருரைத்த பணிவிடைசிரமீதேற்று

நயனுறுமறவோர்தம்மை நன்குறவழைத்துவந்தோம்
புயறவிழ்கோயின்வாயிற் புறத்திடைநின்றாரென்றார்.

(எ-து.) இயமதருமராஜன் சபையிலே தூதர்கள்போய்த் தெண்டன்பண்ணிசுவாமிதேவரீர்சொன்னபெருமையுள்ளபணி விடையைத்தலைமீதேற்றிபூலோகத்திலேதர்மஞ்செய்தபுண்ணிய வான்களைநன்மையோடுஅழைத்துவந்தோம் அவர்கள்மேகம்த வழும்நமது அரண்மனைவாசற்புறத்தில்நிற்கிறார்களென்றார்கள்.

நவைதலிற்சாந்தமெல்லா நசைக்கொடுநடந்ததென்னக்
கவினுடையாதவன்றன் கான்முளையெழுந்துவந்து
தவறறுமறவோர்தம்மைத் தனித்தனிநோக்கிநன்றாய்
புவனியிலும்மைக்காணப்புண்ணியஞ்செய்தேனென்றான்.

(எ-து.) பின்னுந்தூதர்கள் சந்தனமுதலிய உபசாரங்கள் நடந்ததென்றுசொல்லக்கேட்டுமிகுந்தசாந்தகுணத்துடன்சூரிய குமாரனான எமதர்மராஜன் தமது சிங்காதனத்தைவிட்டெழுந் திருந்து கோபுரவாயல்மட்டும் நடந்துவந்து அவடத்திலே நிற் கிற தர்மவான்களையெல்லாம் தனித்தனியாகப்பார்த்து உங்களை இவடம்நான்பார்க்கப்புண்ணியஞ்செய்தேனென்றான். எ-று. ()

என்றபின்சித்திரகுற்ற ரெனுமிருவரையுநோக்கி
நின்றிடுமிவர்தாஞ்செய்த நெறிமுறையாவநீவீர்
மன்றவேயுரைமினென்ன வாய்ந்ததங்கணக்குவாங்கி
மென்றிருவமுதுசெய்தாங் கவரிவைவிளம்பலுற்றார்.

(எ-து.) இப்படிப் புண்ணியவான்களைப்பார்த்துச் சொன் னபிறகுஎமதர்மனானவன்சித்திரகுற்றரென்கிறகணக்கரிருவரை யும்பார்த்து இங்கேநிற்கிற விவர்கள் பண்ணினபுண்ணியங்களை யெல்லாம்நீங்கள்சொல்லுங்களென்றுகேட்க, அப்போதுசித்திர குற்றர்கள் தங்கள்கணக்கைவாங்கிக்கொண்டுதேவாமுதங்கொ ண்டவர்களைப்போல களிப்புடன் சொல்லுகிறார்கள். எ-று. ()

நீடபகாரஞ்செய்த நெறியிலார்தமக்குவன்பின்
னேடுபகாரஞ்செய்த வுத்தமரிவரேகண்டாய்
பீடுயர்தமதுதார மன்றியேபிறதாரத்தை
தேடருந்தாயாய்க்கண்ட சீரியரிவரேகண்டாய்.

(எ-து.) எமதர்மராஜனே கேளும். இவர்தனக்கு எந்நாளு மபகாரங்களைச்செய்தபேருக்குஅன்புடனேஉபகாரங்களைப்பண்

ணினவர், இவர்பெருமையுள்ள தன்னிடதாரமேயல்லாமல்அய லார்மனைவிகளைதேடுதற்கரிதாகியதாயைப்போலெண்ணுஞ்சீர்த் தியைவாய்ந்தவர் பாரும். எ-று. (௩௦)

இவர்சிவதலத்திற்கீறென் றெய்திடாவாறுசெய்தோ
ரிவர்சிகரத்திலொன்று மெழிலுடைத்தீபமிட்டோ
ரிவர்சிகரத்தின்மிக்க பொற்குடமெடுத்துவைத்தோ
ரிவர்பிறர்புரியறத்திற் கீறுறவகைபுரிந்தோர்.

(எ-து.) இவர் சிவதலத்திற் கோரழிவுவராமல் பண்ணின வர், இவர்கோபுரத்திலே நித்தம்தீபமேற்றிவைத்தவர், இவர்கோ புரத்துக்குப் பொன்னாலே குடம்பண்ணிவைத்தவர், இவர்ஒருத் தர் செய்யுந்தர்மம் தவறாதபடிக்கு நிறைவேற்றினவர். எ-று. ()

சிவனுக்குப்பூவனங்கள் செய்தவரிவரதற்குச்
சுவைபெற்றகேணிதொட்டுத் தோயமீய்ந்தவரித்தூயோ
ரவமறப்பத்தராபத் தகற்றினரிவர்நெய்யோடு
நவமிக்கதிபதானம் நல்கினரிவரெங்கோவே.

(எ-து.) இவர்சிவனுக்குநந்தனவனம்வைத்தவர், இவர் அத ற்கு ருசிபெற்றஜலமுள்ளகேணிவெட்டிக்கொடுத்தவர், இவர்சிவ பத்தருக்குஆபத்தைநீக்கினவர், இவர், நெய்யுடனேபுதுமையான தீபதானம்பண்ணினவர் எங்கள் ராஜாவே. எ-று. (௩௨)

கங்கையாகியதீர்த்தங்க ளாடுகவென்றுகையில்
மங்குறாப்பொருளையள்ளி யீய்ந்தவரிவர்காண்மன்னா
பங்கமாயுலகிலுற்ற சிறுவிலைப்பருவத்தியாற்குந்
தங்குமோதனமளித்த தவரிவர்சூலவேலோய்.

(எ-து.) இவர்கெங்கை முதலாகிய தீர்த்தங்களிலே முழுகி வாருங்களென்று அவரவர்கள் கையிலே மங்காதபொருள்களைக் கொடுத்தவர், ராசாவே இவர் அகவிலைகுறைந்தபஞ்சகாலத்திலே யெல்லாருக்கும்அன்னங்கொடுத்தவர் சூலாயுதம்பிடித்தளமதர்ம ராசனேயென்று பின்னுஞ்சொல்லுவார்கள். எ-று. (௩௩)

திடமொடுபருப்பதாதி சிவதலத்தேகுவோர்க்குத்
தொடுகழலளித்துநின்ற தூயவரிவர்காண்மன்னா
நெடுநெறியின்கண்மாறா நீர்மையிற்சாலைசெய்தாங்
கிடர்படாதன்னதான மீய்ந்தவரேபாராய்.

(எ-து.) இவர் பர்வதமுதலான சிவஸ்தலங்களுக்கு திடமா கப்போகிறவர்களுக்குபாதரட்சைகொடுத்தவர், இவர் நெடுந்தூர

மான வழிகளினிடையிலே மாருதநிழலுண்டாக சாலைவைத்து இடரில்லாமல் அன்னதானம் பண்ணினவர். எ-று. (௩௪)

அறிவுள்ளோர்தளராவண்ண மளித்தவரிவர்தானங்கள்
நெறிகொள்பாத்திரருக்கீய்ந்த நீர்மையரிவர்மாதுன்ப
முறுபொழுதடைந்தோர்க்கின்ப முதவினரிவர்காறேய
விரைதலங்களுக்குச்சென்ற வினியவரிவர்காண்வேந்தே.

(எ-து.) இவர் ஞானமுள்ள பெரியோர்களை தளராதபடிக்கு இரக்ஷித்தவர், இவர்நல்ல சற்பாத்திரமானவர்களுக்குத் தானங் கொடுத்தவர், இவர்பயந்து அடைக்கலம்வந்த பேர்களுக்கு அந்த பயத்தைநீக்கி இன்பங்கொடுத்தவர், இவர்பாதந்தேயச்சிவஸ்தல ங்களுக்குப்போன நல்லோர் அரசனே இவர்களைப்பாருமென்றார் கள். எ-று. (௩௫)

இவர்தடங்கோவில்சோலை யிலங்கவுண்டாக்கினோரா
மிவரறிஞரையழைத்தே யிருந்தகன்னியையளித்தோர்
இவர்மறையவர்புரந்தோ ரினியவாலாத்தியென்று [தே.
மிவர்விடையுடையோன்முன்ன ரெடுத்தவரிவர்காண்வேந்

(எ-து.) இவர் தடாகங்கள் திருக்கோவில்கள் சோலைகள் விளங்கவுண்டாக்கினவர், இவர் அறிவுள்ளவொருவரையழைத்து தன்மகளை கன்னிகாதானமாகப்பாணிக்கிரகணஞ்செய்துகொடுத் தவர், இவர் வேதங்கற்ற பிராமணரை இரக்ஷித்தவர், இனிமை யுள்ளவாலாத்தியை யென்றைக்கும்ரிஷபத்தையுடையபரமேஸ் வரன்முன்னே எடுத்தவரிவர், பாரும் அரசனேயென்றார்கள். ()

ஈண்டுநின்றோர்கடங்கட் கேற்றகாலத்திலன்பு
தூண்டமுன்னூற்கல்யாணம் புரிவித்ததூயர்கண்டாய்
ஈண்டுநின்றோர்தாய்தந்தை சுற்ற மென்றிருந்தோர்கோபந்
தூண்டவேபிழைசெய்தாலும் பொருத்தருடியர்வேந்தே.

(எ-து.) இவ்விடத்திலேநிற்கிறவர்கள் தங்களுக்குத்தக்கா லத்திலே அன்புடன் உபவீதகல்யாணம்பண்ணிவைத்தவர்கள் இவ்விடத்திலே நிற்கிறவர்கள் தாய் தகப்பன்சுற்றத்தார்கள்கோ பம்பிறக்கஎன்னபிழைசெய்தாலும்அவற்றையெல்லாம்பொருத் திருந்தவர்கள். எ-று. (௩௭)

கோவொடுபூமிபூரி குலமணியென்னுந்தானந்
தாவறவீய்ந்தோரின்னோர் தம்மைவந்தடைந்திருந்த

வோவிலேழையருந்தம்போ லுற்றிடவளித்தோரின்னோர்
மேவியபொருளைநல்லோர் மேவுழியளித்தோரின்னோர்.

(எ-து.) இவர்கள்கோதானம் பூதானம் சொர்னதானம்நவரத்தினதானங்களென்றுசொல்லப்பட்ட தானங்களைத்தாழ்வில்லாமற்பண்ணினபேர்கள், இவர்கள்தர்மத்தோடே சம்பாதித்த பொருள்களை நல்லோர் பெரியோர்களைப் பார்த்துக் கொடுத்தவர்கள். எ-று. (ருஅ)

புண்ணியகாலந்தன்னிற் பரிவொடுவிரதநோன்பு
பண்ணினோரிவர்தாய் தந்தைதமைத்தினம்பணிந்தோரின்னோர்
நண்ணினரலக்கணுற்ற நாளிற்றன்றிருவனைத்து
முண்ணயப்பொடுபகிர்ந்தே யுதவினரிவர்காண்வேலோய்.

(எ-து.) இவர் புண்ணியகாலங்களிலே சந்தோஷமாய்தவம் நோன்புகளைப்பண்ணினவர், இவர் தாய்தகப்பனைத் தினந்தோறும்பணிந்தவர், இவர் சினேகிதர்கள்தரித்திரமடைந்தபோது தன்னுடையசெல்வங்களை யெல்லாஞ் சந்தோஷத்துடனேபங்கிட்டுக்கொடுத்தவர், கூர்மையுள்ள வேலைத்தாங்கிய அரிசேஇவர்களைப்பாரும் என்றார்கள். எ-று. (ருகூ)

அறிவுளோர்சன்றானத் தமைந்துறமடஞ்சமைத்து
நெறியுடனளித்தோரீண்டு நிற்கின்றவறவோரைய
மறுவில்பேறறமென்றோதும் வழிபிழையாமலென்றும்
பிறிவறநடந்துகொண்ட பெரியவரிவர்காண்மேலோய்.

(எ-து.) ஐயனே, ஞானமுள்ளபெரியோர்கள் சிவஸ்தலங்களிலேயிருக்கமடங்கட்டிக்கொடுத்தவரிங்கே நிற்கிறதருமவான்கள்குற்றமில்லாதபெரியபுண்ணியத்தின்வழியிலே எக்காலத்திலுந் தப்பாமல் நடந்துகொண்ட மகாபெரியவர் இவர்களைப்பாரும் மேலானவரசனே என்றார்கள். எ-று. (சுo)

உயர்சிவசரணர்வந்தா லெதிரெழுந்துவப்பினோடு
நயனுறவிறைஞ்சிநின்ற நன்மையரிவரேபாராய்
வியனுடைசிவபூசைக்கு வேண்டுபகரணமியாவும்
பயனுறக்கொடுத்தநீதிப் பண்பினரிவரேபாராய்.

(எ-து.) மேலான சிவசரணர்வந்தால் எதிராகவெழுந்திருந்து சந்தோஷத்துடனேகும்பிட்டுநிற்கிறமகாநல்லவர்களிவரைப்பாரும், இவர் சிவபூசைக்கு வேண்டும் பண்டங்களைக்கொடுத்து நடத்திவைத்தநீதியும் பண்புமுள்ளவரிவரைப்பாரும். எ-று. ()

அவமுறுதுயில்கொளாம லணைமிசைச்சாய்ந்திடாமல்
கவலைவேறுற்றிடாமற் காதலோடறிவொருங்கித்
தவலறுமுணவுமெய்யும் புளகமேசாரவென்றுஞ்
சிவகதைகேட்டிருந்த செம்மையரிவரேபாராய்.

(எ-து.) சிவபுராணம்சிவகதைபடிக்கிறபொழுது அவலமான தூக்கங்கொள்ளாமல் மெத்தைதழுவணையிலே சாயாமல் வேறொருகவலைகொள்ளாமல்சிவகதைமேலேயாசையாய்அறிவுபொருந்தி மனதுஞ் சரீரமும்பூரிக்கத்தினந்தினம் சிவகதைகேட்டிருந்த செம்மையானவ ரிவரைப்பாரும். எ-று. (சஉ)

என்றுயர்கணக்கர்கூற விருமறத்தவரைநோக்கி
தன்றிருபாணிகூப்பித் தனிமணிமுடிதுளக்கித்
துன்றியமகிட்சிபொங்கத் தூவயன்வாய்மலர்ந்து
பொன்றிகழ்தண்டந்தாங்கும் புரவலனிசைக்கலுற்றான்.

(எ-து.) இப்படி சித்திரகுத்திரர் என்னும்கணக்கர்வாசித்துக்காண்பிக்க அப்பொழுது இயமதர்மனுவன் தர்மவான்களையெல்லாம் பார்த்து தன்கையைக்குவித்து கும்பிட்டு கிரீடமுடியையசைத்துசந்தோஷம்பொங்கிவழியவாயைத்திறந்துகாலதண்டந்தாங்கிய இயமதருமராசன்சொல்லுகிறார். எ-று. (சங)

இனிதறம்புரிந்தநீவி ரீண்டெழுந்தருளுதற்கு
முனமெனத்தவஞ்செய்தேனோ முடிவிலென்றூதருமமை
நனியழைத்திடவும்வந்திர் நன்குநீரிளைத்திர்கொல்லோ
புனிதனீரவர்செய்தீமை யாவையும்பொருமினென்று.

(எ-து.) இனிமையான தர்மஞ்செய்தநீங்களிவ்விடத்திலெழுந்தருளுவதற்கு நான்முன்னே என்னதவங்களைப் பண்ணினேனோ! அந்தியகாலத்திலே என்னுடைய தூதர்கள் உங்களைவந்தழைக்க விங்கேவந்திர்கள் நன்மையுள்ளநீங்கள்வழிநடைப்பட்டு இளைத்திர்களோ அவர்கள்செய்தகொடுமையைபொறுக்கவேண்டுமென்சொல்லி. எ-று. (சச)

மற்றவர்தம்மைத்தூய மணிவிமானத்திலேற்றிப்
பொற்றொடிக்கனிவாய்விண்ணிற் பூவையர்தமையுங்கூட்டிக்
குற்றமிற்றருமனுனேன் குறைவறுதுறக்கத்தேலப்
பற்றொடுதருமஞ்செய்தோர் செல்குவர்பரிவினோடும்.

(எ-து.) அந்தத்தருமவான்களையெல்லாம்பிரகாசமான வி

த்தினங்களினாற்செய்த விமானத்திலேற்றித்தங்கவளையலுஞ்சிவந்தகனிவாயுமுள்ள தேவரம்பைகளை அவர்களுடன்கூட்டிகுற்றமில்லாத இயமதர்மனானவன் குறைவில்லாத சொர்க்கலோகத்துக்குஅனுப்பஅவர்கள்சந்தோஷத்துடனேபோவார்கள். எ-று.

சென்றிடுகாலைமிக்க தேவர்வந்தெதிர்கொளப்போய்
நன்றுடைக்காமதேனு நன்மணியாதியெல்லாந்
துன்றிநின்றேவல்கேட்பத் தூயர்தம்முளமகிழ்ந்து
மன்றவீற்றிருப்பரந்த வானுலகத்திலென்றும்.

(எ-து.) தருமவான்கள்விமானமேறிப்போகிறவேளையிலே அந்த சொர்க்க லோகத்திலுள்ள தேவர்களெதிர்கொண்டுவந்து அழைத்துப்போகப்போயந்தப்பதவியிலேகாமதேனு கற்பகவிருக்ஷம் சிந்தாமணிமுதலான இஷ்ட காமியங்களைக்கொடுத்து, ஏவற்பணிவிடைகேழ்க்கத் தங்கள் மனது சந்தோஷத்துடனே அந்தத்தேவலோகத்தில் என்றைக்கும் நித்தியகலியாணகரமாக வீற்றிருப்பார்கள்.—எ-று. (சசு)

என்பனவறத்தோர்செய்கை யாவையுமினிதெடுத்துத்
தன்பரிவுடனேமிக்க தருமப்பிரசங்கனோத
வன்பில்சானந்தமென்னு மாதவனிணையிலாநல்
லன்பெனுங்கடலுண்மூழ்கி யருத்தியோடறையலுற்றான்.

(எ-து.) இப்படி தர்மவான்களுடைய செய்கைகள் எல்லாவற்றையு மினிமையாகவெடுத்து சந்தோஷத்துடனே தர்மப்பிரசங்கமகாரிஷியானவர் சொல்லக்கேட்டு மகாதபசியான சானந்த முனிவர் அன்பென்னுங்கடலிலேமுழுகி அதிகவாசையுடனே சொல்லத்தொடங்கினார்.—எ-று. (சஎ)

நல்வினைச்சருக்க முற்றிற்று.

ஆக பாயிரம்உட்படசருக்கம்-உ-க்கு

திருவிருத்தம்-கஙஉ.

---



கணபதிதுணை.




திருச்சிற்றம்பலம்.

## மூன்றாவது

# தீவினைச்சருக்கம்.

தருமப்பிரசங்கனென்னுந் தனிப்பெயர்நினக்கேயொக்கும்
மருளற்றமுனிவநின்போ லறக்கதைசொல்வாருண்டோ
புரிவற்றமனத்தினேடும் புல்லியவினைகள்செய்தோ
ரிருள்மிக்ககதியையோது கென்றலுமுரைக்கலுற்றான்.

(எ-து.) தருமப்பிரசங்கரிஷியென்கிறபேருமக்கேதகும், தயவுள்ளமுனிவரே? உம்மைப்போலே தருமகதையைத்தீர்க்கமாய் சொல்லுவாருண்டோ! இரக்கமில்லாதமனதுடனேபாவங்களைச் செய்தபேர்கள்போகிறவழிகளையுஞ்சொல்லவேணுமென்றுசானந்தமுனிவர்கேட்க, தருமப்பிரசங்கமுனிவர்சொல்லுகிறார். எ-று.

வேறு.

ஒள்ளியகால னகர்க்கதிபாவர் புகுந்தாரி
கொள்ளிசுடுங்கற் சல்லியனுக்குங் கொடிதாகுந்
துள்ளநெரிஞ்சிக் கனிகளுறுத்துந் தொலையாமல்
வெள்ளரியின்பழ மென்னநெகிழ்ந்து வெடிக்குங்கால்.

(எ-து.) நீதிதவராத காலனிருக்குநகரமாகியஇயமலோகத்திற்குகொடும்பாபிகள்போகும்வழிகளிலேகொள்ளிகள் சுடும் கால்களிற்சல்லிக்கல்லுகளாறுக்கும் பொல்லாத நெரிஞ்சிமுள்ளுகள் துள்ளும்படிகாலுகளிலேயுறுத்தும், இப்படி தொலையாமலிருக்கிறபடியினாலே வெள்ளரிப்பழம்போலே வெந்து வெடிக்கும் கால்கள். —எ-று.

நீடியுடற்றுங் கோடியிருக்கும் நெடுமுள்ளின்
காடுபுடைக்குந் துக்கமுறுத்துங் காணுங்காற்
கேடுகொடுக்குங் கோரமிகுக்குங் கிளர்தாரி
பாடுபடுத்துந் துற்கந்தங்கள் பரந்தேறும்.

(எ-து.) நெடுங்காலம் வருத்துவதாய் வளைந்திருக்கப்பட்ட நெடியமுள்ளுள்ள இண்டங்காடுகள்மேலே மோதும், துக்கந்தானேநெஞ்சையுளைக்கும், பார்க்குமிடத்தில்பொல்லாதகேடுகளைக் கொடுக்கிற கொடுமையே மிகுந்திருக்கும், வெகுபாடுகளை யெல்லாம்படுத்தும் கெட்டநாற்றமெங்குவீசும்.—எ-று. (௩)

ஓடுதனிர்கன லிட்டுவறுத்திடலொப்பாகுங்
கோடியவெந்திட வெவ்வெயிலேறுங்கொடுவண்டு
பீடிலுடம்பு தடிக்கவடிக்கும் பெரிதாகத்
தூடுபிளக்கு நெடும்புலியெங்கணு முளதம்மா.

(எ-து.) நெருப்பிலே யோட்டைக்காயவைத்துவறுத்தது போல் உடம்பு அழிந்துவெந்துபோகப் பொல்லாதவுக்கிரமான வெயிலெரிக்கும் உடம்புவீங்கும்படி விஷவண்டுகள்வந்து அடிக்கும், வீங்கிய உடம்பைஅடித்துப்பிளந்துபோடும்படி நீண்டபுலிகள் எங்கே பார்த்தாலுமிருக்கும்.—எ-று. (௪)

அங்கமனுங்க வருத்துங்குளவியு மருநீழற்
றங்குமிடத்தி லழுத்தியிருக்குந் தடைமுள்ளும்
பொங்கிவிழுங்கிட வாய்கடிறந்து பொருபேயும்
துங்கநெடுங்கண வாய்களுமெங்குந் தொகுமாதோ.

(எ-து.) வழிகளில்குளவிகள்சரீரம்வாடும்படி வருந்தச்செய்யும், தோன்றும் அருநிழலில் தங்கும்படி போகிறபோது முள்ளுகளழுந்தத்தைக்கும், பக்கங்களில் பூதவேதாளங்கள் எடுத்து விழுங்க ஆக்கிரமித்து வாயைத்திறக்கும், அடுத்தடுத்து நெடிய கணவாய்களு முண்டாயிருக்கும்.—எ-று. (௫)

மாருதம்விண்ணிற் கொடுபோயெறியும் வலிதன்னால்
கூரியமுள்ளில் விழுந்துகிடக்குங் கொடியோர்தம்
பேருடலென்புமுறித்திடலோடும்பிடித்தம்மா
காரினமென்ன வறைந்திடுபேயின் கணமாடும்.

(எ-து.) பின்னும் பாவிகளைவொருசுழல்காற்றுவந்து ஆகாசத்திலே தூக்கிக்கொண்டுபோய் கரகரவென்றுசுழற்றியெறிவதி

னல் கூறிய முட்புதரில் விழுந்துகிடக்கும் அந்தப் பாபிகளு டைய பெரிய உடலும் எலும்புமுறிய அவடத்திலுள்ள பேய் கூட்டங்க ளிடிபோல் கொக்கரித்துப் பிடித்திழுத்து ஆடிக்கொ ண்டுதிரியும்.—எ-று. (சுா)

படைநிகருகிராற் சருமமுரித்துப் பரிவோடு
கடிதுளிருக்குந் தசைகளைமெல்லுங் கடியும்பேய்
வடியுமிரத்தந் தலையோடதனில் வறிதேற் றுங்
குடியுமெனனின் றதிருங்குறளுங் குதிகொள்ளும்.

(எ-து.) வழியிற்கொடிய பசாசுகள் வாளொத்த நகத்தின லேபாவிகளுடையஉடம்பின்றோலையுரித்து சந்தோஷத்துடனே யுள்ளேயிருக்கிறமாங்கிஷங்களைப்பிடிங்கித்தின்னும் அதிலொழு குகின்ற இரத்தங்களை மண்டையோட்டிலே பிடித்துக்கொண்டு ஒன்றுக்கொன்று குடியுங்களென்று நின்றுகொண்டதிரும் குற ளிப்பசாசுகளுங்கூட குதிக்கும்.—எ-று. (எ)

அங்கியினூடுசி வந்தகரும்பொன் னசலத்தே
மங்குறவேறும் பொழுதுநெருப்பு மழைபெய்யும்
பொங்கியெழுந்தே கடுவெம்பவனம் புடைவீச
அங்குவெடித்தே நீர்சொரியப்பே ருடல்வீங்கும்.

(எ-து.) அக்கினியிலே சிவக்கக்காய்ந்த இரும்புமலைமேலே பாவிகள் ஏறும்போது நெருப்புமழைபெயும், அதிகஉக்கிரமாய் கடுங்காற்றெழுந்து பக்கங்களில்வீசும், அதினல் அந்தப்பாவிகளு டம்பு வீங்கிவெடித்து ஊன்தண்ணியொழுகும்.—எ-று. (அ)

இடையளவாகுந் தேளின்குழியு மிரங்குற்றுற்
கொடியபிசின்போ லொட்டிவிடாத குழைசேறு
நெடிதுகொதிக்குஞ் சுண்ணமடுக்க ணிலையாத
உடலினகற்றும் புனலின்கால்களு முளமாதோ.

(எ-து.) பின்னுமந்த வழியிலே இடைமட்டும் பள்ளமான தேள்களிருக்குங் குழிகளும்காலில்கொடியபிசின்போலவொட் டிக்கொண்டுவிடுங்கப்படாத குழைந்தசேறுகளும், அனல்போற் கொதிக்கப்பட்டசுண்ணமடுக்களும்நிலைக்காத சிறுநீர்வாய்க்கால் களுமுண்டாயிருக்கும்.—எ-று. (சு)

சுடுகூர்மணலுங் கபடக்கிணறுஞ் சுத்திக்கொண்
டடிமீதேறிக் கவ்வும்பணியு மடுங்கோபம்

படர்சாகினிடாகினி கண்முழங்கப் படியாழ்வீ
ழிடியோதையுமுண் டன்பில்லார்போ மிடமெங்கும்.

(எ-து.) சுடப்பட்டநொய்யமணலும், கால்வைத்தாலிடியும் படியான மேலேமூடிக்கபடமான கள்ளக்கிணறுகளும், கால்கள் மீதேறிச் சுற்றிக்கொண்டுகவ்வும் பாம்புகளும், கோபத்தோடுசாகினிடாகினியென்னும்பூதங்கள்முழங்குஞ்சத்தங்களும், அதனால் பயமும் உண்டாயிருக்கும், அன்பில்லாத பாவிகள் போகுமிடமெங்கும்.—எ-று. (௧0)

ஒன்றினெடுந்தாள் வைத்திடில்வாங்க வொருசாமஞ்
சென்றிடுமளறுங் குருதிகுடித்துச் செறியூனைத்
தின்றிடுமரவுங் கொத்துங்கழுகுஞ் செறிசூறும்
துன்றிவெகுண்டு கடித்திடுநாயுந் தொகுமெங்கும்.

(எ-து.) பாவிகள் போகின்றவழியிலே வைத்தகாலைவாங்க ஒரு சாமம் செல்லும்படியான சேறும், இரத்தங்களைக்குடித்து ஊனைத்தின்னும் பாம்புகளும், கொத்திக்கொத்திப்பிடுங்குங்கழுகுகளும், கூட்டங்கூடிகடிக்கும் மூஞ்சூறுகளும், கூடிக்கொண்டு சீறிக்குலைத்துக்கடிக்கும் நாய்களும் இருக்கும்.—எ-று. (௧௧)

வேறு.

காலன்படர் பாசங்கொடு கழுத்திற்பிணித் திழுப்பார்
சூலங்களி லெடுத்தாப்பொடு தூக்கிக்கொடு செல்வார்
வாலென்புமு றிந்தேவிஷ மயிர்பற்றியு தைப்பார்
சிலங்களை மறந்தேமறஞ் செய்தோர்களை வைதே.

(எ-து.) இப்படி அவதிப்படவும், இயமதூதர்சிலரைப்பாசத்தினாலே கழுத்திற்சுருக்கிட்டுஇழுப்பார்கள், சிலரைசூலங்களிலேகுத்தி தூக்கியெடுத்து கொக்கரித்துக்கொண்டு போவார்கள் சிலரை எலும்புமுறிய மயிரைப்பிடித்துவுதைப்பார்கள், தருமங்களைமறந்து பாபங்களைச்செய்தசிலரைப் பின்னும்வைது கண்டிப்பார்கள்.—எ-று. (௧௨)

மேட்டேற்றுவர் பள்ளத்திடை வீழத்தள்ளி மிதிப்பார்
காட்டாற்றுவன் மீனனைவை கவ்விக்கொள விடுப்பார்
மாட்டாதிருப் பார்தங்களை வன்றூள்கொடு புடைப்பார்
சேட்டாளிக ளெனவந்தெதிர் சீறிக்குதி கொள்வார்.

(எ-து.) இயமகிங்கிராள் சிலரை உயர்ந்தமேட்டிலேற்றிப் பள்ளத்திலே குப்புறத்தள்ளிமேலேமிதிப்பார்கள், சிலரைக்காட்டாற்றிலே முதலைக்கவ்விக்கொள்ளவிடுவார்கள், நடக்கமாட்டாதிருக்கப்பட்ட சிலரைபலனுள்ளதங்கள் காலினாலேஉதைப்பார்கள், யாளிபோல்வந்தெதிர்த்துச்சீறிக் குதிப்பார்கள்.—எ-று. ()

மிகவெந்திடு புளினந்தனை மிதித்தோடவி டிப்பார்
இகல்கொண்டுபு ரண்டோலமிட்டிளைப்பத்துறந் தடிப்பார்
அகநொந்திட மறுதாரியி னழைப்பார்சின மிழைப்பார்
தகுமங்கியி டும்பாரையில் வறுப்பார்மிக நறுக்கி.

(எ-து.) பின்னுந்தூதர்கள்சிலபாவிகளை வழிகளிலேமிகுதியும் வெந்துசுடப்பட்டமணல்மேட்டிலேமிதித்தோடச்சொல்லி இடிப்பார்கள், சிலபேரை அதில் பிரண்டுவிழுந்து ஓலமிட்டுகதறியிளைக்கும்படி துறத்தியடிப்பார்கள், சிலரைமனங்கலங்கபோற வழியைவிட்டுவேறுவழியிலழைப்பார்கள், சிலரைக்கோபிப்பார்கள், சிலர்தேகத்தை நெருப்பிட்டு காய்ந்தபாறையிலே துண்டு துண்டாக நறுக்கி வறுப்பார்கள்.—எ-று. (கச)

இருக்கும்பொழுதெழுந்தோடெனவிடிபோல்பசுந்தடியாற்
பெருக்குந்துயர் படமோதுவர் பேருருவை முறிப்பார்
நறுக்குங்குதி யறவென்பர்கள் நடுநாக்கினை யறுப்பா
ரெரிக்கும்படி பிரண்டைக்கொடி யிடித்தேநலங்கிடுவார்.

(எ-து.) வழியில் நடக்கமாட்டாதிருக்கிற சிலரை யெழுந்தோடச்சொல்லியிடிபோலெயதிர்ந்துபச்சைத்தடியாலேதுயரம் பெருகஅடிப்பார்கள், பெரியதொடையைமுறிப்பார்கள்குதிக்காலையறநறுக்குமென்பார்கள்சிலபேரைபேசுநாக்கையறுப்பார்கள் சிலபேரை வுடம்பெல்லாமெரியும்படி பிரண்டைக்கொடியையிடித்து சர்வாங்கமு நலங்கிடுவார்கள்.—எ-று. (கரு)

போவாவென மார்பிற்பெரு வெரினிற்புடைத் திடுவா
ரோவாதெழுந் தலரும்படிக் கொருபாரெடுத்தரைப்பார்
கோவாய்கொடி னுடையக்கரங் கொடுமோதி யலைப்பார்
தீவாய்களில் கத்தும்புனல் விடுப்பார் படர்சிலரே.

(எ-து.) தூதர்கள், சிலரைப்போவென்றும் வாவென்றும் மார்பிலும் பிடரியிலுமிடிப்பார்கள், சிலரையோயாமலெழுந் தல

ரத்தக்கதாகஉபத்திரவம்பண்ணுவார்கள்,சிலரை அம்மியில்வை த்தரைப்பார்கள், சிலபேர்களைத் தாள்வாய்களும் தாடைகளுமு டையும்படி குத்துவார்கள், சிலருடையவாயிலே சிறுநீரைவிடு வார்கள் சிலதூதர்கள்.—எ-று. (கசு)

ஆங்கேபெரு மலமூத்திர குழியுத்தன னவற்றிற்
பாங்காயருந் திடுவீரெழு பசிதாப மடங்கப்
போங்கோளென வுதிரந்தசை சிதரும்படி புடைப்பார்
தீங்கானவை தாமிவ்வகை செய்வார்மிக வைவார்.

(எ-து.) சிலரை அதோமலக்குழியும் மூத்திரக்குழியுமிருக் கின்றன, அதிலே உங்களுக்குண்டானபசியடங்கத்தின்னுங்கள் தாகமடங்கக் குடிக்கப்போங்கள்என்றுசொல்லிஉதிரமுஞ்சதை யும் சிதரும்படி அடிப்பார்கள்,இயமதூதர்கள்பாவிகளை இப்படி துன்பப்படுத்தியும்,கடுஞ்சொல்லால்வைவார்கள்.—எ-று. (கஎ)

பாதங்களு ளைந்தேநனி பதைத்தேபடி யுதையால்
மோதுங்கதை யாலங்கை முறிந்தேவிழ வுடைந்தே
காதம்பல வாயோரடி களைததேயுட லிளைத்தே
யோதுந்தம பாவங்களை நினைவார்மன முளைவார்.

(எ-து.) பாவிகள் இப்படிப்பட்ட உபத்திரத்தினலே தங் கள் கால்களெல்லாம் வலியெடுத்து மிகுதியும்பதைத்து அடியா லும் உதையாலும், மோதுங்கதையாலும், கைகள்முறிந்தும், கண்களுடைந்தும், ஒருகாதவழி அனேகங்காதவழியாகக்கண்டு வோரடியெடுத்துவைக்க துர்ப்பலமாய்களைத்து உடலிளைத்து தங்கள் தங்கள் பாவங்களை நினைத்துக்கொண்டு மனக்கவலையுற் றூர்கள்.—எ-று. (கஅ)

இணங்தேபசி வெயிலாலுட லிருபுண்கணினீரா
னணைந்தேவலி குறைந்தேநடு நடுங்கானிடு யொடுங்கா
மனந்தான்மிகப் பயந்தேதடு மாற்றங்கொடு தீயோர்
முனந்தீமைகள் செய்தோமெனமொழிவாருளமழிவார்.

(எ-து.) பசியாலும் வெயிலாலும் மனமிரங்கி துக்கித்து அழுதகண்ணீரா லுடல்நனைந்து பலங்குறைந்து நடுநடுங்கி மிக வும் ஒடுங்கிப்பயந்து தடுமாற்றங்கொண்டுதாங்கள் முன் பூமியில் வாழ்கின்றபோது பாவங்களைப்பண்ணினேமேயென்று சொல்லி நெஞ்சமழிவார்கள்.—எ-று. (கசு)

நல்லோர்களை யொறுத்தோமுயர் நடுநீதியை வெறுத்தோம்
புல்லோருட னடைந்தோமொளிர் போதத்தினைக்களைந்தோ
மொல்லாதன செய்தோமற மொழிந்தோந்தவ மழிந்தோங்
கொல்லாவுயிர் கொன்றோமதி கோபத்துட னின்றோம்.

(எ-து.) நல்லவர்களை மனநோவப்பண்ணினோம், நடுவுநிலைமையைத்தள்ளினோம் அறிவில்லாதவரோடு கூடினோம்,நல்லவுண்மையான ஞானத்தை பெடுத்தெரிந்தோம், அடாதகாரியங்களைச்செய்தோம், தருமத்தை யொழிந்தோம், தவங்களை யழித்தோம் கொல்லாத சீவனைக்கொன்றோம், அதிகமான கோபத்துடனேயிருந்தோம்.—எ-று. (உ௦)

தீர்த்தங்களி லெய்தோமுயர் தெய்வங்களை வைதோம்
பார்த்துண்டிலமிரப்போர் தமைப்பழித்தோ மவம்புரிந்தோம்
ஏற்றும்பெரி யோர்வந்திடி லெழுந்தோ மிலமிருந்தோ
மாத்துன்மதி யடைந்தோம்பவ வழியூடு நடந்தோம்.

(எ-து.) ஒரு தீர்த்தங்களிலே சென்று முழுகோம்,உயர்ந்த தெய்வங்களைப்பழித்தோம்பகுத்துண்டிலோம்,இரக்கின்றவரைப்பழித்தோம்,அவமானகாரியத்தைப்பண்ணினோம், சிவனைத்துதிக்கும்பெரியோர்கள் வந்தால் எழுந்திராமலிருந்தோம், மகத்தான துர்ப்புத்தியையடைந்து அந்தபாவவழியிலே நடந்தோம்.

அரனன்பரைத்துறந்தோம்பெறுமனை தந்தையைமறந்தோம்
தருமங்களை யிரித்தோமிகழ் காமாதியைச் செறிந்தோம் [ம்
துருமந்தனைத் தடிந்தோமிதர்ச்சொலுமுண்மையைக்கடிந்தோ
பெருகும்பய னறநீதிகள் பிழைத்தோமிவ ணுழைத்தோம்.

(எ-து.) சிவனடியார்கள்நேசத்தைவிட்டோம்,பெற்றமாதா பிதாவை மறந்தோம், தருமங்களை நீக்கினோம், இகழப்பட்டகாமக்குரோதலோபமோகமத மாச்சரியங்களையடைந்தோம்,தோப்புகளைவெட்டினோம்;இதஞ்சொன்னவர்களைக் கோபித்தோம், மிக்கபயனைத்தரு நீதியைத்தப்பிநடந்தோம்,அதனால் இவ்விடம் உழைத்தோம்.—எ-று. (உஉ)

என்றின்னன பன்னியிவ ணிடர்பட்டிடு வோர்பால்
நின்றிங்கது நினைத்தாவதென் னீர்செய்பிழை பலவாந்
துன்றுங்களைக் கண்டாலுயர் தோஷந்தொடர்ந் தடரும்
கொன்றுண்ணுது மெனவந்தெதிர் கொதிப்பா ரியமதூதர்.

(எ-து.) இந்தப்படிசொல்லி இவடத்தில் வியசனப்படுகிற பாவிகளைப்பார்த்து இயமதூதர்கள், இவடத்தினின்றுஇப்போ துயினைந்தாலாவதேது, நீங்கள் முன்னே பலபாவங்களைச்செய் தீர்கள், உங்களைக்கண்டால்எங்களுக்குத் தோஷந்தொடர்ந்தட ரும் என்றுசொல்லி உங்களைக் கொன்றுத்தின்கிறோமென்று வந்து கோபிப்பார்கள்.—எ-று. (உ௩)

ஓடுஞ்சகட் டெதிரேயிரு கால்நீட்டிடு மவர்போல்
கோடும்பல பாவம்புரி கொடியீருமை வருத்திக்
கேடிங்கின மெடுத்துப்பல கிட்டிப்புரிந் திடினும்
தேடுந்தவ மாமுங்களைச் செறிந்தே விடலாமோ.

(எ-து.) ஓடிவரப்பட்டவண்டிக்கெதிரில்இரண்டுகாலையும் நீட்டுவார்களைப்போல் நீங்கள்செம்மையில்லாத அனேகபாவங் களைப்பண்ணின தீமையாளர், உங்களையிங்கே வருத்தப்படுத்தி யென்னென்ன கெடுதிகள்செய்தாலும்அதுவெல்லாம்எங்களுக் குத்தேடின தவங்களாகும், உங்களை யெளிதிலே விடலாமோ! என்பார்கள்.—எ-று. (உச)

வேறு.

இடர்ப்படி னும்மைப் புரந்திட வொணுதிங்
கெம்மிறை யாணையிவ் விடைக்கு
மடல்புரி யெமனூர் தனக்குமெண் பத்தா
ருயிர யோசனை யுளதா
முடலுயி ரின்னும் படுசெய லறியீ
ரொழிந்தது பூசினி கனியிற்
கடுகளவேனு மிலையெனச் சென்மின்
கடிதெனத் தடிகொடு புடைப்பார்.

(எ-து.) எங்களெசமானுடைய ஆக்கினைப்படிக்குதுன்பப் படுகிற வுங்களை நாங்கள் இரக்ஷிக்கக்கூடாது இன்னம் இவடத் திற்கும் இயமபுரத்திற்கும்எண்பத்தாறுயிரம்யோசனைகாதவழி யிருக்கின்றது, உடலும் உயிரும் இன்னம்படப்போகிறகாரியம் அறியமாட்டீர்கள். நீங்களின்னேரவரைக்கும்பட்ட துன்பங்க ளெல்லாம் ஒரு பூசினிக்காயிலே கடுகளவுமாத்திரமில்லை, இனி வேகமாகப்போங்களென்று அந்தப் பாவிகளை இயமதூதர்கள் தடியினலடிப்பார்கள்,—எ-று. (உரு)

சிலர்தமை யுதறி யுதறியே தரையிற்
செம்புனல் பெருகநின் றடிப்பார்
சிலர்தமை யோடு மோடுமென் றதிர்த்துத்
தெறுகதை கொண்டுமெய் புடைப்பார்
சிலர்தமை யுற்கை கைக்கொடு சுடுவார்
சிலர்தமைப் பாறைமே லறைவார்
சிலர்தமை யெழுக வென்றுமோ திடுவர்
சிலர்தமைத் தசைபிடித் தரிவார்.

(எ-து.) எமதூதர்கள் சிலபேர்களை இரண்டு கால்களையுஞ் சேர்த்துத்தூக்கி நெற்கூடுபோல வுதறியுதறித் தரையிலே உதிரமோட நின்றுகொண்டடிப்பார்கள்; சிலபேர்களையோடுங்களோடுங்களென்று தண்டாயுதத்தாலே அடிப்பார்கள்; சிலபேர்களை நெருப்புக்கொள்ளியைக் கையிலேயெடுத்துக்கொண்டு சுடுவார்கள்; சிலரைப் பாறைமேல் அறைவார்கள்; சிலரை யெழுந்திருவென்று மோதுவார்கள், சிலபேர்களை சதையைப்பிடித்து அரிவார்கள்.—எ-று. (உசு)

சிலர்தமை யெடுத்து மருங்கினை யொடிப்பார்
சிலர்மிசைத் தேட்டொடை புனைவார்
சிலர்தமை யரவந் தனையெடுத் திடுவார்
சிலர்தமைப் புலிக்கிரை கொடுப்பார்
சிலர்தமைப் பெரிய சிலைகளிற் குருதி
சிதறிட முட்டவைத் திடிப்பார்
சிலர்தமைக் காய்ந்த குறட்டினு லுடலைத்
தீய்ந்திடப் பிடுங்கிநின் றதிர்ப்பார்.

(எ-து.) பாவிகளானசிலரை இடையைஒடிப்பார்கள், தேள்களை மாலையாகக்கட்டிகழுத்திலேபோடுவார்கள், சிலர்மேல்பாம்புகளை யெடுத்துப்போடுவார், சிலபேரை புலிகளுக் கிரையாகக் கொடுப்பார், பெரியகுண்டுகல்லுகளிலேஉதிரஞ்சிதரத்தக்கதாய் தலையைப்பிடித்து முட்டுவார்கள், சிலபேர்களைக்கனலிற்காய்ந்த குறட்டினாலே உடல்தியச் சதையைப்பிடுங்கிக்கொண்டு ஆக்கிரமிப்பார்கள்.—எ-று. (உஎ)

கறடிமுன் வலியரிவ ரெனப் பிணித்துக்
கடிகொடுத் தெரிகுவர் சிலரை

தெறுதகர் வலிதிற் பாய்ந்திட வெதிரே
சிரங்களை வளைப்பர்சிற் சிலரை
மறுகுற வெகுண்டு குரைத்திடு ஞமலி
வாய்க்கெதிர் தள்ளுவர் சிலரை
குறுகிநின் றிசைபாடுக வென விழியிற்
கொடுமிள கிடுகுவர் சிலரை.

(எ-து.) சிலரைப் பலமுள்ளவர் இவர்களென்று காலையுங் கையையுங்கட்டிக் கறடிக்கிமுன்னாக வெடுத்தெறிவார்கள், சிலரைகோபமுள்ள ஆட்டுகிடாக்கள் பலன்கொண்டுபாய வெதிராகத் தலைகளை வளைத்துப்பிடிப்பார்கள். சிலரைக்கோபித்துக்குலைக்கின்றநாய் வாய்க்கெதிராக யலரத்தள்ளுவார்கள், சிலபேர்களை பக்கத்தில்நின்றுராகம்பாடச்சொல்லிக்காரமுள்ளமிளகையறைத்துக்கண்ணில் அப்புவார்கள்.—எ-று. (உஅ)

கூரிய சுண்ணப் பொடியினைக் கரைத்துக்
குடிக்கவென் றடிப்பர்கள் சிலரைப்
பாரிய பரியி னுட்புன லெருக்கம்
பாலொடு புகட்டுவர் சிலரை
நீர்விடா யகல நெருப்பினை யருந்தித்
தின்மினென் றடிப்பர்கள் சிலரை
யாருமுட் பசிநோ யகற்றிட மலத்தை
யருந்துமென் றிழுப்பர்கள் சிலரை.

(எ-து.) சிலரை கூரிய சுண்ணம்பைக்கரைத்துக்குடிக்கச் சொல்லி அடிப்பார்கள், சிலரைக் குதிரைமூத்திரமும்எருக்கம் பாலுங்கலந்து வாயிலேபுகட்டுவார்கள், சிலரைநீர்விடாநீங்கநெருப்பைமுழுங்குங்களென்று சொல்லுவார்கள், சிலரை உள்ளே பொருந்தியபசியாகியவியாதிபோக மலங்களைத்தின்னுங்களென்றிழுப்பார்கள்.—எ-று. (உகூ)

மங்கையர் தம்மை நினைந்து வேகின்ற
மற்றிவ ரென்றுதே ளணைமேற்
பங்கவா ளரவின் றலையணை கொடுத்துப்
படர்விடந் தன்னைமேற் றிமிர்ந்து
வெங்கன லொழுகு மயத்தினே வியத்தை
மேவுமின் மேவுமின் னெனவே

தங்கையி லுறுமத் திகையினு லடிப்பார்
சாலவுஞ் சிற்சிலர் தமையே.

(எ-து.) சிலபேர்களை இவர்கள் நினையாதபெண்களைநினைத்துக் காமாக்கினியிலே வேகிறபேர்களென்று அவர்களுக்குத்தேள்மெத்தைபரப்பி பாம்புதலைக்கணைகொடுத்து, அவர்கள்மேல் விஷங்களைத்திமிர்ந்து கரேமான அக்கினியொழுகக்காய்ந்த இரும்பினுலேசெய்தஒருபெண்பதுமையைஅணைத்துக்கொள் அணைத்துக்கொளென்று இயமபடாக்கள் தங்கள் கையிலேயிருக்கிற குதிரைச்சம்மட்டியினுலே அடிப்பார்கள்.—எ-று. (௩௦)

மயிர்பிடித் திழுத்து வீழ்த்தி மேலேறி
வாள்கொடு குளத்தினைத் துளைப்பர்
செயிர்கொடு விழியைப் பிடுங்குவ ரெலும்பு
சிதறிட வுலக்கையா லெறிவர்
குயமெடுத் துடலைக் கொந்துவர் வாயைக்
குடைகுவர் கைகளை முறிப்பர்
தயவிலா தலரத் தலைகளை யுடைப்பர்
சாடுவர் தூதர்சிற் சிலரை.

(எ-து.) எமதூதர்கள் சிலபாவிகளைமயிரைப்பிடித்து இழுத்து விழத்தள்ளி மேலேயேறிக்கொண்டு கத்தியினுலே நெற்றியைத்துளைத்துக் கண்ணைப்பிடுங்குவார்கள்; எலும்புசிதற உலக்கையாலே இடிப்பார்கள்; கொடுவாளெடுத்து உடம்புகளைக் கொத்திவாயைக்குடைந்துகைகளைமுறிப்பார்கள்;தயவில்லாமற்படிக்குஅலரஅலரத்தலைகளைஉடைத்துஅடிப்பார்கள்.—எ-று.

சிலரிடைப் பணியூர் பிலத்திடைப் புகுத்திச்
சிலரிடை வசியின்மேல் நிருத்தி
சிலரிடை யலகைப் பரிபிடித் தேகும்
செயலெனப் பற்றிவெங் கடுவிற்
சிலரிடை வருத்திச் சிலரிடைக் கருங்கற்
செறிவினுள் ளடிபிடித் திர்த்துச்
சிலரிடை யுருட்டிச் சிலரிடைத் துறத்திச்
சிறுவர் வீறுடைப் படரே.

(எ-து.) மகாபாவிகளானபேர்களைச் சிறுதிடத்திலே சர்ப்பங்களிருக்கப்பட்ட பாதாளபிலத்துவாரத்திலே புகுவித்தும்,

சிலஇடங்களில்வசியைநாட்டிநிருத்தியும்,சிறுதிடத்தில்குதிரைக்குப் பேய்பிடித்துப்போகுஞ் செயல்போல பிடித்துக்கொண்டு கூருள்ள முள்ளுகளில் வருத்தியும், கருங்கற்செறும்புகளிலே படுக்கப்போட்டுக் காலைப்பிடித்திழுத்து உருட்டியும்,சிறுதிடங்களில் ஓடத்துறத்தியும்இப்படிக்குச் சீறுவார்களியமபடார்கள்.

வெய்யவை தரணிக் கனற்புன லிடையே
வேகவைத் தக்கரை யேத்தி
துய்யசா னந்த முநிவனு லிவர்தந்
தொடர்தவப் பந்தநீங் குதல்போல்
மெய்யுறப் பிணித்த நாண்களை யவிழ்த்து
விறலுடைச் சமன்முனந் தொழுத
கையுடைத் தூதர் விடுத்தலு மிவ்வரைக்
காண்குதல் பாவமென் றறைவான்.

(எ-து.) ஊஷ்ணமண்டலத்திலேயுள்ள அக்கினிமயமான ஜலத்தினில்வேகவைத்து அக்கரையிலேயேற்றிச் சுத்தப்பிரகாசமுள்ள சானந்தமுநிவராலே இவர்களைத்தொடர்ந்த பாவக்கட்டுகள் நீங்குகிறதுபோல அந்தப்பாவிகளை அழுந்தக்கட்டியபாசங்களை யவிழ்த்து வெற்றியுள்ள இயமதர்மன்முன்னே தூதர்கள் கைதொழுது கொண்டுபோய்விடவும் இந்தப்பாவிகளைப்பார்க்கிறது தனக்குப் பாவமென்று அருவருப்பான்.—எ-று. (௩௩)

ஆங்கிவர் புரிந்த தீவினை யனைத்து
மோர்ந்தபின் வருத்துத மெனவே
தீங்கொரு சிறிது மணுகொணு திருந்த
சித்திர குற்றரை நோக்கி
பாங்குற வுரைமி னென்றலுந் தொழுத
பாணிய ராகிவந் தடைந்து
தாங்கிய கணக்கி னேட்டினைப் புரட்டிச்
சாற்றுவர் கூற்றன்மு னின்று.

(எ-து.) அந்த இயமதர்மராஜனனவன் குற்றமற்றசித்திர குற்றரைப்பார்த்து அங்கேயிவர்கள்செய்தபாவங்களையெல்லாம் ஒன்றுதப்பாமல்சொல்லுங்களென்றுகேட்க,அவர்கள்கும்பிட்ட கையராகி கிட்டவந்து கணக்கினையெடுத்து ஏடுகளைப்புரட்டிப் பார்த்துச்சொல்லுவார்கள்.—எ-று. (௩௪)

அரனுருத் தெரிசித் தவரல ரிவர்மெய்
யறமறிந் தவரல ரிவர்நீள்
பரிவொடு புனித தீர்த்தமா மிவையிற்
படிந்தவ ரலரிவர் பசித்தோர்க்
குரிமையி னுடனே யோதனம் பகுந்திட்
டுண்டவ ரலரிவர் மதுவைப்
பருகின ரிவர்தொல் லறமுடை யவரைப்
பார்த்தவ ரலரிவர் பெரியோய்.

(எ-து.) இவர்கள்சிவரூபத்தைத்தெரிசனம்பண்ணவர்களல்லர், மெய்யானதர்மங்களை யறிந்தவரல்லர், சந்தோஷத்துடனே புண்ணியதீர்த்தங்களிலே முழுகினபேரல்லர், பசித்துவந்தபேர்களுக் கன்னமிட்டுவந்தவரல்லர், கள்குடித்தவர்கள், முறைமையானதர்மமுடையோர்களையுங்கண்டவர்களல்லர்பெரியஎமதர்மராஜனேயென்று பின்னையுஞ்சொல்லுவார்கள்.—எ-று. (௬௫)

கனவினு மரனை யருச்சனை புரிதல்
கண்டவ ரல்லமற் றிவர்தாந்
துனிவினை யகற்றுஞ் சிவப்பிர சாதந்
தொட்டவ ரல்லமற் றிவர்தாம்
புனிதரைக் காணில் வழிவில காத
புல்லிய ரிவர்கொடு வினைக்கு
மனமொரு சிறிதஞ் சாதவ ரிவர்காண்
வன்மைகூ ருளத்தின ரிவர்காண்.

(எ-து.) இவர்கள் கனவிலும் சிவபூசைபண்ணினதைக்கண்டவர்களல்ல,சிவனுக்கற்புதமான பத்திரம், புஷ்பம்,விபூதி,சந்தனம் இதுமுதலானசிவப்பிரசாதங்களைக் கைகளினாலும்தொட்டவர்களல்ல, புனிதர்களைக்கண்டால் அவர்களுக்குவழிவிலகாத புல்லர்கள், கொடியபாவங்களுக்குச் சற்றாகிலு மனமஞ்சாதவர்கள், இரக்கமில்லாத நெஞ்சுள்ளவர்கள்.—எ-று. (௬௬)

இவர்சிவன் பெயர்சொல் லாதநா வுடையோ
ரிவர்பெரும் பொய்க்கரி யுரைத்தோ
ரிவரய லவருக் கிடங்கொடுத் துரிய
வினத்தவர் தங்களைக் கெடுத்தோ
ரிவர்குறை யில்லார் மீதுகோ ளுரைத்தே
யிரும்பொரு ளிழந்திடப் புரிந்தோ

ரிவர்தவத் தவரை நிந்தனை புரிந்தோ
ரேதமோர் சிறிதுமி லாதோய்.

(எ-து.) இவர்கள் சிவனுடையபேரைச்சொல்லாத நாவுடையவர்கள், பொய்சாக்ஷி சொன்னவர்கள், அயலாருக்கிடங்கொடுத்து இனத்தாரைக் கெடுத்தவர்கள், குற்றமில்லாதபேர்கள்பேரில் கோளைச்சொல்லித் தெண்டங்கொடுக்கப்பண்ணினவர்கள், தவமுடையபேர்களை நிந்தித்தவர்கள் எமதர்மராஜனே யென்றார்கள்.—எ-று. (ருஎ)

மற்றிவர் பற்றும் பொருள் சிறிதேனு
மவருயிர் வாட்டியே பரித்தோர்
மற்றிவர் பிக்ஷை யெனவடைந் தவர்மேல்
மடிசெவி ஞாளியை விடுத்தோர்
மற்றிவ ரறிஞர்க் கேதுமீய்ந் திடாது
வல்வினை வழிப்பொருள் பரித்தோர்
மற்றிவ ரனந்தச் சொல்லிலொன் றேனும்
வாய்மைசொல் லாதபொய் மறவர்.

(எ-து.) இவர்கள் கொண்டுபோகும் பொருள் அற்பமானதாகுலும் அவர்கள் சீவனைக்கொன்றுவழிபரித்தவர்கள், பிக்ஷையென்று வந்தபேர்களின்மேல் நாயை உசுப்பிடிக்கவிட்டவர்கள் அறிவுடையபெரியோர்களுக்குயாதுங்கொடாமல்பாவமானவழியில் பொருளைத்தேடினவர்கள், ஒரு மெய்யாகிலுஞ் சொல்லாத பொய்யுடையபாதகர்கள்.—எ-று. (ருஅ)

வருபொரு ளயப்பால் மனிதரை வருத்து
மனிதராக் கதரிவர் தினமும்
புரையினுன் மறையோர் பொருள்பல கவர்ந்து
புல்லியர்க் களித்தவ ரிவரே
தரையில் வண்பசுவைக் கொன்றடிச் செருப்புத்
தானமீய்ந் திடுவது போல
பெருவினை நெறியா றீட்டிய பொருளை
பேதையர்க் களித்தவ ரிவரே.

(எ-து.) இவர்கள் திரவியம் சம்பாதிக்கும் ஆசையினாலே மனிதர்களையெல்லாம் வருத்தப்படுத்துகிற மனிதராக்ஷதர்கள், நல்ல வேதப்பிராமணர்கள் பொருளை அபகரித்துப் புல்லர்களுக்குக்கொடுத்தவர், பசுவைக்கொன்று அந்தச்சர்மத்தினாலானசெ

ருப்பை தானங்கொடுத்ததுபோல பெரிதான புண்ணியத்தின் வழியே ஞாயத்துடனே தேடிவைத்த பொருள்களை யெல்லாம் வேசிகள்முதலான பேர்களுக்குக் கொடுத்தவர்கள்.—எ-று. ()

பெருமடை யுதவு காலையில் பந்தி
பேதமே பண்ணின ரிவர்கா
ணொருமனையவளை யடியவ ளாக்கி
யடியள்பா லுற்றவ ரிவர்கா
ணிறையவன் றன்னை யமரிடை விடுத்தே
யிருந்துபோய் வந்தவ ரிவர்கா
ணிறைதரு களவு படைத்தவ ரிவர்கா
ணெறிமுறை தவறிடா மனத்தோய்.

(எ-து.) இவர்கள் அன்னம்பரிமாறும் வேளையிலே பந்தி பேதம்செய்தவர்கள், மனையாட்டியைவெள்ளாட்டியாக்கிவெள் ளாட்டியினிடத்திலே பொருந்தியிருந்தவர்கள், அரசனை யுத்த முகத்தில் விட்டு ஓடிப்போய் பிழைத்தவர்கள், நிறைந்த அப கீர்த்தியே சம்பாதித்தவர்கள், நீதிமுறைதவறுதமன்னனே என் ருர்கள்.—எ-று. (சுo)

உடனுதித் தவர்க்கே விடத்தினை யருத்தி
யொழித்தவ ரிவர்கரிச் சாந்தைச்
சுடுதல்போ லொருவர் தருபொருட் காகத்
தூயரைக் கெடுத்தவ ரிவர்காண்
கொடைகொடா நினைவே யறிவரு முறவு
கூறிலஞ் ஞானமே யன்னை
கெடுமதி பிதாவென் றடைந்தவரிவர்காண்
கிளர்வலிப் பாசவெண் கரத்தோய்.

(எ-து.) இவர்கள் கூடப்பிறந்த சகோதரர்களை நஞ்சிட்டுக் கொன்றவர், கரிவேண்டி சந்தனமரத்தைச் சுட்டதுபோல் ஒரு வர் கொடுக்கிற இச்சகப்பொருளினிமித்தம்நல்ல உத்தமர்களைக் கெடுத்தவர், கொடைகொடுக்காதநினைவையே தங்களுக்குறவா கவும் அவிவேகமே தங்களுக்குத் தாயாகவும் கெடுபுத்தியே தங் களுக்குத் தகப்பனுகவும், அடைந்திருக்கின்றவர்களிவர்கள்,பல முண்டான பாசக்கயிறுபிடித்த கையையுடைய இயமதர்மராஜ னே யென்ருர்கள்.—எ-று. (சுக)

கடியர்பா லுறவு கொண்டவ ரிவரே
கையடை யிருத்திய பொருளை
நெடிதுநா ளகன்ற பின்றம தெனவே
நின்றுபோ ராடின ரிவரே
கொடுமையே மனைவி யசத்திய மெனுமோர்
கோதையே தங்கையென் றிருந்த
முடிவிறீ வினைய ரிவர்கணீ பாராய்
முழவுறழ்த் தினிபுயத் துறவோய்.

(எ-து.) இவர்கள் பொல்லாதவூர்க்கரிடத்திலே உறவுகொண்டிருந்தவர்கள், அடைக்கலமாகவைத்தபொருளைநெடுநாள் சென்றபின்வைத்தவர்கள் (வந்து)கேட்டாலதைதங்களுடையதென்று வழக்காடினவர்கள், பொல்லாங்கையே தமக்குப்பெண்சாதி யென்றும்அசத்தியமேதங்களுக்குத்தங்கையென்றும்எண்ணிக்கொண்டிருந்தஅளவில்லாதபாவிகளிவர்கள், பாரும்மத்தளம் போலுந்திரண்டுபலங்கொண்டதோளிணையுடையவனேயென்றார்கள். ()

விழைவொடு நாடக் கொடுத்திடு பொருளை
வெள்ளியின் றளிக்கொணு தெனக்கை
யுழிபிடித் தவர்கா ணிவரிதம் பேசி
யுட்பகை யிருத்தினே ரிவர்காண்
பழுதற முன்னர் வாங்கிய கடனைப்
பண்பொடு கொடாதவ ரிவர்காண்
குழைவொடு மெலிந்தோர் மனைவியைக் கண்டு
கூடவேண் டியகல ரிவர்கான்.

(எ-து.)ஆசையுடனேகொடுத்தபொருளைவாங்கிக்கொண்டின்றைக்குவெள்ளிக்கிழமைஎன்கையில்வந்தது உன்கையில்கொடுக்கப்படாதென்றுசொல்லுகிறவர்கள், (உத்தமர்பொருளைக்கவறஎண்ணி)வாயினாலேயிதமாய்ப்பேசியுட்பகையைவைததிருக்கின்றவர்கள், பழுதில்லாமல் முன்னால் வாங்கினகடனை பண்போடு கொடாதவர்கள், மெலிந்திருக்கப்பட்டவர்கள் பெண்சாதியைக் கண்டு கூடவேணுமென்று இச்சித்த இழிஞரிவர்கள் அரசே.—எ-று. (சங)

சாற்றிடிற் றனக்கு வருவன பெற்றுத்
தாமளித் தருள்வன கொடாத
பேற்றின ரிவர்மற் றரசரை யடைந்து
பேசருந் துன்மதி யுரைத்தே
யாற்றுநல் லறத்தைக் கெடுத்தவ ரிவர்பூ
வாலெறிந் தவர்தமை யேவு

ஆற்றமோ டெரிதல் போலிதஞ் செய்வோர்க்
குயிர்பிழை செய்தவ ரிவரே.

(எ-து.)சொல்லுமிடத்தில் தமக்குவருவனவெல்லாம்பெற்று த்தாம்கொடுக்கவேண்டியவைகளுக்கு ஒன்றுமேகொடாதபேற் றைவாய்ந்தவர்கள், இராஜசமுகத்தையடுத்து சொல்லக்கூடாத துர்ப்புத்தியையுரைத்துநல்லதர்மஅரசைக்கெடுத்தவர்கள்,பூவா லெறிந்தவர்கள்மேல்அம்புகளையூற்றத்தோ டெய்பவர்களைப்போ லஇதஞ்செய்யுமவர்களுக் குயிர்பிழைகள்செய்தவர்கள்—எ-று.

களவுசெய் புலைஞர்க் குரையிடங் கொடுத்தோர்க்
கலகமிட் டுறவின ரிடத்தில்
வளர்பிணக் கெழுப்புந் தீயவ ரேவல்
வழுவறச் செய்தவர் தமக்கு
தளர்வறக் கூலிகொ டாதவர் சோறு
சாருவிற் றவர்பொரு டிருடர்
கிளர்மனு மகளிர்சிசுபசு முதலாங்
கேடுசெய் கொடியவ ரிவரே.

(எ-து.) இவர்கள்களவுசெய்யப்பட்டவர்களுக்கு இருக்க இட ங்கொடுத்தவர்கள்,உறவின்முறையாரிடத்தில் கலகம்பண்ணிபி ணக்குண்டாக்கியதீமையுள்ளவர்கள்,தளர்வில்லாமல்தமக்குப்ப ணிவிடைசெய்தபேர்களுக்குத்தகுந்தகூலிகொடாதவர்கள், சோ ற்றை விற்றவர்கள்,பொருளைத்திருடினவர்கள், மனுக்கள் ஸ்திரீ, சிசு, பசு, முதலானதுகளைக்கொலைசெய்தமகாபாவிகள்.—எ-று.

அந்தணர்க் கிடரே புரிந்தகண் டகர்பொய்
யாணையிட் டவர்பிறர்க் குரியச்
சந்தமங் கையரைக் கவர்ந்தவ ரினிய
தவவிர தங்களை யிழந்தோர்
புந்தியற் றுயர்தெய் வங்களைப் பழித்தோர்
புண்ணில்வீ ழீயெனக் கொடிய
விந்திய நெறியே யறிவினை விடுத்தோ
ரிவரிவ ரெனவுரைத் தனரால்.

(எ-து.)பிராமணர்களுக்குஇடரையேசெய்தகண்டகர், பொய் யாணை,பொய்ச்சத்தியம் பண்ணினவர்கள், ஒருத்தருக்குப்பாரி யான அழகுள்ளபெண்களை அபகரித்துக்கொண்டவர், இனிமை யான தவவிரதங்களையிழந்தவர், புத்திகெட்டுப்போய் உயர்ந்த தெய்வங்களைப்பழித்தவர், புண்ணிலேவர்துவிழுகிறயீயைப்போ ல்பாவமான ஐம்புலன்வழியிலேமனதைவிட்டவர்கள், இவரிவர் களென்றுஇயமதர்மனுடனேவிபரமாகச்சொன்னார்கள்.—எ-று.

வேறு.

இவ்வாறு மதிக்கணக்க ருரைத்திடலு மழலினிடை
யிழுது பெய்தாங்
கொவ்வாத சினங்கெழுமவ் வுலகசங் கரனெனவோங்
கார மோங்கச்
செவ்வான மெனச்சிவந்த கண்ணிணைகள் புலிங்கமெழத்
திகழ்வில் வீசுங்
கைவாளை யுதிர்த்துநகைத் திதழ்துடிக்கத் தீயர்தமைக்
காலன் பார்த்தான்.

(எ-து.) இந்தவிதமாகச் சித்திரகுற்றர்கள்சொல்ல, நெருப்பினிடத்திலே நெய்யையூத்தினதுபோலஇயமதருமருக்கு மஹாகோபமுண்டாகி சகலலோகத்தையுஞ் சம்மாரம்பண்ணப்பட்டபிரளயகால உருத்திரனைப்போல ஓங்காரமாக ஒருஆர்ப்பாட்டம்பண்ணிச் செவ்வானம்போலச்செவந்திருக்கிற கண்ணிரண்டிலும் அக்கினிப்பொறிகள்பறக்க பிரகாசிக்கப்பட்டதன்கைவாளைக்குலுக்கிநகைத்து பல்லைக்கடித்துஉதடுமடித்து நிற்கும்பாவிகளைப் பார்த்தான்.—எ-று. (சஎ)

கடுமொழியர் சாந்தமில ரச்சமுறுத் தியபடிவற்
கனன்ற கண்ணர்
தடவரையொத் தவர்பரசு தண்டமுச லங்கணைகோ
தண்ட மாழிப்
படைபயில்முத் தலைச்சூலந் தோமரமுந் தாமேந்தி
பாசங் கொண்ட
நெடியகர ராகியவ ணிற்கின்ற படரொடிவை
நிகழ்த்தல் செய்வான்.

(எ-து.) எமதர்மரானவர் பார்த்துத் தன்னைச்சூழ்ந்துநிற்கிற இயமபடாக்கள் கடுபாஷிணர்களாயும், சாந்தமிலர்களாயும், பயோற்பாதரூபிகளாயும்,அக்கினிநேத்திரர்களாயும்,பருவதாகாரங்களாயும்,பரசுபாணிகளாயும், தண்டபாணிகளாயும்,முசலபாணிகளாயும்,வளைதடிக்கையராயும், கோதண்டபாணிகளாயும், சக்கிரபாணிகளாயும்,அஸ்திரபாணிகளாயும், திரிசூலபாணிகளாயும்,தோமரபாணிகளாயும், முற்கரபாணிகளாயும், ஏதிபாணிகளாயும், பாசபாணிகளாயும், நிற்கிறவர்களுடன் சொல்லுகிறார்.—எ-று. (சஅ)

இவர்தம்மை யீர்வாளாற் கழுத்தையறுத் திடுமின்கள்
ளிவரைத் தூக்கிக்

குவைகொண்ட மர்றுகொடு புடைமின்க ளிவரையுடல்
குறைத்தவ் வூனின்
சுவைமென்று மென்றறியக் கொடுமின்க ளிவரைநெடுந்
தூணில் யார்த்து
நவைதுன்று கூரியமுட் கணையாலெய் திடுமின்க
ளுடி நின்று.

(எ-து.)இயமதர்மரானவர்தன்னுடையபடாக்களுடன் இந்தப் பாவிகளை அரிவாளாலேகழுத்தையறுங்கள், மேலேகட்டித் தூக்கி குவித்திருக்கிற மாறுகளாலேயடியுங்கள், உடலையறுத்து அச்சதையை மென்றுத்தின்று சுவையையறியும்படிஅவர்களுக்குத்தானேகொடுங்கள்,பெரிய தூணிற்கட்டிபொல்லாதகூருள்ள முள்ளம்பினால் எய்யுங்கள்.—எ-று. (சகூ)

ஓடவடித் தெறிவேலா லெறிமின்களிளரைவனத்
துயரே னத்தை
நீடெரியிற் சுடுவதுபோற் சுடுமின்க ளிவரைமிக
நெடிது கூவக்
கோடியசொல் வாய்ப்பல்லைக் களைமின்க ளிவரைநெடுங்
கோபத் தோடு
வீடரிய வுயிர்த்தூண்டி லிடுமின்க ளிவரையருள்
விடுத்து நின்றே.

(எ-து.) இவர்களையடித்து ஓடப்பண்ணி வேலாலே யெறியுங்கள், இவர்களைக் காட்டுப்பன்றியை நெருப்பிலே சுடுகிறதுபோல தீயிலே புரட்டிப்புரட்டிச்சுடுங்கள், இவர்களைகூவக்கூவ அகந்தைபேசின வாயிலுள்ளபல்லைப் பிடுங்குங்கள்,இவர்களைத் தயவில்லாமற்படிக்குமிகுந்தகோபத்துடனே உயிர்த்தூண்டிலிற்போட்டுவிடுங்கள்.—எ-று. (ரு௦)

பரசுகொடு தறித்திடுமி னிவரைநெடும் பேழ்வாயிற்
பாணி யிட்டு
விரவினொடு கிழித்திடுமி னிவரைநெடுங் கழுநுனியின்
மீது வைத்துச்
சிரமிசைபாய்ந் துருவவிழித் திடுமினிவர் தமையுதிரஞ்
சிதறவாளால்
உருவறுக் கிடுமிவரை யிவரையெடுத் தெறியுமெலும்
பொடிந்து வீழ.

(எ-து.)இவர்களைக்கோடாலிகொண்டு துண்டந்துண்டமாகத்தறித்துப்போடுங்கள்,இவர்களைவாயிலேகையைக் கொடுத்து

க்கிழியுங்கள், இவர்களைக் கழுத்து நுனியிலேற்றி சிரசுருவத்தக்க தாயிழுங்கள், இவர்களையுதிரஞ்சிதறவாளாலேவெட்டுங்கள்இவர்களை எலும்பு ஒடிந்து விழும்படியாய்த்தூக்கி ஆகாயத்திலேயெறியுங்கள்.—எ-று. (ருக)

தலையுருளக் கருஞ்சிலையா லெறிமினிவர் தமையிருப்புத்
தண்டம் பற்றி
வலிதினருக் கிடுமினிவர் தமையெரியி னுங்கொடிய
வல்வி டத்தைச்
செலவிடுமி னிவர்வாயி லஞ்சாத வலியினவர்
செழுங்கோ சத்தி
லலைவுபட நெடியகொடுங் கூர்முள்ளேற் றிடுமினுட
லலற வீழ்த்தி.

(எ-து.) தலைகளுருளஇவர்களைக் கருங்கல்மேலெறியுங்கள் இருப்புத்தண்டத்தினாலே நொறுங்கநறுக்குங்கள், வாயில்அக்கினியிலுங்கொடிய விஷத்தைவாருங்கள், பயப்படாத வலியுள்ள இவர்கள் அலைந்தலறக் கீழேதள்ளி ஆண்குறியிலே நெடிதான கொடியகூருள்ள முள்ளேற்றிவிடுங்கள்.—எ-று. (ருஉ)

தயிலத்தி னிட்டெரிமி னிவரையெழுந் தடுபேய்நாய்
தன்னை நீண்ட
வயில்பற்றிக் குத்துதல்போல் குத்திடுமி னிவரையிவண்
மாகா ளிக்கு
வியனுற்ற பலியிடுமி னிவரையரத் தாலிவர் தம்
மெய்யு நெஞ்சுந்
தயைவைத்துக் கடிந்திடுமி னிவர்புரிதீ வினைக்கேற்ற
தண்ட மீதால்.

(எ-து.) இவர்களை யெண்ணெயிலேபோட்டு எரியுங்கள், வேலாலே பேய் நாயைக் குத்துகிறதுபோல் குத்துங்கள், இவர்களை மஹாகாளிக்குப் பெலிகொடுங்கள், இவர்களை அரத்தினால் தேசமும் மார்பும் அறத்துணித்துவிடுங்கள்,இவர்கள்பண்ணின பாவத்துக்குத்தகுந்தஆக்கினை யிதுதானென்றுசொல்லுவார்இயமதர்மராஜர்.—எ-று. (ருங)

எனவுரைத்து மறலிவிடை கொடுத்தலுங்கைத் தண்டமெறிந்
தெறிந்து பற்றிச்
சினமொடுசென் றுயர்புடைவெண் கலங்கதவு புனைமதிலின்
றென்பால் வாயிற்

றனதிறைவன் புகன்றபடி தண்டித்து மனையிலெரி
தானிட் டோரை
அனலெனுமவ் வெரியினிடல் போனிரையத் தழுத்துவரா
லிவரைத் தூதர்.

(எ-து.) இப்படியாக அவரவர் பாபத்துக்குத்தக்கின தண்டனைகளைக்கட்டளை யிட்டருளியனுப்ப. அவர்கள் சந்தோஷத்தையடைந்து தங்கள்கையிலிருக்கிறதண்டாயுதத்தை உயரவெறிந்துப்பிடித்து உயர்ந்திருக்கப்பட்டவெண்கலக்கதவிட்டதென்புரத்துக் கோட்டைவாசலுக்குள்ளே அந்தப்பாவிகளையெல்லாமிழுத்துக்கொண்டுபோய்த் தங்களிறைவரான இயமதர்மர்கட்டளையிட்டபடிக்கு சினத்தோடுகண்டித்து, வீடுகொளுத்தினபேரை அந்த நெருப்பிற்றானேதள்ளுதல்போல அவரவர்கள்செய்த பாவத்துக்குத்தக்கதாக அந்தந்தநரகம் இருபத்தெட்டுகோடியிலேயும் போட்டழுத்துவார்கள் இயமதூதர்கள்.—எ-று. (ருச)

தீவினைசெய் தவரிவ்வா றயர்வரெனத் தருமமுநி
செப்பக் கேட்டு
மேவுபெருங் கருணைசுரந் தரகரவென் றதிசயித்து
விரைய ரூமென்
பூவனைய கரந்துளக்கி நிரையத்தோர் தமையுன்னிப்
புந்தி நொந்து
தாவிவருந் தவராச னாகியசா னந்தமுநி
சாற்ற லுற்றான்.

(எ-து.) தீவினையாகிய பாவங்களைச்செய்தபேர்கள் இந்தப்படி அவதிப்படுவார்களென்று தருமப்பிரசங்கமுநிவர்சொல்லக் கேட்டு சானந்தமுநிவருக்குக் கருணைபிறந்து அரகராவென் றதிசயப்பட்டுகையையசைத்து நரகத்திலேகிடக்கப்பட்டபேர்களை நினைத்துமனதிரங்கிஅதிகதவத்தையுடைய சானந்தமுநிவர்சொல்லுகிறார்.—எ-று. (ருரு)

தீவினைச்சருக்கம் முற்றிற்று

ஆக பாயிரம் உட்பட சருக்கம் ௩-க்கு

திருவிருத்தம்-கஅஎ.

———

கணபதி துணை.




திருச்சிற்றம்பலம்.

## நான்காவது

# இயமபுரிச்சருக்கம்.



சிறந்தபசுங் கரும்புநுகர் வாயினால் வேம்புகளைத்
தின்றாற் போல
வறம்புகுந்த செவியினிடை மறம்புகுத லாயிற்றே
யந்தோ ! வந்தோ !
கறங்கெனவே வருங்கால தூதுவர்கைப் பட்டயருங்
கணக்கி லார்பா
லுறுங்கருணை சுரந்தமன மிரங்கியவ ணஞ்சலீரென்
னுரைப்ப ரியாரே.

(எ-து.) இனிய பசும்கரும்பைத்தின்றவாயிலேவேம்பைத் தின்றதுபோல, தருமங்களைக்கேட்டகாதிலேபாவங்களையுங்கேழ்க்கலாச்சுதே ஐயய்யோ ! சுழலுமேந்திரம்போலவரப்பட்டகால தூதர்கள் கையிலகப்பட்டிளைக்கிற பாவிகளை பக்கத்திலேதயவுடன்மனதிரங்கிபயப்படாதேயுங்களென்று அவடத்தில்சொல்லுவாருளரோ ! வென்றார்.—எ-று. (க)

இறந்திடுதற் குளமஞ்சி தன்சரண மேயரண
மென்னப் புக்காங்
குறைந்த மறை வாய்ச்சிறுவ னுயிர்வவ்வக் கடுவிடம்போ
லுதுத்துச் சீறி
மறம்பெருகு காலனுரம் பிளந்துகரை குதிக்கவடி
மலரால் தாக்கி

நிறைந்தவருள் சுரந்தனனென் றெவ்வுயிர்க்கு முயிராகி
நின்ற பெம்மான்.

(எ-து.) பதினாறுவதுவயதில் இறந்துபோகஉள்ளம்பயந்து உமதுபாதமே காவலென்று அடைந்த பிள்ளையினுயிரைவாங்க வேண்டி கொடியவிஷம்போலக்கோபித்துசிறிவந்தகொலைபெருகிய இயமனுடைய நெஞ்சுபிளந்து உதிரந்தெரிக்கதனது பாதத்தாலுதைத்து அந்தபிள்ளையாகியமார்க்கண்டேயனுக்கு நிறைந்த ஆயுளைக்கிருபைகூர்ந்த எல்லா உயிர்க்கு முயிராகிநின்ற கர்த்தனுனபரமேஸ்வரன்.—எ-று. (உ)

ஒருபோது விழுந்ததனைச் சிவனுக்கென் றுரைத்ததுவே
யுதவி யாகச்
சுரலோகந் தனிற்புரக்கச் சுவேதனுயிர்க் கவர்ந்துண்ணத்
தொடர்ந்த கூற்றைப்
பொருசூலத் தாலகலந் தனிற்குத்தியாங்கவனைப்
புரந்தான் முன்னம்
அரிதேட வயன்றேட மறைதேட வடியருளத்
தமர்ந்த பெம்மான்.

(எ-து.) ஒருபுஷ்பமானது தவறிக்கீழேவிழ அது பரமசிவனுக்கே யாகுமென்று சொன்னவார்த்தையே, உதவியாகச் சொர்க்கலோகத்திலே புகுந்தச்சுவேதனுடைய உயிரைப்பிடித்துண்ண வேண்டி தொடர்ந்துவந்த இயமனைத்திரிசூலத்தினால், மார்பிலே குத்தி அச்சுவேதனை இரக்ஷித்தவர், அரியும், அயனும்வேதமும் தேடத்தன்னுடைய அடியாருள்ளத்தில்இருந்த பரமேஸ்வரன்.

உலகமெலா நடுங்கநெடுந் திரைசுருட்டு மாழியிடை
யுதித்துப் பொங்கிக்
கலகமிடு விடந்தன்னை நீலமணி தரித்ததுபோற்
களத்தி னூடு
நிலைபெறவைத் தயிராணி கலைவாணி திருமுதலாய்
நிறைந்த மாதர்
இலகுமணித் தாலியளித் தருள்செய்தா னடியருரைக்
கிரங்கும் பெம்மான்

(எ-து.) நெடிய அலைகள் சுருட்டப்பட்டதிருப்பாற்கடலினிடத்தில் பிறந்து பொங்கி லோகங்களெல்லாம் நடுங்கும்படிக் கலக்கப்பட்டஆலகாலவிஷத்தைநீலரத்தினமணியைத் தரித்துக் கொண்டதுபோலே தன்னுடைய அடியார்கள்வார்த்தைக்கிரங்

கும் பரமேஸ்வரர் அதையுண்டுதனது கண்டத்தில்நிலைக்கவைத்து இந்திராணி, சரஸ்வதி, இலட்சுமிமுதலான தெய்வப்பெண்களது கழுத்தில் திருமங்கிலியங்களெல்லா மிருக்க அருளிச்செய்தார்—எ-று. (௪)

கயமதனை யுரித்தருளி யனைவரையும் புரந்தருளக்
கடவு ளாஞே
னியமபடர் வருத்தவருந் திடுமுயிர்கட் கிரங்காத
தென்னு வென்னு
வுயர்புடையர் தனையுலகிற் சீவதயா பரரென்று
மொழி விலாத
மயலகற்றும் பெருங்கருணைக் கடலென்றுமுலகுரைத்தன்
மறந்தான் கொல்லோ.

(எ-து.) எல்லாரையுங் கொல்லப்பட்டயானையையுரித்தருளிச் சகலமானபேரையும்இரக்ஷிக்கப்பட்டகர்த்தாவானவர் இயமதூதர்கள்தெண்டிக்க அதனால் வருத்தப்படுகிற சீவர்களுக்குப் பரமேஸ்வரனிரக்கமில்லாமலிருப்பதென்னமோ! என்னமோ! உலகில் அறிவுடையோர்அப்பரமசிவத்தைசீவதயாபரரென்றும் ஒழியாத மயக்கத்தையறுக்கும்மஹாகிருபா சமுத்திரமென்றுஞ் சொல்வதை மறந்தனரோ.—எ-று. (௫)

சிலரையறம் புரிவித்து விடலரிய சுகமளித்தான்
சிலரை யாங்கு
வலியமறம் புரிவித்து மாறுவெந் துயர்கொடுத்தான்
மற்றிவ் வாற்று
லுலகினிடை தனக்குவரும் பயனேதிங் கியார்க்குமுய
ரறிவு நல்கி
யிலகுபர கெதியளித்தா லியாதேனுந் தன்னுடைமை
யிழப்ப துண்டோ.

(எ-து.) பரமேஸ்வரரானவர் சிலபேர்களைத்தருமங்களைச் செய்யப்பண்ணுவித்து அவர்களுக்குஒழியாத சுகத்தைக்கொடுத்தார், சிலபேர்களை யுலகத்தில் பாவங்களைப்பண்ணச்செய்வித்து அவர்களுக்கு மாறுததுக்கத்தைக் கொடுத்தார், இப்படிசெய்ததினாலே, உலகத்தினிடமாகத்தமக்குவருகிற பிரயோசனமேதுமில்லையே! இந்தப்பூமியிலே யெல்லாருக்கும் நல்ல அறிவைத்தந்து மோக்ஷத்தைக்கொடுத்தால்அதனால் என்னமாகிலுந் தன்னுடைமையிழந்துபோறதேதுமில்லையே யென்றார்சானந்தமுனிவர்.—

ஈசனுளத் தருளிவ்வா றிருந்ததுமற் றியான்மறலி
 யிடத்தி னேகிப்
பேசுவதுண் டெனமுனிவர்க்குரைத்துமதி முடித்தருளெம்
 பிரானை மாறு
நேசமொடு மனத்துன்னிச் சிவபுரத்தி லிருந்ததொரு
 நெடிய கோலத்
தேசுடைய புஷ்பகமொன் றீண்டுவர வேண்டுமெனச்
 சிந்தித் தானல்.

(எ-து.)பரமேஸ்வரனுடையதிருவுளத்தினருள் இப்படியிருந்தாலுமிருக்கட்டும்,இயமதர்மனிடத்திலேபோய்ப் பேசுவதொன்றுண்டென்று அங்கேயிருந்தமுனிவர்களுக்குச் சொல்லிச் சந்திரனைத்தரித்தருளிய எமது பரமேஸ்வரனை நீங்காத உண்மையுடனே மனதில் தியானம்பண்ணிச் சிவபுரத்திலேயிருந்து ஒப்பில்லாத அழகும்பிரகாசமுமுள்ள ஒருபெரியபுஷ்பகவிமானமிவ்விடத்திற்குவரவேண்டுமென்று சிந்தித்தார்.—எ-று. (எ)

அடியருளத்தெண்ணியவெண்ணியகொடுக்குமெந்தைபிரா
 னருளி னலே
யிடரெவர்க்குந் திரவுயர் பூரணவித் தெனுமுனிவ
 னீன்ற சேய்முன்
னெடியமணி புஷ்பகமொன் றளப்பரிய கணநாதர்
 நிறைந்து சூழ
படியிலருந் திருவுடையிவ் வுலகினுள விருளகல
 வந்த தன்றே.

(எ-து.) இப்படிசானந்தமுனிவர் நினைத்தமாத்திரத்தில்அடியார்களுடையமனதிலே நினைத்தவைகளைக்கொடுக்கிற பரமசிவனது அருளினலே இயமலோகத்திலேயுள்ளபேரெல்லாருக்கும் இடர்கள் நிருநிமித்தியமாகமேலான பூரணவித்துமுனிவருடைய பிள்ளையான சானந்தமுனிவர் முன்னுகச்சிவபுரத்திருந்த உயர்ந்த இரத்தினமிட்டிழைத்தவொருபுஷ்பகவிமானம்,அளவற்றகணநாதர்கள் நிறைந்து சூழ்ந்திருக்க, குற்றமில்லாதஅரியசெல்வமாய்இந்தப் பூலோகத்திலுள்ளவிருளெல்லாம்விலகிப்போகவந்தது.—()

நீற்றொளிநன் னிலவெறிக்குந் தாபதரோ டதிலேறி
 நிமலன் றுளை
யூற்றமுட னுளத்துன்னிச் சிவநயன மணிமாலை
 யுரத்தின் மல்க

வேற்றவலம் புரிமுழங்க விஞ்சையர்சங் கீதவொலி
யெழுந்து பொங்க
வாற்றலொடு சானந்தமுனி வருகின்று னியமனூ
ரதனை நோக்கி.

(எ-து.) நல்லநிலாவெறிப்பதுபோல்பிரகாசமுடையவிபூதி தரித்திருக்கிற இரிஷிகளோடேசானந்தமுநிவர் அந்தவிமானத்தில்எழுந்தருளி பரமசிவன்பாதத்தைத்திடத்துடனே மனதிலேநினைத்துக்கொண்டுஉருத்திராக்ஷமாலைமார்பினிடத்திலே பொலியஎடுத்த வலம்புரிச்சங்குகள் முழங்க,வித்தியாதரருடையசங்கீதவாத்தியமெழுந்துபொங்க,பெருமையுடனே இயமபுரத்தைநோக்கிவருகின்றார்.—எ-று. (௯)

வேறு.

ஞானவா ரிதியாய சானந்த மாமுனிவன்
மானமீ தினிலுவர்ந்து வான்வழிக் கொடுவருபோ
தானபல்லுயிர் புரிவினை யறிந்தரு டென்பாற்
கோனிடத்தினி னிகழ்ந்தமை கூறலுற் றனமால்.

(எ-து.) ஞானசமுத்திரமாகிய சானந்தமகாமுநிவர்புஷ்பவிமானமீதேறி ஆகாசமார்க்கமாகவழிகொண்டுவருகிறவேளையில், சகலசீவர்கள்செய்யும்வினையெல்லாமறியப்பட்டதெக்ஷணதிசைக்கிறைவனுகியஇயமதர்மனிடத்திலேநடந்தவிருத்தாந்தம்சொல்லுகிறோம்.—எ-று. (௧0)

தந்தைவந்து சேயுச்சியை மோந்தரு டகைபோற்
சுந்தரங்கிளர் மாமணிக் கதிர்முடி துலங்க
மைந்துபெற் றுயர்நீல மால்வரை முடியிடையே
யிந்துமேவிய தென்று தன்மீது நீறிலங்க.

(எ-து.) இயமதர்மனுடைய தகப்பனுகிய சூரியபகவான் வந்து பிள்ளையினுச்சியை முகர்ந்தருளுந்தன்மைபோலஅழகும் காந்தியுமுள்ள இரத்தினமிட்டிழைத்த அழகியகிரீடஞ்சிரசிலே பிரகாசிக்க அழகுபெற்றுஉயர்ந்த பெரிய நீலபர்வதத்தின்கொடிமுடிக்கு நடுவாகச் சந்திரனிருப்பதுபோல் இயமதருமனுடைய நெற்றியில் விபூதிபிரகாசிக்க.—எ-று. (௧௧)

நாரிபங்கின னன்பர்பால் நணுகலை நணுகி
லாருயிர்க்குறு மிறுதியென் றசுரர்தங் குரவ

னீருருக்கொடு செவியில்வந் துரைத்திட லெனவே
சீருலாவிய நித்திலக் காதணி சிறக்க.

(எ-து.) பார்வதிசமேதரான பரமசிவனுடைய அடியார்க ளண்டையில்நீ யணுகாதே, அணுகினுலுனது சீவனுக்கு இறுதி காலமுண்டாகுமென்று அசுரகுருவான சுக்கிராசாரியரானவர் இரண்டுருபங்கொண்டு இரண்டுகாதுகளிலேயும் வந்து உபதேசஞ் சொல்வதுபோல இயமதர்மன்காதுகளிலேமுத்துக்குண்டலம்விளங்க.—எ-று. (கஉ)

திறலணங்குறை கோயிலின் சிகரமீ தெனவே
நிறைபெருங்கதி ரங்கதன் றோளிடை நிலவ
விறைபதம்படு சுவட்டினுக் கணிந்திட வெனத்தே
னுறுமணறுந்தனி மாலிகை மார்பிடத் துலவ.

(எ-து.) வீரமுள்ள பத்திரகாளியிருக்கப்பட்டகோவிற்சிகரம் இதுதானென்று சொல்லத்தக்கதாக மிக்ககாந்தியுள்ளவாகுவலமானது இயமதர்மன் தோளினிடத்திலேபிரகாசிக்க, பரமேஸ்வரனுடையபாதம்பட்டதழும்புக்குப்பூமாலேதரித்ததுபோல், வண்டுகள்மொய்க்குந்திவ்வியவாசனேயுள்ளவொப்பற்றபாரிசாத புஷ்பமாலேகள் இயமதர்மன் மார்பிலேயுலாவ.—எ-று. (கங)

எழிலிதன் புடைசூழ மின்னிலகி வீற்றிருந்த
வழகெனக் கிளரொளி மணிக்கடக மோடாழி
வழுவிலாத வெண்ணித் திலக்கோவை நன்மதாணி
கழன்முதற் பலவணியெழி லுருப்பிடை கவின.

(எ-து.) கரியமேகத்தின் பக்கத்தில் பிரகாசத்தையுடைய மின்னல் சூழ்ந்திருந்து அழகுசெய்வதுபோல காந்திவீசும் இரத்தினகடகங்கணேயாழிமோதிரம்வழுவில்லாதவெள்ளேமுத்துச்சரம் நல்லபதக்கம்வீரகண்டாமணிஇதுமுதலான பூஷணங்களெல்லாம் கரியநிறமுள்ள இயமதர்மனிடஅவையவங்களில் அழகு பெற்றுவிளங்க.—எ-று. (கச)

அன்பணுகிய பாவகன் மகவுக ளடைந்தே
முன்புவந்துநின் றிலங்கிய செயலென முறையே
மின்பொருந்தள ரிடையற மகளிர்கள் மிளிர்கைப்
பொன்பிறங் கொளித்தகளியிற்சுடர்த் தொகைபொலிய.

(எ-து.)தனதுநன்பணுகிய அக்கினிதேவன்பிள்ளேகள்வந்து இயமதர்மன்முன்பாக நின்றுகொண்டுபிரகாசித்தசெயல்போல,

மின்னலைப்போலுமிடையும் தளர்நடையுமுடையதேவரம்பை கள்கையிலே முறைதப்பாமலேந்திய பொற்றட்டிலே தீபவகை கள் பிரகாசித்தது.—எ-று. (கரு)

இந்துவைப் பணிபழி யறவெடுத்து நின்றதுபோற்
சந்தமாமணிக் காம்புடை வெண்குடை தயங்கக்
கந்தரந்தனை விழியெதிர் கண்டநன் மயில்போ
னைந்தசிற்றிடைப் பருமுலை யரம்பையர் நடிப்ப.

(எ-து.) கேதுவாகியசர்ப்பமானதுசந்திரனைவிழுங்கினபழி தீர அந்தச்சந்திரனை அந்தப்பாம்பு சுமந்துநின்றதுபோல, நிற முள்ள மாணிக்கக்காம்பையுடைய வெள்ளைவட்டகுடை இயம தர்மராஜனது முடிமீதுவிளங்கியது, மேகத்தைக்கண்ணுக்கெதி ராகக்கண்ட நல்லமயில்கள்போல தளர்ந்தசிறிய இடையும்பருத் ததனமுமுள்ள அரம்பாஸ்திரீகள்நாட்டியம்பண்ணவும்.—எ-று.

அனகனுமிவ னென்றுமுன் றரும மாடுதல்போ
லினியவெண்ணிறக் கவரிக ளெழுந்தெழுந் திரட்டப்
புனைகருங்குழல் விஞ்சைய ரியக்கர் கிம்புருடர்
துனிவில்கின்னரர் கந்திரு வாதியர் துதிப்ப.

(எ-து.) பாவமில்லாதவன்இவனென்றுமுன்னாகத்தருமமா னது களிப்போடெழுந் தாடுகிறதுபோல, இயமதர்மனுக்குமுன் பாக வெண்மயமானவுபையசாமரைகளெழுந்தெழுந்துவீசியது பெருமையுள்ள வீரதண்டைகள் தரித்த வித்தியாதரர் இயக்கர் கிம்புருடர் துன்பமில்லாதகின்னரர்கந்திருவர்இவர்கள்முதலா னபேர்கள்இயமதர்மராஜனைத் துதித்துச்சேவிக்கவும்.—எ-று.

காலனாதிய ரிருபுடை நின்றுளங் களிப்பச்
சூலமாக்கதை முதலிய படைகள்முன் றுலங்கப்
பாலிருங்கடல் மீதுமா லிருந்த பண்பெனவே
கோலமுற்றரியணையில் வீற்றிருந்த னன்கூத்தன்.

(எ-து.) மந்திரியாகிய காலன்முதலான அனேகம்பேர்கள் இயமதர்மனுடைய இரண்டுபக்கத்திலேயும், மனக்களிப்புடன் நின்றுகொண்டிருக்க, சூலாயுதம்மகத்தானகாலதண்டமுதலான ஆயுதங்கள் முன்னின்று பிரகாசிக்க, இவ்வித சம்பிரமங்களுட னே இயமதர்மராஜனானவன் திருப்பாற்கடலில் கரியநிறமுள்ள திருமாலிருந்தபண்புபோலே அழகுள்ளமுத்துநனிழைத்த சிங் காதனத்திலே வீற்றிருந்தான்.—எ-று. (கஅ)

ஆக்கமோடுயர் கூற்றன்வீற் றிருந்தரு ளவையி
னூக்கமிக்கதன் மகதிதன் வீணையி னுழையே
தாக்குதென்றலா லெழுமிசை தனக்குள மகிழத்
தேக்குசீருடை நாரதன் வந்தனன் சிறக்க.

(எ-து.) இப்படி இயமதர்மராஜன் சகலவைபவத்துடனே கொலுவீற்றிருக்கும் சபையில் உற்சாகமிகுந்ததனதுநல்லமகதி வீணையினிடத்தில் தென்றற்காற்று மோதுதலினால் எழுகின்ற இசைகளுக்கு மனமகிழுஞ்செல்வமேநிறம்பிசிறந்த நாரதமுனிவரானவர் வந்தார்.—எ-று. (கசு)

வேறு.

மேவியநாரதன் றனைவியந்துபோய்ச்
சேவடிதொழுதுநீ டணையிற்சேர்த்தலுந்
தாவிலுன்றிருவொடு தரிக்கிவைகினை
யோவெனுமுனிவனுக் கியமனோதுவான்.

(எ-து.) இப்படிவரப்பட்டநாரதமகாமுனியை அதிசந்தோஷமாய் இயமதர்மனெதிர்கொண்டுபோய் அவர்பாதத்திலேவணங்கி அழைத்துவந்து உன்னதமானஆசனத்திலிருக்கச்செய்தார் அவரிருந்து பின் இயமதர்மனைப்பார்த்துகுறைவிலாதஉன்னிட செல்வத்தோடே சுகமாகவிருக்கின்றையோவென்றுகேட்டநாரதமகாரிஷிக்கு இயமதர்மராசன் சொல்லுவான்.—எ-று. (உ0)

அன்னையிலாதவ னருளுமாசிலா
யுன்னுடையருளுமென் னுழியிருத்தலால்
மன்னுயமகிழ்வொடு வைகினேனிவ
ணின்னலென்பதுபிறி தில்லையெம்பிரான்.

(எ-து.) தாயில்லாதபரமேஸ்வரனுடையதயவும் உம்முடையதயவும் என்னிடத்திலிருக்கிறபடியினாலேகுறைவிலாதசந்தோஷத்துடனேயிருக்கிறேன் இவடத்திலேதுன்ப மென்பதுவேறொன்றுமில்லை யெமதுகர்த்தனான நாரதமுனிவரே யென்றார்.—எ-று.

உலகிடைநிகழ்ந்தன வேதிங்குன்னுளத்
திலகியநினைவுமற் றேதுசொல்லுகென்
றலர்புகழ்தென்றிசை யண்ணல்கூறலுங்
கலைவலமாதவன் கழறன்மேவினான்.

(எ-து.)உலகத்தினிடத்திலேநடந்தபுதுமைகளேதாகிலுமுண்டோ, இங்கே உமதுதிருவுளத்தில்தோன்றிய எண்ணமேதாகிலு

முண்டாயிருந்தால் சொல்லவேணுமென்று விரிந்தபுகழ்பரந்த தக்ஷணதிசைக்கதிபதியானஇயமதர்மராஜன்வினவ, அப்போது அறுபத்துநான்கு கலைக்கியானங்களில் வல்லவரான நாரதரிஷி சொல்லத்தலைப்பட்டார்.—எ-று. (உஉ)

என்னினைவின்படி யிதத்தைச்செய்வதற்
குன்னையல்லதுபிற ருளர்கொலோசொலாய்
மன்னவோருரைதனை மறந்தனன்கருத்
துன்னுதல்வேறிலா துற்றுக்கேண்மினே.

(எ-து.)என்னுடையநினைவின்படிக்குஎனக்கு இதஞ்செய்கிறதற்கு உன்னையல்லாமல்வேறேயுண்டோ, சொல்லுமியமதர்மராஜனே ? ஒருவார்த்தைபாடு மறந்தேன் அதனை உன்கருத்துவேறொன்றையு நினையாம லுற்றுக்கேளுமென்று நாரதர்சொல்லுகிறார்.—எ-று. (உ௩)

நற்றவப்பூரண வித்துநன்கொடு
பெற்றவனரனருள் பிரிந்திடாதவ
னற்றமிலைந்தெழுத் தகன்றிடான்வினை
முற்றுசானந்தமா முனிவனென்பவன்.

(எ-து.) நல்லதவமுள்ள பூரணவித்தெனுமுனிவர் நற்றவத்திற்பெற்ற பிள்ளையானவர், பரமேஸ்வரனருளைப்பிரியாதவர், சோர்விலாத பஞ்சாக்ஷரநாவிலே யகலாத சத்கருமத்தில் முதிர்ந்த சானந்தமாமுனிவர் என்பவர்.—எ-று. (உ௪)

நிரையவாசிகடமை நீலகந்தரன்
புரியிடையிருத்துவான் புந்திமேற்கொடு
விரைதருபுஷ்பகத் தேரிலேறிமெய்ந்
நெறிவரரொடுங்கூடி வருகின்றனரோ.

(எ-து.) இப்படிக்கொத்த சானந்தமுனிவரானவர் நரகத்திலுள்ள பாவிகளையெல்லாம் நீலகண்ட பரமேஸ்வரனிடசிவபுரத்திலேவைக்குங்கருத்தை மேற்கொண்டுஅதிசீக்கிரமாகபுஷ்பவிமானத்திலேறி மெய்ந்நெறியுள்ள சிலரிஷிகள்,கணநாதருடனேவருகிறார்.—எ-று. (உ௫)

உரியவுன்னுலகுபா முற்றிடாவகை
விரைவொடுநிறுத்துக வென்றுமேதகு
முரனுடையமாதவ னுரைத்தகாலையிற்
குரைபுகழ்மறலிநக் கினையகூறினன்.

(எ-து.) உனக்குரிமையான இயமலோகம் பாழாகாதபடிக்கு இயமதர்மனே நீ சீக்கிரமாய் ஒரு உபாயத்தினாலேநிறுத்திக்கொள்ளுமென்று மேலான ஞானமுள்ள நாரதமுநிவர்சொல்லஇயமதர்மன் நகைத்து இதைச்சொல்லுகிறான்.—எ-று. (உசு)

உன்னுடனெதிர்மொழி யுரைக்கொணாதுமற்
றென்னிலுமோர்மொழிக் கிடங்கொடுமிவர்
தன்னிலும்பெரியர்க டாமிருந்தன
ருன்னினரோவிது முநிவகேட்டியால்.

(எ-து.) முனிவரே? கேளுமையா, உம்முடனே எதிர்வார்த்தை சொல்லவொண்ணாது, ஆனாலும்ஒருவார்த்தைக்குஇடங்கொடுக்கவேணும், அதாவது இந்த சானந்தமுநிவரிலும் பெரியவர்களிருந்தார்கள் அவர்கள் இந்நரகத்திலேகிடக்கிறபேர்களைச்சிவலோகத்திலே் வைக்கநினைத்தார்களோ வென்றான்.—எ-று. ()

வேறு.

அயனொடுமா றிட்டெதிரே சிருட்டி செய்தோ
னரியொடுபோர் செய்துவென்றோனடிக்க ணுள்ளோன்
உயருததி குடித்தோன்கோ சிகனை வென்றோன்
உயர்நந்தி தனைப்பெற்றோ னிவரு மன்றிச்
சயமுடைய மான்மழுத்தீ யாதி யீசன்
தரித்தருள விடுத்தோரு மிருக்கின் றார்கள்
வியனுடைய ரிவரினுந்தான் வலியின் கொல்லோ
விளம்பிலவர் தயவிலரோ தன்னைப் போல.

(எ-து.) பிரமதேவனுடனேமாறிட்டுவேறுலோகங்களைச்சிருட்டிசெய்த விசுவாமித்திரரிஷி, நாராயணனோடெதிர்த்துயுத்தம்பண்ணிச்செயித்த நெமிசிமகாரிஷி, பாதத்திலேகண்ணுள்ளகண்ணபாதரிஷி, பெரிய சமுத்திரத்தைக்குடித்த அகத்தியமகாரிஷி, கவுசிகனைவென்றவசிஷ்டமகாரிஷி, உயர்ந்தநந்திகேஸ்வரரைப்பெற்ற சிலாசனப்பிரம்மரிஷி,இவர்களையல்லாமற்பின்னையும்வெற்றிப்பாடுள்ள மான் மழு டமரகம் அக்கினி இதுமுதலானதெல்லாம் பரமேஸ்வரனே தரித்தருளயாகத்திலுண்டாக்கிவிட்டதாருகாவனரிஷிகளுமிருக்கிறார்கள் இவர்களெல்லாம்இவரைப்பார்க்கிலும்வலிமையில்லாதவர்களோ, தயவில்லாதவர்களோசொல்லுமையா.—எ-று. (உஅ)

இம்முனிவ னிரையத்தோர் தம்மை மீட்டு
மென்றெண்ணி யணுகிடினு மெளிய னோநான்
செம்மையுள ரியாரேனு மென்ன கர்க்குச்
செல்லாமற் செல்லவொண்ணு தெப்ப தத்தும்
வம்மெனவா ணாள்முடிந்தோர் தம்மை யன்றி
மற்றோரை விளியாரென் றூத ராஞே
ரம்மவறஞ் செய்தோரை யன்பு செய்தே
யமரர்பதத் தணுகுமினென் றேகுவே னியான்.

(எ-து.) இந்தசானந்தமுனிவர் நரகத்திலேகிடக்கிற பாவிகளை யெல்லாம் விடுவிக்கிறோமென்றுஎண்ணிக்கொண்டு வந்தாலும், நானென்ன எளிதானவனோ! புண்ணியமுள்ளபேர்களானாலும் என்னுடைய லோகத்துக்குவராமல் எந்தப்பதவிகளுக்கும்போகப்படாது,அல்லாமல்என்னுடைய தூதரானபேர்கள் பூலோகத்திலே ஆயுள்முடிந்தபேர்களையல்லாமல்மற்றபேர்களைவாருங்களென்று அழைக்கிறதேயில்லை,தர்மவான்கள்என்னிடத்தில் வந்தால் அவர்களுக்கு அன்புபண்ணி சொர்க்கபதவிக்குப் போங்களென்று நானனுப்பிவிடுகிறவிதி என்றான்இயமதர்மராசன். ()

சாற்றறிய தீவினைசெய் தோரைக் காணிற்
றயவில்லை யென்பாலுன் பாதத் தாணை
நீற்றினொளி பழுத்ததிரு நுதலோய் மீளா
நிரையத்தி லழுத்திடு வனவரை வாட்டி
மாற்றலரி தென்னிடத்தில் நீதி யன்றி
மறஞ்சிறிதுஞ் சாராது தரும னென்பே
ரூற்றமுடைச் சானந்த முனிவன் சால
வுளத்தின்மரு ளுற்றனனோ விது நினைந்தான்.

(எ-து.) சொல்லுதற்கரிய பாவம்பண்ணினபேர்களைக் கண்டாலுன்பாதத்தாணை அவர்கள்பேரில்என்னிடத்தில்தயவில்லை, விபூதியின்பிரகாசமே முதிர்ந்து அழகுசெய்யும் நெற்றியினையுடையநாரதமுனிவரே? அந்தப்பாவிகளை வாட்டிமீளாதநரகத்திலேபோட்டழுத்திவிடுவேன், அதையொருவராலும்விடுவிக்கஅரிது,என்னிடத்தில்நீதியேயல்லாமல்அநீதிசற்றாகிலுமிராது ஆனபடியினாலேதான்இயமதர்மனென்றெனக்குப்பேர்வந்தது, இப்படியிருக்க,சானந்தமுனிவர்உள்ளத்தில்மிகப்பயித்தியங்கொண்டாரோ! இந்தப்பாவிகளை நரகத்தைவிட்டு கைலாசத்தில் சேர்க்க நினைந்தது என்று பின்னுஞ்சொல்லுகிறான்.—எ-று. (௩௦)

கனவலகைத் தேரேறி நடத்த லாங்கற்
கரைந்திடவே புரிந்திடலாங் கனோப லத்தான்
மனையெடுக்க லாங்கதிரை மறிக்க லாந்தண்
மதியுழையைப் பிடிக்கலா முடைந்த வோட்டை
நனியுலோகம் போலுருக்க லாகுங் காற்றை
நற்புரவி யாக்கலாஞ் சாம்ப லுக்கு
ளினியதயி லங்கொளலா நிலவைக் கூட்டி
யெடுக்கலா முகில்கொடுவீ டியற்ற லாமால்.

(எ-து.) மிகுதியான கனலைத்தேராக்கியேறிநடத்தலாம், மலைகளைக்கரையப்பண்ணலாம், ஆலாங்கட்டியால்மனைகோலியெடுக்கலாகும், சூரியனை இரதமேறவொட்டாமல்மறிக்கலாம், குளிர்ச்சியுள்ள சந்திரனிலேயிருக்கிற மானைப் பிடிக்கலாம், உடைந்துபோன வோட்டை மிகுதியும் பொன் வெள்ளி தங்கம் போலேஉருக்கலாம், காற்றை நல்ல குதிரையாக்கலாம், சாம்பலுக்குள்ளேயினிமையானதயிலம்வடிக்கலாம், நிலாவைக்கூட்டியெடுக்கலாம், மேகத்தைக்கொண்டுவீடுகட்டலாம் என்றும்.—எ-று. ()

காடியிடை நவநீதங் காட்ட லாஞ்செல்
கடும்புனலி லெழுந்திடலா முடுவை யூதி
யோடிவிழப் பண்ணலா நதியைச் செவ்வே
யோட்டலா மனல்விழுங்கி யுள்ளங் கைமெய்
யாடகவெற் பினையடக்க லாம னந்த
னும்பணியைத் தடுக்கலாம் பொருசிங் கத்தை
நீடுவலைப் படுத்தலாங் கமல நூலால்
நெடியமத வேழத்தைப் பிணிக்க லாமால்.

(எ-து.)காடியினிடத்திலேவெண்ணெயெடுத்துக் காட்டலாம், விரைவாயோடுகிற நீரிலேயெழுத்துப்பதிக்கலாம், நட்சத்திரங்களை ஊதி ஒடிவிழப்பண்ணலாம், ஆறுகளைச்செவ்வையாயோட்டலாம், நெருப்பைவிழுங்கலாம், உள்ளங்கையில் மஹாமேருவையடக்கலாம், ஆதிசேஷனாகியபாம்பைத்தடுக்கலாம், போர்செய்யும்சிங்கத்தைப்பெரியவலையிலேபிடிக்கலாம் தாமரைநூலாலேபெரியமதயானையைக் கட்டலாம்.—எ-று. (௩௨)

மந்தரத்தை யுடைக்கலாம் வடவைத் தீயை
மாற்றலாங் கடுவையெடுத் தருந்த லாமிவ்
வந்தரத்தி லிருக்கலாம் பணியாற் சீத
மகற்றலா மெனினுமழ னிரையத் தோரை

முந்துசிவ புரத்திருத்தப் படுமோ வைய
முக்கணுடைப் பரசிவனை யுணர்ந்தோ ரன்றி
யெந்தநிலை யுளரேனு மென்பு ரத்திற்
கெய்தாம லெப்பதத்து மெய்த லாமோ.

(எ-து.) மந்தரகிரியை யுடைத்துப்போடலாம், வடவாக்கினியை அவித்துப்போடலாம், விஷத்தை யெடுத்துக் குடிக்கலாம், ஆகாசத்திலே யிருக்கலாம், பனியிலே குளிர்காயலாம், இப்படியானாலும் அக்கினிமயமான நரகத்திலே கிடக்கும் பாவிகளைமேலான சிவபுரத்திலே வைக்கப்படுமோ! ஐயா நாரதமுனிவரே? மூன்றுகண்ணையுள்ளபரமசிவனையுணர்ந்தபெரியோர்களையல்லாமல் எப்படிப்பட்ட நிலைமையுள்ளபேர்களானாலும்என்பட்டினத்திற்குவராமல் எந்தப்பதவியிலேயும் போகலாமோ! என்றான் இயமதர்மராஜன்.—எ-று. (௩௩)

மருவனசைத் தலைக்கோல மணியின் சோதி
மணந்துதிகழ் சிரடியம் பிகைபொற் கொங்கை
பொருநறவு கொப்பளிக்கு மிதழி யந்தார்
புனிதனுத வியவெனது பதவி தன்னை
அரிபிரம ராலு மரி தகற்ற
வையவருந் தவமுநியும் வந்தா லென்னை
வரமருளி யாசிபுகன் றகல்வா னென்றான்
மன்னுயிரின் வாணாளை மதிக்குங் கூற்றன்.

(எ-து.)வாசனைபொருந்தியதாமரையிலிருக்கப்பட்ட சரஸ்வதி,இலட்சுமிஇவர்களதுசிரசுகளிற்றரித்தஅழகுள்ளகிரீடமணிகளின்பிரகாசத்தைத்தழுவித்திகழ்கின்றசிறந்தபாதத்தையுள்ள உமாபரமேஸ்வரியினுடைய அழகுபொருந்திய கொங்கையானது முட்டிப்பொருதும்போதுதேன்களைக்கொப்பளிக்குங்கொன்றைமாலையணிந்த பரமேஸ்வரன்கொடுத்தஎன்பதவியைமாற்றுதற்கு அரிபிரமாக்களாலேயுமருமை!ஆகையினாலேஅரிதானதவத்தையுள்ளஅந்தசானந்தமுனிவரிங்கேவந்தால் எனக்குவரங்கொடுத்து ஆசிர்வாதம்பண்ணிப்போவார்நாரதரேயென்றான்உலகின்கணுள்ள சிவர்களுடைய ஆயுள்பிரமாணங்களைமதித்திருக்கும் இயம தர்மராஜன்.—எ-று. (௩௪)

தன்னைமதித் துயர்மறலி யுரைத்தல் கேட்டுச்
சற்றுமுளத் துணர்விலா னனைந்த மஞ்ச

மென்னவுரத்திருக்கின்றான் வருவ தோரா
னிவன்முட்டுப் பட்டதற்பின் னறிய லாகுஞ்
சென்னிவலி முன்னரியப் படுமோ பொல்லாத்
தீயவற்குத் தருமநெறி செப்பி னாலும்
நன்னிலைவந் தெய்துமோ வென்ன முன்னி
நாரதமா முனியெழுந்து போயி னானல்.

(எ-து.) தன்னைத்தானே மதித்துயர்ந்த இயமனிப்படிசொன்னவார்த்தையெல்லாம் நாரதர்கேட்டுசற்றானாலும் உள்ளத்திலே விவேகமில்லாதவன்நனைந்தகட்டில்போல்முரணித்துக்கொண்டிருக்கிறான், வருங்காரியமறியமாட்டான் இவன் முட்டுப்பட்டபின்பே யறிவான், தலையின்வலியை அதற்குமுன் னறியப்படுமோ! பொல்லாத தீமையாளர்களுக்குதருமநீதிசொன்னாலுங்நல்லசன்மார்க்கம்வருமோ!வென்றிப்படிமனதிலெண்ணிக்கொண்டு நாரதமகாமுனிவர் இயமதர்மன்சபையை விட்டெழுந்துபோய்விட்டார்.—எ-று. (ருரு)

அப்பொழுது சானந்த முனிவ னேறும்
அணிதிகழும் புஷ்பகவி மானந் தன்னை
மைப்படியும் பருதிவரை சூழ் கிடந்த
மானிலத்திற் கோடான கோடி பானு
மெய்ப்படிவந்திரண்டொன்றாய் வருவ தெய்ப்ப
மிளிர்காந்தி பரந்துலக மெங்கும் பொற்பச்
செப்பரிய வோசையுடன் விண்ணின் மீது
சிறந்துவர வியமபுர வானர் கண்டார்.

(எ-து.) அந்தவேளையிலே சானந்தமுனிவர் ஏறிவரப்பட்ட அழகுபொருந்திய புஷ்பகவிமானமானதை மேகம்படியப்பட்ட சக்கிரவாளகிரிசூழ்ந்திருந்தபூலோகத்திலே கோடானகோடிசூரியர்களுடைய வடிவமெல்லாந்திரண்டு ஒன்றாக உருவங்கொண்டு வருவதுபோல அந்தவிமானந்துலங்குங்காந்திபரந்து உலகமெங்கும் மூடிக்கொள்ள சொல்லுதற்கரிய வாத்தியவோசையுடனே ஆகாசத்தின்மேலேசிறந்துவருகிறதைஇயமபுரத்திலுள்ளஜனங்கள் கண்டார்கள்.—எ-று. (ருசு)

வேறு.

விண்ணிடைப் பரந்து செல்லும் வடவையோ விமல னெற்றிக்
கண்ணழற் கொழுந்தோ தூய சுணிதமில் சோதி மின்னாற்
பண்ணிய மேடை யோவெம் பருதிகள் கோடி சூழ்ந்து
நண்ணிய வொளியோ யாதோ வென்றனர் நாடி நின்றார்.

(எ-து.) அந்தவிமானத்தின் காந்தியைக்கண்டுஆகாசத்தி லேபரந்துபோகும்வடவாமுகாக்கினியோ ! பரமேஸ்வரனுடை யநெற்றிக்கண்ணிற்பிறந்தஅக்கினிக்கொழுந்தோ கணக்கிலாதசுத் தமான ஜோதியுள்ள மின்னலாலியற்றியவொரு உப்பரிகையோ! உஷ்ணமுள்ள கோடியாதித்தர் சூழ்ந்துவரப்பட்டபிரகாசமோ! மற்றென்னமோ ! தெரியவில்லையென்றுபார்த்து நின்றார்கள்.()

அணுகிட வந்த காலை யணிதிகழ்நாதகீதப்
பணியுடை நார தன்றன் பருதிசே யுடனே சொன்ன
தினிபுகழ் முநிவ னேறுஞ் செய்யபுஷ் பகமீ திங்கு
நணியது பாரீ ரென்று ரதைமிக நாடிச் சில்லோர்.

(எ-து.) அந்தச்சானந்தமுநிவரேறிவரப்பட்ட புஷ்பகவிமா னம் இயமபுரத்தைநெருங்கிவந்தபோது, அழகுள்ளநாதகிதவல் லோராகியநாரதமுநிவர் சூரியன்பிள்ளையான இயமதர்மராஜனு டனே சொல்லியவிமானம் இதுதான் வந்துவிட்டது பாருங்க ளென்று அதனைப்பார்த்தசிலபேர்கள்.—எ-று. (நஅ)

அரனருள் பெற்றகொற்ற வமலசா னந்த ரிங்கு
வருதலா லியாமு முய்ந்தோ மானிலத் துயிரு முய்ந்தார்
நிரையமுற் றழுந்தி ஞேரு நீடிய துன்பந் தீர்ந்து
விரவினி லின்பந் துய்ப்ப ரென்றனர் வியந்து சில்லோர்.

(எ-து.) பரமேஸ்வரனுடைய கிருபைபெற்றவெற்றியுள்ளநிர் மலமான சானந்தமுநிவர் வருகிறபடியினாலே,இந்தஇயமபுரத்தி லுள்ளநாமெல்லாம் பிழைத்தோம்பூலோகத்தாரும்பிழைத்தார் கள், இருபத்தெட்டுகோடி நரகத்திலேவிழுந்தழுந்தியபாவிகள் வெகுநாளாய்ப்படுந்துன்பங்கள்தீர்ந்து சீக்கிரமாக இன்பத்தை யனுபவிப்பார்களென்று சிலபேர்கள் அதிசயப்பட்டுசொன்னார் கள்.—எ-று. (நகூ)

அருணனு லகலா வல்லு மகத்தியன் கரத்த டங்காப்
பரவைமற் றைந்தெ ழுத்தான் மாறிடாப் பவமுந் தீயா
லுருகுரு மெழுகு மிச்சா னந்தனு லொழிந் திடாத
நிரையவெங் கதியு முண்டோ வென்றனர் நின்றசில்லோர்.

(எ-து.) சூரியனாலே நீங்காதவிருட்டும் அகஸ்தியர்கையில டங்காத சமுத்திரமும், ஐந்தெழுத்தினல் மாறாதஜனனமும்,நெ ருப்பின லுருகாதமெழுகும், இந்தச்சானந்தமுநிவரால்ஒழியாத கொடியநரகமுமுண்டோ வென்றுசிலர்சொன்னார்கள்,-எ-று.()

இவ்வியல் பலருங் கூற வெழுந்தசா னந்த னேறுந்
திவ்விய விமானம் வந்து சேர்ந்தது சேர்ந்தகாலை
வெவ்விய தூத ரோடி விளம்பலு முள நடுங்கி
யவ்வியமற்ற கூற்ற னரியணை விட் டெழுந்தான்.

(எ-து.) அந்தஇயமபுரத்திலுள்ளவர்கள்இவ்வாறுசொல்ல எழுந்தருளிய சானந்தமுனிவனேறிவருகிறதிவ்வியவிமானங்கோட்டைவாசலுக்கருகில் வந்துசேர்ந்தது, அப்போது அங்கிருந்த யமதூதர்களோடி அரசனிடத்தில் சொல்லவும், அவனுள்ளம் நடுங்கி பயந்து மனசழுக்கில்லாத யமதர்மனானவன் தானிருந்த சிம்மாதனத்தை விட்டெழுந்திருந்தனன்.—எ-று. (சக)

எழுந்துகிங் கிரர்தான் சூழ வெழின்மணிக் கோபுரத்தின்
செழுந்திரு வாசல் மட்டுஞ் சிறப்புட னடந்து வந்தா
னழுந்திய முரணு நீங்க வதிசயித் ததி சயித்து
விழுந்துதீ வினையி னோடு மென்கரங் கூப்பி நின்றான்.

(எ-து.) இயமதர்மனெழுந்துகிங்கிரர்கள்சூழ்ந்துவரஅழகு பொருந்திய மணிகளிழைத்த தன் அரமனையின் கோபுரவாசல் மட்டுக்கும் சிறப்புடனேபாதசாரியாய்நடந்துவந்துமுன்னேஇறுமாந்திருந்த வரப்புகளெல்லாம் விட்டு அதிசயித்து அதிசயித்து வணங்கி தீவினையோடேமிருதுவான கையினால்கும்பிட்டுக்கொண்டு கோபுரவாசலிலே நின்றான்.—எ-று. (சஉ)

பருதியி னிடையி ருக்கும் பரனெனப் புஷ்ப கத்தின்
மருவிய வரனே வானி னணுகுடு விடை வயங்கு
மொருமதி போல வையர் கணத்திடை யுற்று ளானை
யரனருட் டேனை வுண்ணு மகத்தனை மயலி லானை.

(எ-து.) சூரியனடுவே பரமேஸ்வரனிருப்பதுபோல வெகு காந்தியுள்ள புஷ்பகவிமானத்தினடுவேயிருக்கிறவரும், ஆகாசத்திலேநக்ஷத்திரக்கூட்டத்தினடுவே பிரகாசிக்கிறவொருசந்திரனைப்போல அனேகரிஷிகள்கணங்களுக்குநடுவேயெழுந்தருளியிருக்கிறவரும் பரமேஸ்வரருடையஅருளாகிய தேனையுண்ணுமுள்ளமுடையவருமாகிய மயக்கமில்லாதசானந்தமுனிவரை.—எ-று.()

கோவண மரைநாண் கற்றோய் கொழுங்கலை மண்டலத்தோ
டோவரு தண்டங் கொண்ட வுயர்புடை யானை நீறு
மேவிய நுதலி னானை வியனுடை யக்க மாலை
தாவில்சீ ருடைய முன்னூற் றங்கிய மார்பி னானை.

(எ-து.) கௌபீனமும் அரைஞாணும் காவிதோய்த்த திவ்வியவஸ்திரமும் தண்டுகமண்டலமுடையபெருமையைவகித்து விபூதிதரித்தநெற்றியும் அழகியஉருத்திராக்ஷமாலையும்பூணநூல் புரளு மார்பையுமுடையவரை.—எ-று. (சச)

உயர்சடா மகுடங் காதிற் குண்டல முடையான் றன்னை
மயலறு சபவ லங்கல் வயங்கிய கையி னானைச்
செயிரில்சா னந்தனென்னுஞ்சேயனைக்கண்ணிற்கண்டான்
வியனுரு மிவன்றனக்கு நிகரிலை யெனவி யந்தான்.

(எ-து.) சிரசில் உயர்ந்தசடாமகுடமும், காதிலேகுண்டலமும், செபமாலை நீங்காதவராயுமுடைய சாந்தகுணமுள்ளசானந்தமுநிவரென்னும்பிள்ளையைகோபுரவாசலிலேகும்பிட்டுக்கொண்டுநிற்கின்ற இயமதர்மராஜன்கண்ணிற்கண்டுசிலாக்கியமுள்ள இவருக்குச் சமானமானவரில்லையென்று அதிசயப்பட்டான். ()

சீரிய விவரி ரண்டாஞ் சிவனென மனத்தி லெண்ணிப்
பாரிடை நடந்தட் டாங்க பஞ்சாங்க முறப் பணிந்து
நேரிலாத் துதிகள் செய்து நீவர யானு முய்ந்தேன்
வேரிகொள் புவியுமுய்ந்த தென்றனன் வினைக டீர்ப்பான்.

(எ-து.) சிறப்புடைய இவரை இரண்டாவது சிவனென்று மனதிலெண்ணிப் பூமியிலே எதிரா நடந்துபோய் சாஷ்டாங்கமாகப்பணிந்தெழுந்துநின்றுதுதிசெய்து நீர்வரவும் யானும்பூமண்டலமும்பிழைத்ததுஎன்றான்வினைகளைத்தீர்த்துக்கொள்ளும் இயமதர்மராஜன்.—எ-று. (சரு)

வரநதி முடவன் றன்பால் வந்ததொத் தென்பால் வந்தாய்
திரானுடைத் தென்சீர் நல்ல தினமெனக் கானதின்று
பொருவிலாய் நின்னைக் காணப் புரிதவம் பெற்றேன் முன்னர்
விரைவிலென் மனைக்கண் வாரா யென்றனன் றருமன் றானே.

(எ-து.) கெங்காதீர்த்தமானது முடவனிருந்த இடத்திலேவந்ததுபோல என்னிடம்வந்தீர் என்னிடசெல்வம் நிலைத்தது, இன்றைக்குஎனக்குநல்லதினம்வாய்த்தது, முன்நான்செய்ததவப்பயனால் ஒப்பில்லாதவும்மையுங்காணப்பெற்றேன்சானந்தமுநிவரே சீக்கிரமாகஎன்மனையிடத்துவரவேணுமென்றுசொன்னான் இயமதர்மராஜன்.—எ-று. (சஎ)

தன்றுதிக் கிரங்கி யெங்க டவமுநி விமான நீத்து
நன்றுகொள் முநிவ ரோடு நடந்துமுன் செல்லுங் காலை

மென்றளி ரங்கை தாங்கி விரிபுல னடக்கிச் சோதித்
துன்றிய மறுகி னூடு தொல்லிய மனோர்பாற் சென்றான்.

(எ-து.) வணக்கமாக உபசரித்துச்சொல்லுகிற தோத்திரத்துக்கு மனதிரங்கி யெங்கள் சானந்தமுநிவரானவர் ஏறிவந்தபுஷ்பக விமானத்தைவிட்டு கீழேயிரங்கி நன்மையே குடிகொண்டிருக்கும் முநிவர், கணங்கள்புடைசூழ,ஜோதிமயமான வீதியிலே முன்னாக நடந்துபோகும்போது, அவருடையமிருதுவானமாந்தளிர்போன்ற கையைத்தாங்கி வுரிந்தபுலன்களையடக்கிக்கொண்டு பழமையான இயமதருமனுருபக்கமாகச்சென்றான்.—எ-று()

அழைத்துபோய் வண்டு கிண்டு நலங்கிளர் வலங்கல் தூங்கும்
நிழற்பொலி புரையில் சுத்த நித்தில மதையா ளிக்க
ணிழைத்தமா மணிப் பீடத்தி னிருத்திமா தவக்கோ மானைத்
தழைத்தபே றுவகையோடு தாங்குபூ சனைசெய் தானல்.

(எ-து.)இவ்விதமாய் அழைத்துப்போய்வண்டுகள்கிளரும் வாசனையுள்ள மாலைகள்தொங்கும்அசுமானகிரியினிழலில்ஆணிமுத்துகளினால் இழைத்த யாளிகள்பொருந்திய ஒருபீடத்தில் மகாதவசுடையோர்களில்சிறந்தசானந்தமுநிவரை யிருக்கச்செய்துஇயமதர்மராஜன்அதிகசந்தோஷத்துடனே அவருடையவிரண்டு பாதங்களையும் பூசித்தான்.—எ-று. (சசு)

பூசனை புரிந்த கூற்றைப் புரிந்திரு கண்ணு னோக்கி
மாசிலுன் பூசனைக்கு மகிழ்ந்தனந் தரும னென்னு [டோ
மோசைகொள் பெயர் நினக்கே யுரித்துனக் குவமை யுண்
வேசிலாய் வாழி வாழி யென்றனன் முநிவர் கோமான்.

(எ-து.) இப்படி பூசைபண்ணின இயமதர்மனைச் சந்தோஷத்துடனே இரண்டு கண்ணினாலேயும்பார்த்து குற்றமில்லாத உன்னுடையபூசைக்குமனமகிழ்ந்தோம்தர்மராஜனென்றுசொல்லப்பட்டபேரு முனக்கேதகும், உனக்குச்சமான மொருவருண்டோ ! புகழினைவாய்ந்தஇயமதர்மராஜனேநீவாழக்கடவதுவாழக்கடவது என்று ஆசிகூறினார் முநிவர்களுக்கரசனானசானந்தமுநிவர்.—எ-று. (ரு0)

என்னுளத் திசனாய் வந் தென்னையுந் தரும னோக்கி
மன்னினை யுனக்கு நாயேன் வழங்கு கைம்மாறே தையா
உன்னுடை தரிசனந்தா னுயர்ந்தன னெனது பானீர்
உன்னியே வந்த செய்தியுரையென மொழிந்தான்கூற்றன்.

(எ-து.) இப்படிவாழ்த்திய முநிவனுடனே இயமதர்மராஜன் சுவாமி? என்னுடைய ஹிருதயத்திலேயிருக்கிறபரமேஸ்வரன்போல் இவ்விடத்திலெழுந்தருளிவந்துஎன்னைத்தருமமுள்ளவனாகச்செய்தீர்உமக்குநான்செய்யும்பிரதியுபகாரமென்னவிருக்கின்றது! ஐயனே? உன்னுடைய தரிசனத்தால் பிழைத்தேன் தேவரீர் என்னிடத்திலேநினைத்துவந்தகாரியத்தைச்சொல்லவேணுமென்றான். —எ-று. (ருக)

நீதியாய் நின்னைக் காண வந்தன நின்னைக் கண்டே
மேதிலுன் புரத்தி னுள்ள வியல்பினைக்காண்டல்வேண்டும்
கோதறக் காட்டு தற்குக் கூடநீ வருதி யாலென்
றோதினன் முநிவன் பின்னர் நடுவனீ துன்ன லுற்றான்.

(எ-து.) இப்படிகேட்டஇயமதர்மனைப்பார்த்துநீதியுள்ளவனே! உன்னைப்பார்க்கவந்தோம், அப்படியேபார்த்தோம்; இனி உன்னிடபட்டினத்திலுள்ளசிறப்புகளைப்பார்க்கவேணும், அதைக்காண்பிக்க நீர் கூடவரவேணுமென்று சானந்தமுநிவர்சொல்ல அதின்பிறகு இயமதர்மன்இப்படிஆலோசிக்கத்தலைப்பட்டான்.

இந்தமா முநிவர் செய்தி யாவையும் நாரதன்றான்
வந்து கூறின னறிந்தேன் மாதவர் குணங்கள் கூறிற்
சந்ததஞ் செய் தவங்க டண்ண ளி யுடைய ரேனும்
வந்துதான் பிறர் தமக்கு வலிதுயர் விளைப்ப ரம்மா.

(எ-து.) இந்த சானந்தமுநிவருடைய செய்திகளெல்லாம் நாரதர்வந்துசொன்னா ரறிந்திருக்கிறேன், அல்லாமல் மகத்தான தபசுள்ளவர்களுடைய குணங்களைச்சொல்லுமிடத்தில்சார்வதா காலமுஞ் செய்யுந்தவங்களால் பொருந்திய அருளும் தயையுமுடையவர்களானாலும் பிறருக்குவொருவேளைகளி லதிகதுக்கம்விளைவிப்பார் என்று ஆச்சரியமுற்று.—எ-று. (ருஉ)

நடுநிலை தவமுளா ரென் றிவர்தமை நம்பொ ணாது
கடிதழை யாவிருந் தாய் வந்தனர் கருத்திற் காத
லொடுநமைப் பார்க்க வந்தா ரவர்நமதூர்பா ழாக்கி
விடநினைத் திண் டிருந்தார் விடலருந் தயவுளார்போல்.

(எ-து.) நடுநிலையுந்தவங்களுமுள்ளவரென்றுஇந்தச் சானந்தமுநிவரை நம்பப்போகாது, சீக்கிரமாகநாமழைக் காதவிருந்தாகவந்தவர்ஆசையோடு நம்மைப்பார்க்ககருதிவந்தவரல்லர், நமது

ஊரைப்பாழாக்கநினைத்து நீங்காத தயவுள்ளவரைப்போல்இங் கேயிருக்கிறுரென்றுஇயமதர்மன்மனதிலே நினைத்தான்—எ-று

இவருரை கேட்ப தன்றி யெதிருரை கூ றெணுது
தவறிவ ருரைக்கு மாறு சாற்றிடிற் சாப மீவா
ரவனியிற் பிறரைப் பீடித் தலைத்திட வுன்னி னூரேற்
பவமறு முனிவ ருக்குப் பாரமோ பாரமன்று.

(எ-து.) இந்தச் சானந்த முனிவருடையவார்த்தைக் குடன் படுவதல்லாமல் மறுத்துச்சொல்லப்போகாது' மகாதபசி! இவர் சொல்லும்வண்ணஞ் செய்யாவிட்டால் சாபங்கொடுப்பார், பூமி யில் எவரையாவது துன்பப்படுத்த நினைத்தார்களேயானல்பாவ மற்ற முனீஸ்வரர்களுக்கு அது வொருபாரமோ! பாரமல்லவெ ன்று நினைத்து இயமதர்மன்.—எ-று. (ருரு)

இந்திரன் சம்பத் தெல்லா மிருங்கட லதனில் வீழ்ந்து
நந்துக வென்று சாப நவின்றன னொருவன் மிக்க
புந்தியா னூறு யாகம்புரிந்தரு ணகுடன்றன்னை
யுந்துமெய்ப் பாந்த ளாகிப் போதியென் றொருவன் சொன்[னன்.

(எ-து.)முற்காலத்தில்தமக்கபராதம்பண்ணினதேவேந்திர னுடைய சம்பத்தெல்லாங் கடல்கொண்டுபோகக் கடவதென்று தூர்வாசரிஷியானவர் சபித்தார், அல்லாமல் நூறுயாகஞ்செய்து தேவேந்திர பட்டத்திற்குவந்தநகுடராஜனைநகரும்படியான பெ ரும்பாம்பாகக்கடவதென்றுஅகஸ்தியமுனிவர்சபித்தார்—எ-று.

அறுபதி னுயிரம் பே ராகிய சகரர் தம்மை
வறிதுநுண் பொடியாய்வீழநோக்கினன் மதித்தொருத்தன்
பறையனுக் கடிமை யாக்கிப் பகரரு மயோத்தி வாழு
மிறைவனைப் படாத பாடு படுத்தின னெழுந் தொருத்தன்.

(எ-து.) கபிலரிஷியானவர் அறுபதினுயிரம்பேராகியசகல ராஜர்களையெல்லாம்ஒருநிமிஷத்தில்சாம்பலாகயெரிந்துவிழநண் ணினல்பார்த்தார், பின்னையும் விசுவாமித்திர மகாரிஷியானவர் அயோத்தியாபுரியில்வாழ்கின்றஅரிச்சந்திரராஜனைபறையனுக்கு அடிமையாகப்பண்ணி படாதபாடுகளைப்படுத்தினர்.—எ-று. ()

சாந்தரா யிருந்தா லென்ன தவமுனி வருக்குச் சீற்றம்
போந்துமூக் கிடை யிருக்கும் புனிதனன் னியமமொன்று
சார்ந்திடி லதனைத் தப்பார் சாற்றெணு திவர்முன் யாதும்
வாய்ந்தகன் மாமிக் காடை சோர்ந்தது போல மன்னே,

(எ-து.) சாந்தமுள்ளவரா யிருந்தாலும் தவமுனிவருக்குக் கோபம்மூக்கிடையிருக்கும்,பரமேஸ்வரருடையநல்ல நேமநிஷ்டையொன்றில்மாத்திரம்வழுவாதவர்களாகையால் எதுவுஞ்சொல்லப்படாது,மாமியார் உடுத்தினநல்லவஸ்திரம்நழுவினால்மருமகளொன்றுஞ் சொல்லப்படாததுபோல நினைத்துப் பின்னையும் நினைக்கிறான் இயமதர்மராஜன்.—எ-று. (ருஅ)

பணியொடு பழக லொண்வாட் படையொடு படை பயிற்றல்
துணிவி னுண்மிசை நடத்தல் சொல்லரும் வேங்கைதன்னை
யணுகல்போ லிவரை மேவின் மோசம்வந் தடையு மம்ம
நணுகிவர் சித்த மொப்ப நடப்பதிங் கெவர்க்குங் கூடா.

(எ-து.) பாம்பொடு பழகுகிறதும், பிரகாசமுள்ளவாளாயுதத்தோடு வாளாயுதம் பழகுகிறதும், துணிந்துகயிற்றின்மேலே நடக்கிறதும்சொல்லுதற்கரிய வேங்கைப்புலியை மருவுகிறதுமாகிய இவற்றால் சீவனுக்கபாயநேரிடுவதுபோல இவரையடைந்தவர்க்குஅப்படியேவரும்.அம்மா! நம்மிடத்தில்வந்த இந்தச்சானந்தமுனிவரிட சித்தத்திற்கிணங்க நடக்கிறதுஎவர்களுக்குங்கூடாமை.—எ-று. (ருகூ)

பொய்யுரை கூறொணாது கூறிடிற் புகல்வர் சாபம்
உய்யலாங் கதிபின் னுண்டோ வுடையனு மிவர்பா னிற்பர்
துய்யரா மிவ ருரைத்த சொற்படி புரிது மென்று
வையகம் புகழுங் கூற்றன்மனத்திடை யுன்னினானல்.

(எ-து.)இவருடனேபொய்சொல்லக்கூடாதுசொன்னால்சாபமிடுவார், அதிலிருந்து நாம் பிழைக்கத்தக்கவகையுமில்லைசகலமுந் தம்முடைமையாயுள்ள பரமேஸ்வரனும் இந்தச் சானந்தமுனிவரிடத்தி லன்புடனேநிற்பார், ஆதலினால் பரிசுத்தமனமுடைய இவர்சொற்படி செய்வதேநமக்குநற்கருமமென்று நினைத்தான் வையகம்புகழப்பட்ட இயமதர்மராஜன்.—எ-று. (சூ0)

மனத்திடை யிவற்றை யுன்னி மறலிதன் னேவ லாள
ரினத்தினை நோக்கி நம்மூ ரெங்கணு மலங் கரிக்க
நினைக்குமுன் னேவிச் சொல்வீ ரென்னுமுன்னெடிய வீதி
யனைத்தையுங் கைவல் லோர்க ளணியுறப் புரித லுற்றார்.

(எ-து.) இப்படி பலவாறாக மனதிலேநினைத்து இயமதர்மராஜன் தன்னேவலாளர்களைப்பார்த்துநம்முடைய பட்டினமுழுமையும் அலங்காரஞ்செய்யவேணுமென்று சொல்லுதற்குமுன்

ணமே அத்தொழில் வல்லவர் அரசனே ? உத்திரவாகவேணு மென்றுமுன்னுகப் பட்டினத்தின்பெரியவீதிகளெல்லாமலங்கா ரஞ்செய்யத்தலைப்பட்டார்கள்.—எ-று. (சூக)

வேறு.

கடிகொண் மாநகர் கன்னிதன் னல்குலி
னிடை யணிந்தநன் மேகலை யென்னவே
வடு விலாத மரகதத் தோரணம்
நெடிய வீதிக ளெங்கு நிரைத்தனர்.

(எ-து.) காவல்கொண்டு விளங்கும் அந்த இயமபுரமாகிய பெண்ணினிடையிலே யணிந்த நல்ல மேகலா பரணம்போலே குற்றமில்லாதபச்சைத்தோரணங்கள்பெரியவீதிகளெங்கும் வரிசைவரிசையாகக் கட்டினார்கள்.—எ-று. (சூஉ)

சந்தமுற்ற பைம் பூகங்க டன்னையே
பந்த ரூறு நிறுத்தினர் பாவையர்
கந்தரத் தெழி லக்க வரும்படி
வந்துபூங் கடை காப்பது மானுவே.

(எ-து.) அழகுபொருந்தியபச்சைக்கமுகுகளைப் பந்தல்கள் தோறும் நிறுத்திவைத்தார்கள், அப்பட்டினத்திலுள்ளபெண்களுடையகழுத்தின் அழகைக்கிரகிக்கவேண்டிஅவர்களுடையவீட்டுகடைவாயிலிலேகாத்துக்கொண்டிருப்பதுபோலவிருந்தது.

பரிமுகம் பொரும் பைங்குலை வாழைகள்
விரவி நாட்டினர் வீறுக் கரும்பொடு
பொருவி னீல விளிம்பு பொருந்தியப்
பரிய முத்துவி தானம் பரப்பினர்.

(எ-து.) குதிரை முகங்களைப்போலவளைந்த குலைகளையுடைய பச்சைவாழைகளைப் பெருமையுள்ள கரும்போடு கலந்துநட்டு, நீலரத்தினக்கரைபொருந்திய பெரியமுத்துமேற்கட்டிவிரித்துப் பந்தலிட்டார்கள்.—எ-று. (சூச)

தாவி லாடியி னேடுயர் சாமரம்
பூவ லங்கல் பொருத்தினா ரெங்கணும்
தேவர் காண மணிநிலத் தேரின்மேற்
பாவை யாடும் படிபுரிந் தானரோ.

(எ-து.) தாழ்வில்லாதகண்ணாடிகளும்அதனோடுகவரிமான் மயிர்களுங்கட்டிபூமாலைகளும்எங்குந்தொங்கவிட்டார்கள் தேவர்கள்கண்டு மகிழத்தக்கதாக இரத்தினமிட்டிழைத்தநிலத்தேரின் மேலே பதுமைகளாடும்படிக்குப் பண்ணினார்கள்.—எ-று. ()

வண்ண வீதியின் மங்கைய ரேற்றிய
தண்ணுலா மணித் திப மிலங்குத
லண்ண லாரும் பதங்கன ருண்மகா
ரெண்ணி லார்வந் திலங்குதல் போலுமால்.

(எ-து.) அழகிய வீதிகளிலே பெண்கள்ஏத்திவைத்தசீதள மூலாவியவிரத்தினதீபங்கள்பிரகாசிக்கின்றன, பெருமைபொருந்தியசூரியன்பெற்றஎண்ணில்லாத பிள்ளைகள்வந்திருப்பதுபோலஇருந்தது.—எ-று. (சுசு)

பொருவில் விண்டொட வோங்கிய பூங்கதிர்
விரவு மாடக மேடையின் மீதிலோர்
சரிவளைக் கரத் தையலர் மேருமால்
வரையின் மேலிவர் மஞ்சையி லேறுவார்.

(எ-து.) மேருமலைகளின்மேலேஏறுகின்றமயில்போல் ஒப்பற்ற மேகமண்டலத்தைதயளாவிபொலிவுள்ளபொன்னாற்செய்த மேடையின்மீது சரிவளையணிந்தகையையுடைய அழகியபெண்கள் ஏறுவார்கள்.—எ-று. (சுஎ)

மின்றயங்கக் குயிற்றுப் பொன் மேடைகள்
மன்றல்வாயி ஞெறுந் தொறும் வைகுதல்
பொன்னின் மேரு புனைவடி வோடவ
ணொன் றிமிக்கு விளங்குத லொக்குமால்.

(எ-து.) வாசனையுள்ளவாசல்தோறும்மின்னல்போல்பிரகாசிக்கும்படியாகச்செய்த பொன்மேடைகளானதுமகம்மேருவானது அலங்காரவடிவங்கொண்டுவிளங்குவதுபோலிருந்தது. ()

முழவி னங்கண் முழங்குதல் கேட்டரோ
வெழலி வந்து முழங்கிய தென்னவே
செழும யூரக் குழாநடஞ் செய்யுமால்
நுழைநு சும்பிடைக் கூத்தியர் நோக்கவே.

(எ-து.) மத்தளக்கூட்டங்கள் முழங்குவதை மேகமுழக்கமென்றெண்ணி அழகியசிறகினைவாய்ந்த மயிற்கூட்டங்கள் அதனை நுண்ணியஇடையினையுடையநாடகப்பெண்கள் பார்க்கநடனம்பண்ணும்.—எ-று. (சுஅ)

ஏம பூரண கும்ப மிருத்தினர்
தோமில் சித விமசலர் தூத்தினர்
தாமம் வேய்ந்தனர் தாழ்வர விவ்வகை
நாம மாட நகரணி வாய்ந்ததே.

(எ-து.) திண்ணைகள்தோறும்பொன்னாற் செய்தபூரணகும்பம் வைத்தார்கள், வீதிகள்தோறும் குற்றமில்லாத பன்னீர்தெளித் தார்கள், மாலைகள்கட்டித்தொங்கவிட்டார்கள், இவ்வண்ணமாக உயர்ந்தமாடகூடமுள்ள இயமபுரம்யாதுங்குறைவுபடாமல் அல ங்கரிக்கப்பட்டது.—எ-று. (எ0)

நந்திடாத நக ரணி செய்ததை
வந்து தூதர் விளம்பவு மாமெனச்
சந்த முற்ற தனிநகர் நோக்குதற்
கெந்தைவா வென்றியம்பின னின்புற.

(எ-து.) அழிவில்லாத இயமபுரஞ் சிறப்புசெய்ததை இயம தர்மராஜனுடனே சொல்லவும், அவர் ஆச்சரியமுற்று நல்லதெ ன்று சானந்தமுநிவரைப்பார்த்து அழகுபொருந்திய ஒப்பற்றன ன்பட்டினச் சம்பிரமத்தைப் பார்ப்பதற்கு என்னையனே? வாரு மென்று அன்புடனேசொன்னான்.—எ-று. (எக)

சொன்ன காலைச் சுடர்மணிப் பாதுகை
தன்னிலொண் சரண் வைத்துத் தவமுநி
அன்ன கால னவர்கரந் தாங்குறத்
துன்னுமா தவர் சூழ நடந்தனர்.

(எ-து.) அப்படிசொன்னவளவிலே பிரகாசமுள்ள ரத்தின ப்பாதக்குறட்டிலே ஒளியுள்ள தன்பாதங்களைவைத்து அந்த இய மதர்மன் கைலாகுகொடுக்க நெருங்கியமுநிவர்கள்கணநாதர்கள் தன்னைச்சூழ்ந்துவரத் தவமுள்ளசானந்தமுநிவர் எழுந்து நடந் தருளினார்.—எ-று. (எஉ)

எகின ராசி யெழுந்து நடித்தென
மிகவருங் கவ ரித்தொகை வீசினர்
நகமதிக் குழு நாடவந் தாலெனப்
புகரில் வெண்குடைத் தாங்கினர் பூவையர்.

(எ-து.) சானந்தமுநிவர் இயமபுரத்தைப்பார்க்க எழுந்தரு ளியகாலத்தில் அனேக அன்னங்களெழுந்து ஆடினதுபோல அ னேக வெண்சாமரைகளிருபுறத்திலும்வீசினார்கள், பிரகாசமுள் ளசந்திரர்கள் அனேகர் அவரைப்பார்க்கவந்ததுபோல, மாசற்ற வெள்ளை வட்டக்குடை அனேக மெடுத்தார்கள் அரம்பா ஸ்திரீ கள்.—எ-று. (எஙு)

அரவினம் படிந் தாடி யெழுந்தென
வரனல் லாலவட் டம்பணி மாறினர்
பொரு வில்லாத விடைக்கொடி பொற்புற
விரு புறத்தினு மேந்தின ரெண்ணிலார்.

(எ-து.)பாம்பினங்களிவரைப்பார்த்து ஆடியெழுந்ததுபோல ஆலவட்டம்பணிமாறினர்கள் ஒப்பில்லாதரிஷபக்கொடியைஅழகுபெற இருபக்கங்களிலும் ஏந்திப்பிடித்தார்கள், எண்ணிறந்த பேர்கள்.—எ-று. (எச)

நந்தி தானுன் னுளத்திடை நண்ணுத
லிந்தநீரொன் றெதிருறக் காட்டல்போல்
வந்து திபத் தளிகைகள் வன்கைமேற்
சந்தமங் கையர் தாங்கொடு சுற்றினர்.

(எ-து.) சானந்தமுனிவரே ? உம்முடைய இருதயத்திலே பரசிவனனவரிருப்பதுஇப்படிதானென்று எதிராகக்காட்டுவதுபோல அழகுள்ளதெய்வரம்பையர்கள்,அம்முனிவருக்குமுன்பாகவந்து தங்கள் வளப்பமுள்ள கைகளிலேந்தியதீபாலாத்திகளை சுத்தினர்கள்.—எ-று. (எரு)

சித்திரங் கொள் பலமணிச் சித்திர
வத்தி யேத்திவந் தார்பல் லரம்பைமார்
புத்தியா னறும் போதுக டூவியே
பத்தி யோடு பணிந்தன ரெண்ணிலார்.

(எ-து.) அழகுள்ள பலமணிகளாலும்செய்தசித்திரஆலாத்தியேந்திக்கொண்டுவந்தார்கள்,பல தேவப்பெண்கள்,பின்னும்புத்தியினலேதெரிந்தெடுத்தவாசனையுள்ளபுஷ்பங்களைத் தூவிபத்தியுடனே பணிந்தார்கள் எண்ணிறந்தபேர்கள்.—எ-று. (எசா)

அண்டர் போற்று மருண்முனி நீற்றொளி
மண்டு கின்ற மதிநில வென்றுநீர்
முண்ட கங்கண் முகிழ்ந்தன வாமெனக்
கண்ட யாவருங் கைகுவித் தாரரோ.

(எ-து.) தேவர்கள் துதிக்குங்கிருபாநிதியானசானந்தமுனிவர் திருமேனியிற்றிகழும் விபூதியின்விளக்கமானது சோடசகலையோடும் விளங்குஞ் சந்திரன் பிரகாசமென்றுநல்ல தாமரைகளிதழ்முடினதுபோல, சானந்தமுனிவரைப் பார்த்தபேர்களெல்லாருங் கைகுவித்துக் கும்பிட்டார்கள்.—எ-று. (எஎ)

தங்கு நீற்றொளி மேனியர் தங்களை
கங்கை நித்த மெனக்கரு திக்கதிர்
பொங்கு மன்னக் குழாய் வரல் போலவே
மங்கை மார்மறு கெங்கணும் வந்தனர்.

(எ-து.) விபூதியினாற்பிரகாசிக்குந்திருமேனியராய்வருங் கண நாதர்களையெல்லாம் சுத்தமுள்ள கங்கையென்றெண்ணி ஒளி பொருந்தியஅன்னப்பட்சிகூட்டங்கள்வருவதுபோலஇயமபுரத் திலுள்ள பெண்களெல்லாரும் வீதிகளெங்குஞ்சூழவந்தார்கள்.

ஞான பாநு நணுகுத லாலுள
மான கஞ்ச மலர்ந்து நலன்பெனுந்
தேனு லாவ விறைஞ்சித் திகழ்ந்தனர்
தூநல் வீதியின் மேவு சுராதிபர்.

(எ-து.) சானந்தமுநிவராகிய ஞானசூரியன் உதையமாகிவந்த படியினாலே இருதயதாமரைமலர்ந்துஅதில் நல்லஅன்பென்னுந் தேனுலாவத் தெண்டனிட்டு விளங்கினார்கள் சுத்தமாகிய நல்ல வீதியிலேவந்த தேவர்கள்.—எ-று. (எகூ)

சகம ளிக்குந் தடமலர் வேதனோ
வகல்பெருங் கடல் மேற்றுயி லண்ணலோ
நிக ரிலாத நிரையரு ளீசனோ
விகலிலா விவ னென்றுரைப் பார்சிலர்.

(எ-து.) உலகங்களைச்சிருஷ்டிக்கிறவிசாலமான தாமரைவாச னாகிய பிரமதேவனோ! அகன்று பெரிதான திருப்பாற்கடலின் மேலே நித்திரைசெய்யப்பட்ட விஷ்ணுதேவனோ! அல்லது ஒத் தாரு மிக்காருமில்லாத கிருபைநிறைந்த பரமேஸ்வரனோ!பகை யிலாதஇவராரோவென்றுசொல்லுவார்கள்சிலபேர்கள்.—எ-று

திருவுறுந் தருமர்க் கருள் செய்யவே
கருதி வந்த கணேசனென் பார்சிலர்
ஒருமு கத்தொடு மோரிரு கையொடும்
வருக டம்பணி வள்ளலென் பார்சிலர்.

(எ-து) சிலர் அயிஸ்வரியமுள்ள இயமதருமராஜனைக்கிருபை யோடு இரட்சிக்கவந்தகணநாதரென்பார்கள்,சிலர்ஒருமுகத்தோ டும் இரண்டுகையோடும்வந்த சுப்பிரமணியராகும் இந்த வள்ள லாகிய சானந்தமுநிவரென்றுஞ் சொல்லுவார்கள்,—எ-று. ()

மாசுருத மதியு நுதற் கணுங்
தேசுலாவு பரசுங் திருந்திய
காசின் மானுங் கரந்திவண் வந்தரு
ளீசனு மிவ னென்றுரைப பார்சிலர்.

(எ-து.) மாசற்றசந்திரனும்,நெற்றிக்கண்ணும், பிரகாசமுள்ள மழுவும்,குற்றமற்றஅழகியமானும்,தெரியாமல்மறைத்துக்கொண்டுஇவடம்வந்தருளியபரமேஸ்வரனுகு மிவரென்றுசொல்லுவார்கள் சிலர்.—எ-று. (அ௨)

பொங்கு பேரருளோடு பொருந்தியே
நங்கணுற்ற நவை தவிர்த் திறிலாத்
துங்க முத்தி யளிக்க வித்தூயவ
ரிங்கு வந்தன ரென்றுரைப் பார்சிலர்.

(எ-து.)அடங்காதபெரியஅருளுடனேகூடிநம்மிடத்திலேயுள்ள குற்றங்களைத்தீர்த்துஅழிவில்லாத நன்முத்தியைத்தரவேண்டி இவரிங்கேவந்தாரென்று சொல்லுவார்கள்சிலபேர்கள். ()

இன்ன வாறெவ ருந்தொழு தேற்றலுந்
தன்னுள் வாழ்ந்து நடக்குந் தவமுனி
குன்னருந் திறற் கூற்றனு துங்கிநின்
றன்ன நன்னக ரத்தணி யோதினன்.

(எ-து.) இவ்வண்ணமாய்இயமபுரத்தி லுள்ளோரெல்லாருங் கும்பிட்டுத்துதிக்கவும்தன்னுள்ளமகிழ்ந்துநடந்தருளியசானந்தமுனிவருக்கு நினைக்கவரிதானசவுரியமுள்ளவியம தர்மராஜன் பக்கமாக வொதுங்கிநின்று அந்தஇயமபுரத்தின்வளங்களைச்சொலத் தொடங்கினன்.—எ-று. (அச)

நற்பளிங் கிழைத்திடு மொருமுன் றிலினடுவ
னெற்பொருந்து பொற்றெற்றியி னிருந்தபாலிகைதான்
பொற்புறும்புனற் றடத்திடை யலர்ந்தவம் புயத்தி
னிற்பிறங்குதண் பொகுட்டென விளங்குதல் பாராய்.

(எ-து.) நல்லபளிங்கினலிழைத்த வொப்பற்றவாசலில் பிரகாசம்பொருந்திய புறந்திண்ணையிலிருந்த முளைப்பாலிகையானது அழகுள்ள தடாகத்தினடுவேபூத்ததாமரையிற் பிரகாசிக்குங் குளிர்ச்சியான தாமரைப்பூங்கொட்டைபோல விளங்குகின்றது பாரும்.—எ-று. (அரு)

விண்ணினைத் தொடவளர்ந்த நன்மரகத மேடைக்
கண்ணிலங்கு மின்னார்க ளம்மரகதக் கதிரால்
வண்ணம்வேறு பட்டிமகிரி யீன்றமங் கையர்கள்
எண்ணிலார்கொ லென்றயிர்த் திடவியங்குதல் பாராய்.

(எ-து.) ஆகாயத்தை யளாவவளர்ந்த நல்லமரகத ரத்தின மேடையினிடத்தி லிலங்கிய பெண்கள் அந்தமரகத காந்தியினாலேதங்கள்வடிவம்வேறுபட்டுபச்சைநிறமாகி இமயகிரிராஜன் பெற்ற பெண்களனேகர் இங்கே வந்திருக்கிறார்களென்று ஐயமுறும்படி அழகிய பெண்கள் உலாவுகின்றதைப்பாரும்ஐயனேயென்றான்.—எ-று. (அசு)

முண்டகன் றனையொத்த நன்முநிவ வவ்வரியூர்
கொண்டபே ரெழில்காண் பதற்குன்னி யேகுதல்போல்
விண்டொடும் படிநிவர்ந்த பொன் மேடைமீதிவரும்
பண்டருங்கனி மொழிமடந்தையர் தமைப் பாராய்.

(எ-து.) பிரம்மதேவனையொத்தமுநிசிரேஷ்டரே மேலேயிருக்கும் தேவேந்திரப்பட்டணத்தின் பேரழகைப் பார்ப்பதற்கு எண்ணிப்போகின்றதுபோல ஆகாசத்தைத்தொடும்படிக்குயர்ந்திருந்த பொன்னுப்பரிகைமீதிலே நடந்துபோகிற இசைபோலுமிருதுவான வார்த்தையுள்ள பெண்களைப்பாரும் என்றான்.—எ-று. (அஎ)

முறையமைத்த கோமேதக முன்றினிற் றரள
மறுவில்பந்தருட் டிருந்துபன் மாமணித் தெற்றிச்
செறிமனைக்கண் வாழ்பாக்கிய திருவுளங் களியா
யுறையுநீடெழிற் பீடமொத் தொளிருதல் பாராய்.

(எ-து.)கோமேதகமணிகளைவரிசையாக அமைத்திழைத்த முற்றத்தினடுவில் மாசில்லாத முத்துப்பந்தலிட்டு அதன்கீழ் திருந்தியநவரத்தினமிழைத்தவேதிகையானது நெருங்கியமனைகளிடத்திலே வாழும்பாக்கியலட்சுமிமனதுசந்தோஷித்திருக்கும் அழகுள்ள பெரியசிங்காசனம்போற் பிரகாசிக்கிறதைப்பாரும் என்றான்.—எ-று. (அஅ)

புனைசெழுந்தொடைப் பந்தலிற் றூண்டொறும் பொருந்துங்
கனகநல்லெழிற் பாவைதன் கவின்மிகு முகத்தை
வனசமென்று வருமளி யொழுங்கென வளங்கூ
ரினியபன்மணித் தோரண மிலங்குதல் பாராய்.

(எ-து.) அழகியமாலைகளா லலங்கரித்தபந்தல்களில் தூண்கள்தோறும் அமைத்த பொற்பாவைவயினுடைய பேரழகுள்ள முகங்களை தாமரைப்பூவென்று மேலேபறந்துவரும்வண்டொழுங்குபோல வளப்பமிகுந்து இனிமையான அனேக நீலரத்தின தோரணங்கள் பிரகாசிக்கின்றனதைப்பாரும், ஐயனே ! என்றான் இயமதர்மன்.—எ-று. (அ௯)

என்று நன்னமன் கூறலு மிருஞ்சதயங் கனிய
நன்று நின்னகர் மருகெழில் கண்டன நயந்தோம்
மன்றலிப்புற மதிலுடைய வாசல்க ணான்கு
மின்றுகாட்டுதி யென்றொழிந் தன்னிபல் முனிவன்.

(எ-து.) நீதிவழுவாத இயமதர்மன்இவ்வண்ணமாகச்சொல்ல உன்னுடைய பட்டணத்தின் வீதிகளழகைக்கண்டு சந்தோஷப்பட்டோம், இனிபுறத்திலுள்ளமதில்பொருந்தியநான்குவாசலையுமின்றைக்கு நமக்குக்காட்டும் என்றுசொன்னார் பெருமையுள்ள சானந்தமுனிவர்.—எ-று. (௯0)

முனியுரைத்த சொல்லஞ்செவி புகக்கர முகிழா
வனகவென்று நின்கருத்தென வமையுடைத் தருமன்
மனநலங்கவர் மேற்றிசைக் கோபுர வாசற்
றனிலழைத்துப்போ யவ்விடத் துளவளஞ் சாற்றும்.

(எ-து.) இவ்விதமாகச்சானந்தமுனிவர்சொன்ன வார்த்தையைத்தனது அழகிய காதினிற்கேட்ட மாத்திரத்திற் கையைக் குவித்து நிர்மலமானவரே! உமது சித்தமென்று, அடக்கமுள்ள இயமதர்மராஜன் கண்டோர் மனமகிழ்ச்சிகொள்ளும் மேற்குத்திசை கோபுரவாசலுக்குள்ளேஅவரையழைத்துப்போய் அவ்விடத்திலுள்ள வளப்பங்களைச் சொல்லுவான்.—எ-று. (௯க)

அமுதவெள்ளமோ பாற்கட லெழுந்த தோவலது
விமலமாமதி நிலவின தொழுக்கமோ மிகுந்த
தமரவார்திரை சுரநதி தீர்த்தமோ ததுவெண்
கமலராசியோ வென்னவிவ் வுழியுறல் காண்டி.

(எ-து.) அமிர்தம்பெருகி வெள்ளமானதோ! திருப்பாற்கடல் பொங்கியெழுந்ததோ! அல்லதுபரிசுத்தமானசந்திரப்பிரகாசத்தி னொழுக்கங்களோ ! மிகுந்தசத்தமுள்ள அலைகளோடுங் கூடிய கெங்கைப்பிரவாகமோமேன்மைபொருந்தியவெள்ளைத்தாமரை

யின் கூட்டமோ; என்று பலவிதமாக வெண்ணத்தக்கதாயிவ்வி டத்திருக்கும் பதவியைப்பாரும் என்முன்.—எ-று. (கூஉ)

தருமவிஞ்சையோ ரயலவர்க் கிதம்புரி தகையோ
ரரியவந்தணர்க் கன்னமுஞ் சயனமு மளித்தோ
ருரியசீருப வாசமுற் றவர்மிடி யொழித்தோ
பரிவினோடற லளித்தவர் வாழ்வதிப் பதியே.

(எ-து.) தருமசிந்தையுள்ளபேர்கள், பிறருக்கிதம்பண்ணப் பட்டபேர்கள், அரிதானபிராமணருக்குஅன்னமும்படுக்கசயன முங் கொடுத்தபேர்கள், தங்களுக்குரிமையான சிறந்த வுபவாச மிருந்தவருடையதரித்திரத்தைநீக்கினபேர்கள் சந்தோஷத்துட னே தண்ணீர் வார்த்தபேர்கள், இவர்களெல்லாம் வந்துவாழப் பட்டது இந்தப்பதவி என்றுன்.—எ-று. (கூங)

சினமிலாதவர் மோகமற் றவர்கொலை தீர்ந்தோர்
முனையில்மன்னவர் நோக்குற வாருயிர் முடிந்தோ
ரினையரெண்ணில்வை பவத்தொடு விமானமீ தேறி
வனிதைமாரொடு வந்திவர் வாழ்வதிவ் விடமே.

(எ-து.) கோபமில்லாதபேர்கள், மோகங்க ளற்றபேர்கள், கொலைசெய்வதை விட்டபேர்கள், உயுத்தமுனையிலேதன்னைரட் சித்தவரசன் பார்த்திருக்க, சண்டைபண்ணிச்சீவனைவிட்டபேர் கள் இவர்களெல்லாம் பூமிலேயிருந்து இவ்விடம் வரும்போது எண்ணக்கூடாதவைபவத்துடனேவிமானமேறிக்கொண்டுதேவ ரம்பைகளுடனே இவ்விடத்திற்குவந்துவாழுமிடம் இது தானெ ன்றுசொன்னன் எமதர்மராஜன்.—எ-று. (கூச)

இந்துகாந்தநன் மாளிகை முன்றினி லிலங்க
முந்துவச்சிரம் வெள்ளிவெண் முத்தினு லமைத்த
சந்தவேதிகை மீதருந் தையலா ருடனே
நந்துமின்பமீ தூர்ந்திட நண்ணுதல் காண்டீ.

(எ-து.) சந்திரகாந்தத்தினுற்செய்த நல்ல மாளிகைமுற்றத் திலே பிரகாசிக்க நவரத்தினங்களிலுயர்ந்தவச்சிரங்களால்வெள் ளிகளால், வெள்ளைமுத்துக்களால்அலங்கரித்ததிண்ணையின்மீதி லே அரிதான தேவரம்பைகளுடனேமகிழ்ந்து இன்பங்கள னுப விப்பதைப் பார்த்தருளும் ஐயாவென்றுன்.—எ-று. (கூரு)

அலகிலாவெழிற் சந்தன கந்திக ளமைந்தே
யிலகுநல்லியாழ் மிடறுட ரென்றுபட் டிசைப்ப

குலவுமேழிசைப் பாடுதல் கேட்டுளங் குளிரப்
பொலிவினேடுவீற் றிருந்திடல் காண்டிவண் புகழோய்.

(எ-து.) மிக்க சவுந்தரியமுள்ள சந்தனகாந்திகளாகிய பெண்களமைந்திருந்து பிரகாசிக்கிற நல்லயாழும் தங்கள் கண்டமுமொன்றுபட்டு தொனிக்கும்படிக் குலவப்பட்ட சத்தராகங்களையும் பாடுவதைக்கேட்டு மனங்குளிர்ந்து பொலிவுடனே யிவர்களெல்லாம் வீற்றிருப்பதைப்பாரும் ஐபா! வளப்பமுள்ள புகழைவாய்ந்தசானந்தமுனிவரேயென்றுசொன்னன், இயமதர்மராஜன்.—எ-று. (௬௬)

எனமொழிந்துயர் தென்றிசைப் புரந்திடு மிறைவன்
முனிவர்போற்றிடு மினியசா னந்தமாமுனியை
யுனலருந்தனி யுத்தர கோபுர வாசற்
றனிலழைத்துவந் துரைக்குமவ் வுழிவளந் தனையே.

(எ-து.) சிறந்ததென்றிசைக்கதிபனுகிய இயமதர்மராஜனுனவன் முனியீஸ்வரர்களெல்லாந்துதிக்குமினிமையானசானந்தமுனிவரைமேற்கோபுரவாசலிலிருந்து நினைத்தற்கரிதான வொப்பற்ற வடகோபுரவாசலுக்கு அழைத்துவந்து அவ்விடத்திலுள்ளவளப்பங்களைச் சொல்லுகிருன்.—எ-று. (௬௭)

வேறு.

உன்னவரி தாகியவிவ் உத்தர திசைக்கண்
மன்னியது செம்மணி மயத்தது பொன்மேரு
தன்னையு நிகர்த்தது தழைத்த வடவைத்தீ
அன்னதுயர் கோபுரம தார்வமொடு பாராய்.

(எ-து.) நினைத்தற் கரிதாயிருந்த வடக்குதிசையில நிலைத்திருக்கும்உன்னதமானகோபுரமானது,ஒளியில்சிவந்தமாணிக்கமயம்போலும்உயர்வில்பொன்மேருபருவதம்போலும்,நிறத்தில் தழைத்த வடவாக்கினிபோலும் விளங்குவதைப்பாரும் ஐயனே என்ருன்.—எ-று. (௬௮)

எண்ணிலிள ஞாயிறு திரண்டவொளி யென்ன
நண்ணியது காணிவ்வுழை நற்றுகிரி ழைத்த
வண்ணநிலை மேடைகளு மாமணியி னலே
பண்ணிய மனைத்திரளு மன்பினெடு பாராய்.

(எ-து.) அனேகவாலசூரியர்கள் ஒருமிக்கக்கூடிப்பிரகாசிப்பதுபோல நல்லபவழங்களிழைத்தவண்ணமுள்ளமேனிலமாட

மும் உப்பரிகை மேடைகளும் மாணிக்கத்தினுற்செய்த அனேக வீடுகளும் பொருந்தியிருப்பதை அன்புடனதைப்பாருங் ஐயா வென்ருன்.—எ-று. (கூகூ)

அண்ணலையி றைஞ்சினவ ராசில் விரதங்கள்
பண்ணினவ ரீசனடி யாரடி பணிந்தோர்
புண்ணியநல் லந்தணரை யன்பொடு புரந்தோர்
தண்ணளி யொடுற்றனர் தவப்புனித பாராய்.

(எ-து.) பரமேஸ்வரனைவணங்கினபேர்கள், குற்றமில்லாத விரதங்களைச் செய்தபேர்கள், சிவனடியார் பாதத்தைப் பணிந்த பேர்கள், புண்ணியசொரூபராகிய பிராமணேத்தமரை தயவுடனேரட்சித்தபேர்கள்,இவர்கள் எல்லாம் இனியசந்தோஷத்துடனேயிருப்பதை தவசீலரேபாரும் என்ருன்.—எ-று. (க00)

சத்தியமி யம்பினவர் தாதையொடு தாயைப்
புத்தியின் வணங்கினவ ரிட்டிகள் புரிந்தோ
ருத்தமநல் லன்பருப காரிய ருயர்ந்த
சுத்தரித மேயுரைசெய் .தூயரிவர் பாராய்.

(எ-து.) பொய்யுரையாதபேர்கள், தந்தை தாயை சுபுத்தியால்வணங்கினபேர்கள்,சிவாலயத்துக்குச்செங்கல்லைச்செய்துக் கொடுத்தபேர்கள், உத்தமமான நல்ல அன்புள்ளபேர்கள், சருவத்திராளுக்கு முபகாரியானபேர்கள், மேலான ஆசாரமுள்ள பேர்கள், இங்கிதமேபேசப்பட்ட நல்லவர்கள் இவர்களைப்பாரும் என்ருன். எ-று. (க0க)

இங்கிவர்க டம்முருவை யவ்விடயி னிட்டுப்
பொங்கு துயரந்தனை யகற்றியொளி பொன்ரு
துங்கவடி வோடுயர் விமானமிசை துன்னி
மங்கையர்க ளேவல்செய வென்னருகு வந்தார்.

(எ-து.) இங்குள்ள இவர்கள்தங்களுடலைப்பூமியினிடத்தே வைத்துப் பொங்கிவருந்துன்பத்தைநீங்கிபிரகாசிக்குநல்லதேகிகளாய் உயர்ந்தவிமானத்தின் மேலேறிக்கொண்டு தெய்வரம்பைகள் நெருங்கி பணிவிடை செய்யத்தக்கதா யென்னிடம்வந்தவர்கள்.—எ-று. (க0உ)

வந்தவிவர் தம்மையுண் மகிழ்ந்தினிது பாராய்
[illegible]துமணி குண்டல மணிக்கடக முத்தின்

சந்தவணி யாதிகள் சமைத்தினிமை தன்னொ
லிந்தமட வாரையு மளித்தன னிசைந்தே.

(எ-து.) இப்படியாய்வந்த இவர்களை உள்ளமகிழ்ந்துயினிமையுடனே நான்பார்த்து முதன்மையானரத்தின குண்டலங்கள்ரத்தினகடகங்கள் வெண்மையுள்ள முத்தாபரணங்கள் முதலானவெல்லா மிவர்களுக்குக்கொடுத்து உபசாரத்துடனேஅந்தப் பெண்களையு மிசைந்துகொடுத்தேன் என்றான்.—எ-று. (௰௩)

உளக்கினிய மங்கையரொ டுற்றுய ரரங்கின்
வளக்கொடி மடைந்தையர் நடஞ்செய மகிழ்ந்து
விளக்கமோ டிருந்தனர் விருப்பொடிவ் விடத்தே
குளக்கணிறை வர்க்குரிய கோதின்முனி பாராய்.

(எ-து.) மனதுக்கினிமையான பெண்களுடனேகூடிஉயர்ந்திருக்கப்பட்ட நடனசாலைகளிலே வளமுள்ள அல்லிக்கொடிபோன்றபெண்கள்நடிக்கமகிழ்ந்துவிளக்கத்துடனேஇவ்விடத்திலாசையுடனிருந்தனர்கள், நெற்றிக்கண்ணைவாய்ந்தபரமசிவனுக்குரித்தான குற்றமற்றசானந்தமுனிவரே? இவர்களைப்பாரும்என்றான்.—எ-று. (௧௦௪)

என்னவுரை செய்துநம னெண்டிசையு மெங்குந்
துன்னிய பெரும்புகழ் துளக்கமுனியைக்கொண்
டுன்னரு மளப்பரும் வளத்துட னுறுஞ்சீர்
மன்னிய குணக்குநெடு வாயினிடை வந்தான்.

(எ-து.) என்றிப்படிசொல்லி இயமதர்மனானவன் அஷ்டதிக்குகளெங்கும் பரவிய அளவற்ற கீர்த்தியினையுடையசானந்தமுனிவரை யழைத்துக்கொண்டு நினைத்தற்கரிதானமிக்கவளப்பங்களோடுஞ்சிறந்தகீழ்த்திசையிலுள்ளபெரியவாசலிலேவந்தடைந்தான்.—எ-று. (௧௦௫)

வேறு.

பலமணி துன்றி நிறைந்த படியுறு கோபுர மிதுபா
ரலகிற னித்தனி செய்த நவமணிமாளிகை யவைபார்
குலவிய பலபல சோதி குழுமி வயங்குறு மியல்பா
ரிலகியவறமுடையநல்லோரிதையமகிழ்ந்துரைசெயல்பார்.

(எ-து.) நானாவிதரத்தினங்கள் நெருங்கிஇழைத்துபடியோடுபொருந்தியகோபுரம்இதைப்பாரும், அளவில்லா நவரத்தினங்க

ளாலே தனித்தனியேசெய்த மாளிகை மண்டபங்களைப் பாரும், குலாவப்பட்ட பலபலபிரகாசங்கள் கூடிவிளங்குகிற பெருமையைப்பாரும், ஒளியுள்ள இவ்விடத்திலேதர்மமுடைய நல்லோர்கள் மனமகிழ்ந்திருக்கின்ற செயலைப்பாரும் என்றான்.—எ-று.

பொருள் விழைவின்றி யெவர்க்கும் புலனுடை விஞ்சையுரைத்
திருளுறும் வஞ்சனை யென்ப தெவ்வரிடத்துமிலாதோர் [தோ
பரர்கரு மத்தை நிறைத்தோர் படிறொடு வயிர மிலாதோர்
வரமிகு மயன மிழைத்தோர் மருவின ரிவ்வுழி பாராய்.

(எ-து.) பொருள்மே லாசையில்லாமல்எவர்களுக்கும் புலமையுள்ளவித்தையைச்சொன்னபேர்கள், அஞ்ஞானமுள்ளவஞ்சனை பகைஞரிடத்து மில்லாதபேர்கள், அயலவர்காரியத்தைத் தன்காரியம்போலப் பார்த்துநிறைவேற்றினபேர்கள், பொய்மையும் வன்னெஞ்சு மில்லாதபேர்கள், சாந்திராயனவிரதஞ்செய்த பேர்கள், இவர்களெல்லாம்மருவியிருக்கும்இவ்விடத்தைப்பாரும்என்றான்.—எ-று. (௧0எ)

சிவகதை யாவன் கேட்டோர் தினகர னீரடி தொழுதோர்
நவமுடை யிட்டிசெய் வித்தோர்நம்பினவர்தமையளித்தோர்
உவமையி லொருவர் தமக்கா யொருதம துயிரை விடுத்தோ
ரிவர்பலர் மேவி யிருந்தா ரிவ்வுழி மாதவ பாராய்.

(எ-து.) சிவகதையைக் கேட்டபேர்கள், சூரியபகவானுடைய இரண்டுபாதங்களையுந்தொழுதபேர்கள், புதியயாகஞ்செய்வித்த பேர்கள், நம்பினபேரை ரக்ஷித்தபேர்கள், ஒத்தாரு மிக்காருமில்லாத பரமேஸ்வரனுக்காக தம்முயிரைவிட்டபேர்கள், இப்படிப்பட்டவர்களாகியபலர்வீற்றிருக்குமிவ்விடத்தை பெருமையுள்ள தவமுனியே பாரும் என்றான்.—எ-று. (௧0அ)

பிறர்மனை யாளை யுவந்து பெற்றவ ளென்ன நினைந்தோர்
உறுதி யுளத்தொரு தார விரத நிருத்திய வுறவோர்
அறமுளர் பிறந்துயர்காணார்பரர்பொருளாசையி லாதோர்
இறுமுயிர் மீட்டருள் செய்தோ ரிவ்வுழிவைகினர் பாராய்.

(எ-து.) ஒருவருடையபத்தினியைச்சந்தோஷித்துப்பெற்ற மாதாவைப்போலநினைத்தவர்உறுதியுள்ளமனதுடனேஒருமனையாளுடனேயிருந்து இதுவேவிரதமாகநிருத்தினபெரியவர், தர்மமுள்ளபேர்கள், புறத்தியார் துயரப்படப் பார்த்திராத பேர்கள்,

அயலார் பொருள்மே லாசைப்படாதபேர்கள், ஒருவரால் போகுஞ்சீவனைப் பிழைக்கச்செய்தபேர்கள், இவர்களெல்லா மிவ்விடத்திலிருப்பதைப்பாரும் ஐயனே என்றான்.—எ-று. (கoக)

இந்திய வழியி லுராரை யினிமையுறு மிடி யோரை
அந்தணரைப் பெரியோரை வந்து புரந் தரு ளறிஞ
ரிந்தைவிடைச் சுரவடிவோ டீரில் பெருந் திரு மாறாச்
சந்த வணித் திரளோடு தங்கின ரிவ்வுழி பாராய்.

(எ-து.) இந்திரியவழிசெல்லாதபேர்கள், இனிமையில்லாத தரித்திரமுள்ளபேர்கள், நல்லபிராமணரை பெரியோர்களை வந்து இரட்சித்த அறிவுடையோர்களாகிய இவர்களெல்லாமிந்த விடத்திலே தேவவடிவமும் அழியாத மிக்கசெல்வமும் பெற்று மாறாதவழகிய ஆபரணங்களுடனே தங்கியிருக்கு மிவ்விடத்தைப்பாரும் என்றான்.—எ-று. (கக0)

வடிவி லியங்கண் முழங்க வாலிய சாமரை வீச
நெடிய வனக்குடை சூழ நிகழர மகளிர்க ளோடு
படியில் விமான மிவர்ந்து பரிவுறு மெனதிடை வந்து
கடிதிவண் வைகினர்வெல்லுங் காமனை வென்றவ பாராய்.

(எ-து.) எண்ணிலாவாத்தியங்கள்முழங்க, வெண்சாமரை வீச, நெடிதான அழகியகுடைகள்சூழ, ஒளிதங்கிய தெய்வரம்பைகளோடே யித்தருமவான்கள்பூமியிலேயிருந்துவிமானமேறி சந்தோஷிக்கு மென்னிடத்திலே வந்து சீக்கிறமாயிந்தப்பதவியிலே யிருந்தார்கள், யாரையும் வெல்லப்பட்டமன்மதனைவென்றசானந்தமுனிவரே பாருமென்றான் இயமதர்மராஜன்.—எ-று.()

நீடிய பொற்கத வொக்கும் நீலம ணைத்திரள் பாரா
யாடக சந்திர சாலையா சனமே டைகள் பாரா
யேடவிழ் பூவணை மஞ்ச மென்பன தூங்குதல் பாராய்
மாடுதொறுந் தொறு மைய மலர்வன முற்றன பாராய்.

(எ-து.) நெடிதான பொற்கதவிட்டிருக்கும் நீலரத்தினமிழைத்த மனைக்கூட்டங்களைப்பாரும், பொன்னாற்செய்த சந்திரமண்டபங்கள்சாலைகள், ஆசனங்கள்மேடைகள், இதுகளைப்பாரும், இதழ்விரிந்த புஷ்பசயனங்கள் தூங்குமஞ்ச மிருப்பதைப்பாரும் இடங்கள்தோறும் நந்தவனங்க ளிருப்பதைப்பாரும் என்றான்.—எ-று. (கக௨)

சந்தவ சந்தமு லாவும் சாளர மிலகுதல் பாராய்
மைந்துகொள் வச்சிர மாடமா ளிகையா னவை பாராய்
கந்திருவக் கொடி யன்னார் கான வியக்கு மின்னாரோ
டிந்த விடந்தோ ரியந்தா ரியாரையு மெம்மிறை பாராய்.

(எ-து.) சந்தனத்தென்றலுலாவிய சாளரவாசல்கள்பிரகாசிக்கின்றதைப்பாரும், அழகுள்ள வச்சிரமாடங்கள் மாளிகையானதுகளைப்பாரும், கொடிபோலொத்த கந்தருவப்பெண்கள் கானராகமுள்ள இயக்கப்பெண்களுடனே இந்தஇடங்கடோறுமிருந்த இவர்கள்யாவரையும் எங்களுக்கிறைவனாகிய சானந்தமுனிவரே! பாரும் என்றுஇப்படிஎல்லாஞ்சொல்லிக்காட்டினான் இயமதர்மராஜன்.—எ-று. (ககங)

இயமபுரிச்சருக்கம் முற்றிற்று.

ஆகூ பாயிரம் உட்பட சருக்கம் ச-க்கு

திருவிருத்தம்-ங00.

---



மா
யாளுட்
முள்ளபேர்க

உ

கணபதி துணை.



திருச்சிற்றம்பலம்.

# ஐந்தாவது

# நரகவாதைச்சருக்கம்.



மிக்கவிவ் வாயில் மூன்றும் மேன்படு மறம் புரிந்தோர்
புக்குறை யிடமே யாகும் புகலருந் தென்பா லுற்ற
துக்கவிவ் வாயி றன்னைத் தோமிலுன் பொல்வா ரேறூர்
நக்கனுக் கன்பு செய்வோர் நாடவொண் ணாதுகண் டாய்.

(எ-து.) இயமதர்மராஜன் சொல்லுகிறான், விசாலமுள்ள கிழக்கு மேற்கு வடக்கு இவ்வாசல்மூன்றிலும் மேலானதருமங்களைச் செய்தபேர்கள் இருக்கிறபதவியாகும், சொல்லுதற்கரிய துக்கமுள்ள தெற்குவாசலை ரிஷபத்தை ஏறிநடாத்தும்பரமசிவனுக்கு அன்புசெய்யப்பட்டசானந்தமுனிவரே! குற்றமில்லாதஉம்மைப்போலொத்தவர்கள் பார்க்கக்கருதுவதுங் கூடாதென்று பின்னுஞ்சொல்லுகிறான்.—எ-று. (க)

அன்னது கடின பாத காலைய மமல கேண்மோ
கன்னியர் பால ருற்றார் கபிலையை வதைசெய் வித்தோர்
நன்னிலை யற்றோர் நன்றி கொன்றவர் நணுகி யென்றுந்
துன்னியே புன்க ணெய்து மிடமது சொல்லொ ணாதால்.

(எ-து.) அந்ததெற்குவாயில்கொடியபாதகங்களுக்கு ஆலயமாயிருப்பதால்பரிசுத்தமுள்ள சானந்தமுனிவரே? கேளும், அதில் பெண்களையும், பிள்ளைகளையும், உறவினர்களையும் பசுக்களையும் கொலைசெய்தோர்களும், முறைதப்பிநடந்தவர்களும், செய்நன்றி மறந்தோர்களும், என்றுமிருந்து துன்பப்படுமிடமாகும், அதை நாவினாலும் சொல்லக்கூடாது.—எ-று. (உ)

என்பன வியமன் கூற வின்பமா மிடத்தைக் கண்டாந்
துன்பமா மிடமுங் காண்டல் வேண்டு மாற் றாயகால
நின்பரி வுடனே நந்தம் நினைவினை மறுத்தல் வேண்டாம்
தென்புடை வாய்தற் கேகல் செய்குதி யென்று னையன்.

(எ-து.) இப்படி இயமதர்மன் சொல்லக்கேட்டும் சானந்த முனிவர் ஒய்நன்மையுள்ள இயமதர்மனே? இதுவரையில் இன்ப மானஇடங்களைக்கண்டோம் இனிதுன்பமானஇடமுங்காணவே ணும், அப்படிவிரும்பும் நமதெண்ணத்தைத் தடுக்கவேண்டாம், நீர்சந்தோஷமாய்த்தானேதென்புறவாசலுக்குப் போகச்செய்யும் என்றார் சானந்தமுனிவர்.—எ-று. (ந)

ஐயன துரையைக் கேட்டு அந்தக னுள நடுங்கித்
துய்யவென் பதிநீ யாருந் தொழுபவ னினக்கு மந்த
வெய்யவ னிரையங் காட்டில் விழுமமே துறுமோ பின்னை
யுய்யுமா றுளதோ வெற்கென்றஞ்சினேனுண்மை கண்டாய்.

(எ-து.) முனிவர் இப்படிசொன்னதைக்கேட்டு இயமன்மன நடுங்கிசுவாமிநீரெனதுபரிசுத்தமானஇறைவனுதும், எவர்களுந் தொழத்தக்கவர் உமக்கு அந்தக்கொடியநரகத்தைக் காட்டினால் குற்றமேதேனும் விளையுமோ! பின்புயான் பிழைக்கும்வகையு முளவோவென்றுஉண்மையாய்ப் பயந்தேன் என்றான்.—எ-று.

என்மீதிற் குற்ற மில்லை நின்கருத் திசைந்த வாறே
நன்முனிச் செல்க வென்று நளின மென் கைகொடுத்து
வன்மைகொ டென்பால் வாய்த லருகுற வந்து மிக்க
தன்ம னன்பொடு நிறுத்த தவமுனி நின்ற ரன்றே.

(எ-து.) என்மேற் குற்றமில்லைசுவாமீநற்குணமுள்ளசானந்த முனிவரே? உமதிஷ்டப்படியெழுந்தருளுமென்றுதாமரைபோன் றதன்கையைக்கொடுத்து வலுமைகொண்ட தென்புரவாசலுக் குச் சமீபமாக அழைத்துவந்து மேன்மையுள்ள இயமதர்மன் அன்புடனே சானந்தமுனிவரை நிறுத்த நின்றார்.—எ-று. (ரு)

யுகமுடி வினிலெழுந்த வுததியி னோதை போலத்
தகவிலா நரக வாதைப் படுமொலி சார்த லோடு
மிகவதி சயித்தகாலை யிணைக் கபாடந் திறப்பித்
திகலுறு மறலிதா னெம் முனியுட னிசைக்க லுற்றான்.

(எ-து.) அப்படி நிற்கிறபோது அவ்விடத்திலேயுகாந்தத்தில் பொங்கியெழுந்த சமுத்திரவோசைபோலே பாவிகளெல்லாம் நரகத்திலே வேதனைப்படுகிறதினாலே அழுஞ்சத்தங் காதிலே கேட்டவுடனே சானந்தமுனிவர் மனதிலே அதிசயங்கொண்ட போதுசாத்தியிருந்தக்கதவைத் திறவுகோல்கொண்டுதிறப்பித்து வலிவுள்ள இயமதர்மன் நமது சானந்தமுனிவருடனே சொல்லத் தொடங்கினான்.—எ-று. (௬)

ஆரிய யிந்த வாயிற் காண்பதற் கமைந்து நின்றாய்
கோரமாம் நரக வாசங் கொடியதென் னாணை தன்னால்
நேரில்கிங் கிரர்க ணின்று நெடியதண் டாதி கொண்டே
பூரியர் தமைத் தண்டிப்ப ரெனச்சொல்லும் போது மாதோ.

(எ-து.) குருமுகூர்த்தமாய்வந்த சானந்தமுனிவரே ?இந்தத் தெற்குவாசலைப் பார்க்கவேணுமென்று சம்மதித்துநின்றீர்!இது கோரமாகிய நரகவாசம் மிக்ககொடியதாகும்! இதிலே என்னிட ஆக்கினைப்படிக்குச் சமமில்லாதஇயமகிங்கிராள் பெரியதடிமுத லாகியதைக்கொண்டுநானாவிதமாகப்பாவிகளைத்தண்டிப்பார்கள் என்றுசொல்லி முனிவரையழைத்துக்கொண்டு நடக்கும்போது.

நம்மிறை வந்தா னென்று நாடரும் படர்க ளானோர்
செம்மையிற் சிலர்க டம்மைச் சிகைபிடித் தீர்த்து வாளால்
வெம்மைகொ டசை யறுப்பர் வீரொடு சிலரைத் தூக்கி
இம்மென வொடிந்து வீழ வெறிந்துநின் றார்ப்பர் மன்னோ.

(எ-து.) நம்முடைய எஜமானர் வந்துவிட்டாரென்று சொலற்கரிய இயமகிங்கிராள்சிலகொடியபாவிகளை குடிமியைப்பற்றி யிழுத்து வாளாலே வுடம்பிலுள்ள சதைகளையெல்லாமறுப்பார் கள், பெருமையுடனேசிலபேரை எலும்பொடிந்து அலறிவிழத் தூக்கியெறிந்துவிட்டுநின்றுகொண்டுஆர்ப்பரிப்பார்கள்—எ-று.

சிலருறு செவிக டோறுஞ் சொருகுவர் காய்ந்த வேலைச்
சிலருடல் சிதையக் கொத்தி யுப்பினைச் செலிப்பர் மார்பிற்
சிலர்தமைத் தூண்டி விட்டுச் செடிலென வாட்டுவார் பின்
சிலர்தமைத் தாலுகொப்புசெப்புக வெனவொ றுப்பார்.

(எ-து.) சிலருடைய இரண்டுகாதுகள்தோறுங்காய்ந்தவே லாயுதத்தைச்சொருகுவார்கள்,சிலருடையவுடம்பைச்சிதையும் படிகொத்திஉப்பைத்திணிப்பார்கள்,சிலருடையமார்பிலேதூண்

டில்முள்ளைச்சொருகிச்செடில்போற்சுற்றியாட்டுவார்கள்பின்னை யுஞ்சிலருடையநாக்கையறுத்துப்பின்புபேசும்படிசொல்லியடிப் பார்கள்.—எ-று. (கூ)

சிற்சிலர் தீய வாயிற் செம்பினை யுருக்கி வார்ப்பார்
சிற்சிலர் வயிறு பீறிச் செழுங்குட ரழுக வீர்ப்பார்
சிற்சிலர் கண்ணை யம்பாற் சேதிப்பர் மார்பி லேறிச்
சிற்சிலர் நாசி யோட்டத் துடனறுத் துரிப்பர் சென்று.

(எ-து.) சிலபாவிகள்வாயிலேசெம்பையுருக்கிவிடுவார்கள், சிலபேர்வயிற்றைப்பீறிக் கொழுப்புக்குடலைப் பிடுங்குவார்கள், சிலருடையகண்களை யம்பினாலே தோண்டுவார்கள், சிலபேர்கள் மார்பிலே யேறிக்கொண்டு மூக்குகளை உதடுகளையறுத்துரிப்பார் கள்.—எ-று. (க0)

சென்னிகீழ்ப் படவே தூக்கிச் செண்டுகொண் டடிப்பர் தீய
வன்னியி லிடுவ ரம்பால் வாயிடத் தெய்வர் மார்பிற்
பன்னரு முளைக டாவிப் பறிப்பர்சுண் ணங் குழைத்து
மன்னிய பசிக்குத் தின்க வென்றுமா றுவர்சில் லோரை.

(எ-து.) சிலரை தலைகீழாகக்கட்டித்தூக்கி குறடாவைக் கொண்டடிப்பார்கள், சிலரை அக்கினியில் எறிவார்கள், சிலரை அம்பால் வாயிற்குத்துவார்கள், சிலரைமார்பிலேசொல்லவரிய முளைகளைக் கடாவிப் பிடுங்குவார்கள், சிலரை வொழியாதபசிக் குச் சுண்ணாம்பைத்தின்னுங்களென்று அடிப்பார்கள்.—எ-று.

சந்துக டோறு மாப்புத் தாக்குவர் பிடித்த ரத்தாற்
கந்தரந் தனை யறுப்பர் பதைத்திட வடி மடிக்குள்
வெந்தசுண் ணத்தைக் கட்டி கேணியில் விடுவ ரேன
முந்துறப் படுப்பர் சென்னி மூளைவீழ்த் துவர்சில் லோரை.

(எ-து.) சிலபாவிகளைச் சந்துகள்தோறும் முளைகளையடிப் பார்கள், சிலரைப்பிடித்துப் பதைக்கத்தக்கதாக அரத்தினாலே கழுத்தையறுப்பார்கள், சிலரைஅடிமடியில் வெந்தசுண்ணாம்பு கல்லைகட்டிக் கேணியில்போடுவார்கள், சிலரைப் பன்றிக்கு முன்னாகப் போடுவார்கள், சிலரைத்தலையையுடைத்து மூளை யைக்கொட்டுவார்கள்.—எ-று. (கஉ)

கொடிக ளாற்கட்டி நாய்முன் கூவிட விடுவ ரியானை
யடிகளிற் கட்டுவார் தேட் குழியிடை யழுத்து வார்வெம்
படவராக் கேணி தன்னிற் பதைத்திட நிறுத்து வார்பின்
கொடியவூன் சிதற மாருற் கூவமா றுவர்சில் லோரை.

(எ-து.) சிலபாவிகளை கொடியால்கட்டிநாய்குமுன்கதறும் படி விடுவார்கள், சிலரை யானைகாலிலேகட்டி யுருட்டுவார்கள், சிலரைத்தேளுள்ள குழியிலேபோட் டழுத்துவார்கள், சிலரைப் பொல்லாத படத்தையுடைய பாம்புக்கேணியில் பதைபதைக்க நிறுத்துவார்கள், பின்னையும்சிலரைகொடியவூன்சிதறமிலாராலே கூவக்கூவ மாறுவார்கள்.—எ-று. (கங)

புரண்டிட வுலக்கை கைகொண் டெறிகுவர் பூவாய் குந்தத்
துருண்டிடக் குத்துவார் காய்ந் துறுமயக் கழுவு தன்னிற்
சுருண்டிட வேற்றுவார் கூர் வாள் கொடு தூக்கிக் குத்தி
வெருண்டிடக் குருதி தூங்க விடுவர்கிங் கரர்சில் லோரை.

(எ-து.) சிலபாவிகளை உலக்கையை கையிலேயெடுத்துவெ ருண்டுவிழ எறிவார்கள், சிலரைக்கூரிய முளையுள்ளஈட்டிகளினு லேஉருண்டோடக்குத்துவார்கள், சிலரைச்செவக்கக்காய்ந்திருக் கும் இருப்புக்கழுவினிடத்லே சுருண்டிட ஏற்றுவார்கள், சில ரைக் கூரியவாள்கொண்டு குத்தித்தூக்கிவெருண்டிடவுதிரமொ ழுகும்படிக்கு விடுவார்கள் கிங்கரார்.—எ-று. (கச)

அயர்ந்துபற் கெஞ்சக் காலை யங்கையை மிதித் தொடிப்பார்
குயங்கொடு செதுக்கு வார்கைக் குத்தினல் மருகி வீழ்ந்து
மயங்கையிற் பாரை தன்னை மார்பிடை யெடுத்து வைப்பார்
புயங்களி லாணிதாக்கிப் புரட்டுவார் படர்சில் லோரை.

(எ-து.) சிலர் அசந்துபோய்ப்பல்லைக்கெஞ்சக்கெஞ்சக்கால் கைகளை மிதித்தொடிப்பார்கள், சிலரைக்கூர்வாள்கொண்டுசெது க்குவார்கள், சிலரைக்கைக்குத்தினல்மருகிவிழுந்துகிடக்கையில் பெரிய பாராங்கல்லை மார்பிலேயெடுத்துவைப்பார்கள், சிலரைக் கீழேதள்ளி புசத்திலேஆணிகளைக்கிடாவிப்புரட்டுவார்கள் இயம படாள்.—எ-று. (கரு)

அடியுதைகுத்து வெட்டா லடிபடல் சுடுதல் கீறல்
இடிபட லாதியால் மெய் வலிபெடுத்திரங்கு வாரும்
பொடிமிசைப் புரளு வாருந் தவிப்பொடு புழுங்கு வாரும்
மடியுரு தந்தோ வென்று மயங்கிடு வாரு மாகி.

(எ-து.) இப்படிபாவிகள் இயமதூதர்களுடையகாலுதைதயி னுலும், குத்தினுலும், வெட்டினுலும், அடிபடுதலாலும், சுடுகிற தினுலும், கீறுகிறதினுலும், இடிபடுதல் முதலானவேதனைகளால்

சரீரம் வலியெடுத்து அழுகின்றவர்களும், புழுதியிலேவிழுந்து புரளுகிறபேர்களும்,தவிப்புடனே புழுங்குகிறபேர்களும், சாவு வராமல் ஐயோவென்று மயங்குகிறவர்களுமாகி.—எ-று. (௧௬)

வல்வினைச் செய்தோ ரியாரும்வருந்தியிவ்வாறு சொல்வார்
செல்வத்தின் மதாந்த ராகித் தீமைகள் பலவுஞ் செய்தோம்
பல்வினை முழுதுங் கூடிப் படர்களாய் வந்திப் போது
கொல்வன கண்டோம் நல்லோர் கூறிய தருமங் கேளோம்.

(எ-து.) பாவிகளெல்லாரும் வருந்திஇப்படிக்குச்சொல்லுவார்கள், பூமியிலேநாம்வாழ்கின்றகாலத்திலேஅயிஸ்வரியத்தினலே கெர்வமுள்ளவராகிப் பல தீமைகளைச்செய்தோம்! அந்தத் தீமைகள் முழுமையுமேகூடி இப்போது இயமபடாளாய்வந்து நம்மைக் கொல்லுவதைக்கண்டோம்! அப்போதுநல்லோர்கள் பெரியோர்களிப்படி தீமைசெய்யலாகாதென்று அவர்கள்சொல்லுகிற தருமத்தைக்கேட்டிலோமே.—எ-று. (௧௭)

வேறு.

அறம்புகுதாச் செவியினிடை யாயுதங்கள் புகப் பட்டோ
மந்தோ வந்தோ
சிறந்ததலங் களிற் செல்லா வடிகளினு னரகினிடைச்
செல்லா நின்றோம்
மறந்தரர்க்கு வணங்காத சிரத்தார்க்கிங் கரர் தாளை
வணங்க நின்றோ
முறுந்தவ ரென் றறியாதே கொடுமைபல செய்தனமியா
மொழி விலாதே.

(எ-து.)பெரியோர்சொன்னதருமவார்த்தைகள் நுழையாத நமது காதினிடத்திலே ஆயுதங்கள் சொருகப்பட்டோம் !ஐயையோ! சிறந்ததலங்களில்போகாதகால்களால்நரகத்தினிடத்திலே நடக்கப்பட்டுகின்றோம் ! மறந்துஞ்சிவனைவணங்காததலையினல் இந்த இயமகிங்கருடைய கால்களை வணங்கினோம்! இயமனுலிப்படி கேடுவருமென்று அறியாமல்பூமியிலேஅனேகங்கொடுமைகளை யொழிவில்லாமல் செய்தோம்.—எ-று. (௧௮)

மதமொடு மாச்சரிய மகன்றிலே மன்பர் தமை
வணங்கிலே மின்
நுதலினிடை வெண்பொடிசற் றணிந்திலே மரன் சரிதை
நுவன்றிலே மின்

சிதவில்குர வன்கருணை யடைந்திலேஞ் சிவாலயத்திற்
சென்றி லேமின்
னிதையநடுங் கும்படிக்கின் ருெழியாத வாதைபட
விருந்தோ மியாமே.

(எ-து.) நாமெல்லாம் காமம், குரோதம், உலோபம், மதம், மாற்சரியம்,இடும்பை ;அகங்காரம்நீங்கியிருந்தோமே! சிவனடியார்களை வணங்கோமே! நெற்றியில் விபூதியணியோமே ! சிவகதை சிவபுராணங்களைப் படித்திலோமே! நித்தியராகிய குருசுவாமியினுடைய கடாட்சத்தை யடையோமே!சிவாலயத்திலே போகோமே ! அப்படியிருந்தநாம்இப்போதுமன நடுங்கும்படிக்குத் தொலையாதவாதைப்படுகிருேமே என்றுபாவிகள் துக்கப்படும் வேளையில்.—எ-று. (கசு)

மனைவேகும்போது கிணறது கெல்லல் போலுமியல்
வதுவைப் போதி
லினிதான வழுதுணையின் பயிரிடுதல் போலுமுய
ரிரக்க மீண்டு
மனமீதி லெழுந் தென்னை மறந்திறந்தோ மெனிலாவி
வருமோ பின்னைக்
கனசார மருந்தாமல் மணக்குமோ வென மறவர்
கழறுங் காலே.

(எ-து.) வீடுவேகின்றபோது அதையவிக்கக்கிணறுவெட்டுவதுபோலும், பெருமையானகல்யாணஞ் செய்யும்போது கறிவேண்டி கத்திரிநாத்து விடுவதுபோலும், நீங்கள்வாதைபடுமிவ்விடத்தில் மிகுதியானமனவிரக்கம் தோன்றியாவது என்ன?மறந்து செத்தோமானல் பிறகுவுயிர்வருமோ ! அதிகமுங்காரசாரங்கொள்ளாமல்வாய்மணக்குமோவென்றிப்படி இயமபடாக்கள் பாவிகளுடனே பிரதியுத்தரம் சொல்லும்வேளையில்.—எ-று.()

உலகபா வகனுன சானந்த முநி கருணை
யுற்று நோக்கிப்
புலனுடைய தருமனின கிங்கரரால் வருந்தி யுளம்
புழுங்கு வோர்செய்
பலகோடி வினைமுழுதும் பகருதியென் றனுங் கமல
பாணி கூப்பி
யலகிலரு ளுடையமல கேட்டியென வியன் மறலி
யறைதல் செய்வான்.

(எ-து.) உலகபாலகனுயிருக்கப்பட்ட சானந்தமுநிவர் தய வுண்டாகிப்பார்த்து புலமையுள்ள ஓகோ ! இயமதர்மனே? உன் னுடைய கிங்கரர்களாலேவருத்தப்பட்டுமனதுகலங்குமிவர்கள் செய்த பலபாவங்களையெல்லாம்சொல்லுமென்றுகேழ்க்க,நமன் கையைக்குவித்துக் கும்பிட்டு நிர்மலமான சுவாமியே ? கேளு மென்றுசொல்லுகிருன்.—எ-று. (உக)

இவன்சிவனைப் பூசனைசெய் விரதமுடைப் புனிதர் தமை
யிகழ்தல் செய்தான்
இவன்கனவி லேனுமுய ரிறவாத பரம் பரனை
யிறைஞ்சி டாதான்
இவன்பரம னயனமணி திரு நீறு தரியாதா
னெந்த நாளும்
இவன்பரமர்க் கணிந்தமலர் கொடுத்திடில்வந் துவந்து கர
மேற்றிடா தான்.

(எ-து.)இவன்சிவனைப்பூசைபண்ணப்பட்டவிரதமுள்ளபெ ரியோர்களைத்தூஷித்தவன், இவன்சொப்பனத்திலேயும்சிவனைக் கும்பிடாதவன், இவன் எந்தநாளும்விபூதி ருத்திராக்ஷந்தரியாத வன்,இவன்பரமசிவத்திற்கணிந்தபுஷ்பத்தைக்கொடுத்தால் அன் புடன்வந்து கையேந்திவாங்காதவன்.—எ-று. (உஉ)

புலிதுறத்தி வந்திடினுஞ் சிவாலை யத்திற் புகுதாத
புலைய னின்னோன்
வலிய ருடன் கோளுரைத்து நல்லோரைக் கெடுத்த பர
வாதி யின்னோன்
கலகமனை யாளுரைகேட் டுடன்பிறந்தோ ரைக் கெடுத்த
காமி யின்னோன்
சிலருதவுங் கையிடையேற் றனியாய வழக் குரைத்த
தீய னின்னோன்.

(எ-து.) புலியானது ஆக்கிரமித்துத் துறத்திக்கொண்டுவந் தாலுஞ் சிவாலயத்துக்குள்ளே நுழையாதகொடியபாவியிவன், வலியுடையோர்களிடத்திலே கோள்சொல்லிநல்லவர்களைக்கெடு த்தபரவாதியிவன், கலகஞ்செய்யும்பெண்சாதிபேச்சைக்கேட்டு சகோதரத்தைக்கெடுத்த காமியிவன், சிலர்கொடுக்கிறகையடை கள் வாங்கிக்கொண்டு அனியாயவழக்குசொன்னபாதகனிவன்.

தன்மனைவிக் கேவல்செயத் தாயைவிடுத் தவனிவன் காண்
டயவில் லாமல்
வன்மனைவி யுரைகேட்டுப் பெண்கொலைசெய் தவனிவன் காண்
மதத்தி னோடு
மென்மறையோர்க் குரைத்தபடி செய்யாத களனிவன் காண்
விளையும் பூமி
இன்னலுறு வர்க்களித்து மீளவாங் கின னிவன் கா
ணின்ன லற்றோய்.

(எ-து.) தன் பெண்சாதிக்குப் பணிவிடைசெய்யத் தாயை விட்டவனிவன், பெண்சாதிவார்த்தையைக்கேட்டுத்தயவில்லாமல்பெண்ணைக்கொலைசெய்தவனிவன், மதத்தினாலே பிராமணருக்குச்சொன்னதானங்கொடாதவனிவன், நன்றாய்விளையும் பூமியை வறியவனுக்குக்கொடுத்துப் பின்னும்வாங்கிக்கொண்டவனிவன், பாரும்குற்றமற்றசானந்தமுநிவரேஎன்றானியமதர்மன்.--எ-று.

கற்புடைய மங்கையரை மானபங்கஞ் செய்த கொடுங்
கடிய னின்னோன்
நற்பசுவை யுஞ்சிறிய கன்றினையும் பிரித்து விட்ட
நரகி யின்னோன்
பற்பலபொய்க் கரியுரைத்தோன் சுவாமிக்குத் தீவினைசெய்
பதக னின்னோன்
பொற்புடைய மனைசுட்டோன்மருந்திட்டோன்பொன்திரு
புலைய னின்னோன். [டும்

(எ-து.) கற்புடையபெண்களை மானபங்கஞ்செய்தமகாபாதகனிவன், பசுவையுமிளங்கன்றினையும் பிரித்துவோட்டுவிட்டவனிவன், அனேகம் பொய்ச்சாக்ஷிசொன்னவனிவன், சுவாமிக்கே தீவினைபண்ணினபாதகனிவன், நல்லவீடுகளைச் சுட்டவனிவன், மருந்திட்டவனிவன், பொன்திருடினபொல்லாதவன் இவன்என்றான்.—எ-று. (உரு)

மத்தனிவன் குருவை மறந் தவனிவன்றன் றந்தை யுயிர்
மாய்ந்தா லன்னைச்
சித்தமய றவிர்த்தியெனு தனலிடையிட் டவனி வன்மைச்
செழுங்கண் ணேரைக்
குத்திவதைத்தவனிவன்மற்றிவன்மதுவையுண்டவன்கோக்
கொலைகள் செய்த
பித்தனிவன்முறைகடந்தோனிவன்கண்டாய்ப் பரமனருள்
பெற்ற மேலோய்.

(எ-து.) மதங்கொண்ட கெர்வியிவன், சற்குருவைமறந்தவனிவன், தன் தந்தையிறந்துபோனல்தாயைப்பார்த்து மனேதுக்கத்தை விட்டுவிடென்று தேறுதல்சொல்லாமல் நெருப்பிலிட்டு தகனம் பண்ணினவனிவன், மையிட்டு மதத்தகண்களையுடைய பெண்களைக் குத்திக்கொன்றவனிவன், கள்குடித்தவன் இவன் பசுவைக்கொன்றபயித்தியக்காரனிவன்முறைமைதப்பினவனிவன், பாரும் ஐயா பரமேஸ்வரனருளைப்பெற்றமேலானவரேஎன்ருன்.—எ-று. (உசு)

வரவிஞ்சை தனைச்சோரத் தாற்கற்ருே னிவ னுண்ட
மனைக் கிரண்டு
புரிவஞ்ச னிவன்பெரிதுங் கொடும்புத்தி யுரைத் தொழுகும்
புன்மை யோர்க்குங்
கரவென்றும் புரிபவர்க்குக் கொடுத்த மதியிவன் வெங்
கபட மன்றி
விரவுஞ்சன் மதியறியாக் கொடிய னிவன் காணினிய
வேதங் கற்ருேய்.

(எ-து.) வித்தைவரக்கள்ளத்தனமாகக்காணிக்கைகொடாமற்கற்றவனிவன், உண்டமனைக்கிரண்டகம்பண்ணின வஞ்சகனிவன், என்னளும், பாபவழியிற்செல்கின்ற அற்பர்களுக்கும்திருடுகின்றவர்களுக்கு மிடங்கொடுத்து உபகாரம்பண்ணினஅறிவுகெட்டவனிவன், மனதிலே பொல்லாத கபடமேயல்லாமல்நல்லபுத்தியென்றதையறியாதபாதகனிவன், பாரும்வேதங் களைக்கற்றறிந்தமுநிவரே என்ருன்.—எ-று. (உஎ)

தீர்க்கமுடை வயிரியிவ னியாவரையுந் தரும நெறி
செல வொட்டாத
மூர்க்கனிவ னெருதுணிக்காய் மறையவர்கொன் றவ னிவ
முத லிலாம [னேர்
லூர்க்கணுறு பொழில் சிதைத்தோ னிவன்மனித னிருத
னுலவா துண்ணும் [னிவ
நீர்க்குளம்பூ வனமழித்த பாவியிவன் காண் கருணை
நிறைந்த மேலோய்.

(எ-து.) ஒருகாலத்திலும் மனமிளகாத வயிரமுள்ளவனிவன், யாவரையுந் தருமத்தின்வழியிலே போகவொட்டாமல்பண்ணுகிறமுஷ்கரனிவன், ஒருதுணி நிமித்தியமாய்ப் பிராமணனைக் கொன்றவனிவன், ஒருமுதலுமில்லாமல்ஊரிலுள்ள தோப்புகளை

யழித்தவனிவன்,மனிதராக்ஷசனிவன்,வற்ருதுண்ணுந்தண்ணீர்க் குளங்களேயும்நந்தன்வனங்களேயுமழித்தபாவியிவன்,பாருமையா கிருபை நிறைந்த சானந்தமுநிவரேயென்ருன்.—எ-று. (உஅ)

என்றியமன் முநிதன்னே யழைத்தேகு மளவில் வினை
யியற்றி ஞேரைக்
குன்றனைய கிங்கரர்செய் கடுந்துயரை யொரு நாவாற்
கூற வற்ருே
துன்றுகொடும் பாவிகடா மறலிவரல் கண் டிரங்கித்
தொகுபற் காட்டி
நின்றழுது தொழுது பணிந் தெழுந்து கரம் விரித்தேங்கி
நிகழ்த்து கின்ருர்.

(எ-து.) இப்படிப் பாவிகளேக் காட்டிச்சொல்லிக்கொண்டு இயமதர்மராஜன்சானந்தமுநிவரை யழைத்துக்கொண்டு நடக்கிறசமையத்தில் அந்தப்பாவிகளே மலேபோலொத்த இயமபடாள் செய்கிற கொடிதானவாதைகளே யொருநாவற் சொல்லிமுடியுமோ ! அந்தவேளேயில் அனேகபொல்லாத பாபங்களேப்பண்ணினமாபாவிகள் எல்லாரும்இயமதர்மன்வருவதைநோக்கிஇரங்கி பற்களேக்காட்டி கெஞ்சிக்கொண்டுநின்றுஅழுது துதித்துதெண்டஞ்செய்து எழுந்து கையைவிரித்துக்கொண்டு ஏங்கிசொல்லுகின்ருர்கள்.—எ-று. (உகூ)

இந்தவருத் தம்பலவு மொழியாது படப் படுமோ
வெங்க ளுக்கு
முந்துமுயி ருங்கழியா வென்செய்கோ மியாங்கள் புரி
முடிவிற் றீமை
பந்தவிருள் விடிகுவதென் றரசறியா வமஞ்சி யெனப்
பழுதா காமல்
வந்தனே கண்டா யெமக்கோர் கதிவேறின் றினி யெமது
வருத்தந் தீராய்.

(எ-து.) அனேகவிதமாய்எங்களேத்தொலேயாமல் வருத்துகின்ற இத்துன்பத்தால் சீவனும் போகவில்லேயே ! என்னசெய்வோம்! நாங்கள் பண்ணின பாதகமாகியவிருள்என்றைக்குவிடியும் அரசறியாத அமஞ்சியைப்போலே பழுதுபடாமல் வந்து பார்த்தீர்கள் எங்களுக்கு உம்மையல்லாமல் வேறேயொரு கதியில்லே,இனியெங்களுடைய வருத்தத்தைத் தீரும்ஐயனே யென்ருர்கள்.—எ-று. (கூO)

பெரியோர்கள் வரிலிருந்த வினையால்வெங் கழு நுனியில்
பெரிதிருந் தோம்
பரமாதர் முலையிடத்தே நகரேகை வைத்த கொடும்
பாவந்தன் னால்
விரைவாக நகத்தினிடை யிருப்பூசி யேற்றி யிட
மெலிந்தோ மையா
பரிவோடு தழுவியகை யறுப்புண்டோம் முகந்த முகம்
புடைப்புண்டோ மால்.

(எ-து.) நல்லோர்கள் பெரியோர்கள்வந்தால் எழுந்திராம லிருந்த பாதகத்துக்கு கழுவிநுனியிலே வெகுநாளுட்கார்ந்திருந் தோம், பரஸ்திரீகளுடைய முலையினிடத்திலே நகக்குறிவைத்த பாதகத்துக்குஅந்தவிரல்நகத்திலே இருப்பூசியேற்றப்பட்டுவாடி னோம் ஐயனே சந்தோஷத்துடனே பெண்களைக் கட்டித்தழு வின கைகளறுபட்டு வருந்தினோம், பின்னும்பெண்களைமுகந்த முகங்களிலடிபட்டோம்—எ-று. (௩௧)

பாடுறுபா ராண்டுநரர் தமை வருத்துந் தீவினையாற்
பாரி வேட்டை
யாடெனவே குத்துண்டோ முயிர் பதைக்கக் கரமாதி
யறுப்புண் டோமால்
வீடருளு மரற்கணிந்த தொடை வாங்கி முகவாத
வினையா லீண்டு
சேடுபட நாசியறுப் பட்டன மியாங் கண்டனைநீ
கேடிலா தோய்.

(எ-து.) பெருமையுள்ள பூமியை யரசுசெய்து ஜனங்களை வருத்தப்படுத்தினபாவத்திற்கு பாரிவேட்டையிலே குத்துப்படு கிற ஆட்டுக்கிடாய்போலே கிங்கரர்களாலே குத்துப்பட்டோம், உயிர்துடிக்கும்படிகைமுதலிய வுறுப்புகளறுபட்டோம், மோட் சந்தரும் சிவனுக்குத்தரித்தமாலையைவாங்கியன்புடனேமுகந்து கொள்ளாத பாபத்திற்கு மூக்குகளறுபட்டோம், இதுகளையெல் லாம் நீர்பாரும் நித்தியனே என்றார்கள்.—எ-று. (௩௨)

அரனந்த வனத்திற்பூ முடித்த சிரத் தாப்புநெடி
தழுந்தப் பட்டோம்
பரமன்ற னுலயத்திற் றெருடு கழலோ டேகியவெம்
பதங்க ளின்று

விரவுங்கூ றியபாசத் தறுபட்டோஞ் சிவா லயத்தின்
மெல்லி யார்பால்
மருவுந்தி வினைக்குறியின் முள்ளேற்றப் பட்டன மால்
வானோர் கோவே.

(எ-து.) சிவனுடைய நந்தனவனத்திற் புஷ்பித்த பூக்களைக் கொய்து முடித்ததலையிலே முளையடிக்கப்பட்டோம், சிவன்கோயிலிலே தொடுத்த செருப்புடனேசென்ற கால்கள் இன்றுகோடாலிகொண்டு தறிக்கப்பட்டோம், சிவாலயத்திலே பெண்களைச் சேர்ந்த பாவத்திற்கு ஆண்குறியில் முள்ளேற்றப்பட்டோம்,தேவர்க்கதிபனே என்றார்கள்.—எ-று. (கூகூ)

ஓடினவர் தமைநெடிய படை-விட்டுத் தொழு தவரை
யுதிரத் தங்கங்
கூடியவர் தமைவறிது புற்கடித்தோர் தமை வீரங்
குலைந்து பாதஞ்
சூடினவர் தமைபொருவெங்களத்தினிடைகொன்றவினைத்
தொகையி னானே
வீடரிய வாதைபல பட்டனமப் பாடு தனை
விளம்ப லாமோ.

(எ-து.) சண்டைமுகத்திலே ஆற்றாது வோடின பேர்களையும்,ஆயுதங்களைக்கைவிட்டுகும்பிட்டபேர்களையும், உதிரத்திலே விழுந்துகிடக்கிற பேர்களையும், புல்லைக்கவ்வினபேர்களையும், சேவகத்திற்குலைந்து காலைப்பிடித்து தலையிலே வைத்துக்கொண்டபேர்களையும், யுத்தகளத்திலே இவர்களையெல்லா மிரக்கமில்லாமல்கொன்ற பாவங்களுக்கு விடுதற்கரிய பலபலவாதைகள் பட்டோம் அப்பாடுகளையுஞ் சொல்லப்படுமோ ! வென்றார்கள். ()

நெறிமுறைதப் பினசென்மம் போயினகா ணைமைப் புரக்க
நீதிகண் டாய்
தறுகணமை யினிவிடுதி பொறுக்க முடியா தைய
தயவு செய்வாய்
குறுகிமிகத் தொழுதுபணிந் தாலொறுக்கத் தகுமோ வெங்
கோவே யென்று
முறையிடுவோர் தமைநோக்கி யியமபடாள் பெருங் கோப
முதிர்ந்து சொல்வார்.

(எ-து.) இப்படிநாங்கள்செய்தபாபங்களுக்குத்தக்கவாதை பட்டபடியினாலேநீதிமுறைமைதப்பிநடந்தபாவஜென்மம்போச்சுது, எங்களைரட்சிப்பது உமதுகடமைகோபத்தைவிட்டுவிடும் இனிவாதைபொருக்க முடியாது ஐயனேசற்றேதயவுபண்ணவேணும் நெருங்கிவந்து காலிலே கும்பிட்டு விழுந்தால்கோபிப்பது தருமமோ! எங்களரசே! யென்றிப்படி முறையிடுகிறபாவிகளைப் பார்த்து இயமதூதர்க ளதிககோபத்துடன் சொல்லுகிறார்கள்.

நீவிரினும் படும்பாடு பின்கிடந்த திழுக் குடையீர்
நிகழ்த்த லெல்லாம்
மேவுசிரஞ் சிதைக்குங்காற் காதுக்கு மன் றுடும்
விரகு போலும்
போவெனவே பிடித்துந்தி லேகாந்த முரைத்து மெனப்
புகறல் போலு
மாவியுட லுக்குவருங் கேடறியா துயர் தரும
மகன்ற நீரே.

(எ-து.) நீங்களின்னம் படும்பாடுபின்னாலே கிடக்கிறது, பாவிகளே? நீங்களிப்போது சொல்லுகிற தெல்லாம் தலையைவெட்டும்போது காதுக்குமன்றாடுதல்போலும், போவென்று பிடரியைப்பிடித்துத் தள்ளும்போது யேகாந்தம் பேசுகிறோமென்று சொல்லுவதுபோலு மிருக்கின்றது, உங்கள் சீவனுக்குமுடலுக்கும்வருங்கேட்டையறியாமல் தருமந்தப்பி நடந்தவர்களேயென்றார்கள்.—எ-று. (ரு௬)

இனிநாளைப் பயணமெனு மிடத்தின்றே விரைப் பெடுத்த
வியல்பு போலும்
தணியாறு காதமென விருந்துதொடு கழல் விலக்குந்
தன்மை போலும்
இனிநீர்சொல் குவதெங்க ளிறைகேழ்க்கில் வருத்த மெமக்
குறுமிப் போது
வனமீது கனல்புகுதிற் சந்தனமும் வெந்து விழு
மாறு போல.

(எ-து.) ஊருக்குநாளைப்பயணமென்றபோது இன்றைக்கே இரைப்பெடுத்தல்போலேயும், ஆறுகாதவழியென்றபோது காலிலிருக்கும் செருப்பைக் கழற்றுகிறதுபோலேயும், நீங்கள் பட்டபாடுபோதுமென்று முறையிடுகிறீர்களே! இப்படி முறையிடு

வதை யெங்கள்எஜமானர்இயமதர்மராஜன்கேட்டால்காட்டிலே தீப்பட்ட சந்தனமரமும் வெந்துவிழுதல்போல்இப்போதுஎங்களுக்கு ஆக்கினைவரும் என்றூர்கள்.—எ-று. (கூஎ)

நும்மிடத்தி லெம்முள்ளத் திரக்கமோ சிறுது மிலை
நுவலுங் காலை
வெம்மைசெயு மிவ்வாதை தனக்கேனின் றுளைந்தீர் பின்
விளைவ தோரீ
ரிம்மகிவா னுள்ளளவு மிருக்குநர குங்க டமக்
கிடமே யன்றோ
வம்மறிதா னழுதுருகில் வலைக்காரன் விடுவ னோ
வறிவி லாதீர்.

(எ-து.) உங்களிடத்தில் எங்கள்மனதினிடத்தேசற்றுனும் மிரக்கமில்லை சொல்லுமிடத்தில் கொடுமைசெய்யும் இந்த வாதனைக்குத்தானே நின்றுகளைக்கிறீர்கள்! பின்னாலேவருகிறது உணரமாட்டீர்கள்!இந்தப்பூமியாகாயமுள்ளளவு மிருக்கிறநரகமெல்லா முங்களுக்கிடமல்லவோ! வலைக்குளகப்பட்ட மான் அழுவதினாலேவலைக்காரன் விடுவானோ! அறிவில்லாதபாவிகளேஎன்றூர்கள்.—எ-று. (கூஅ)

என்றுநமன் படருரைத்த சொற்செவியி லால மென
வெய்த லோடு
மன்றிடையின் றுடப்போய் வில்லங்கம் வந்த தென
வருந்தி யுள்ளந்
துன்றியசீ ரக்கினியின் முழுகியற மற்றவர்க
ளேங்குங் காலை
வென்றியுடை புலனை யெலாம் வென்றமுனி மறலி யொடு
விளம்ப லானுர்.

(எ-து.) இந்தப்படி இயமபடாள் சொன்னசொல் ஆலகால விஷம்போல காதிலேபட்டமாத்திரத்தில் சபையில் மன்றுடப்போய் வில்லங்கம்வந்துதென்று மனதுநொந்து நெருங்கியதுக்கமாகிய நெருப்பிலேமுழுகிப்பாவிகள்நடுங்கும்வேளையில், வெற்றியுள்ள புலன்களையெல்லாஞ்செயித்தசானந்தமுனிவர்இயமதர்மருடனே சொல்லத்தலைப்பட்டார்—எ-று. (கூகூ)

தருமவிவ ணறமில்லோர் தங்களை நீ வாதிக்குந்
தண்டந் தன்னை
அரிபிரமர் விலக்கவொணு திவர்வாதை யகற்ற வெம
தானே வல்லன்

பிரிவுபட வடித்தெய்து கொய்துவறுத் தரைத் தரைத்து
பிளந்து தாக்கி
விரவினுரித் தெரிந்துகிழித் துதைத்தழித்து விடினு முயிர்
விடாத தென்னே.

(எ-து.) ஏ! இயமதர்மனே? இவடத்திலே தருமமில்லாத பாவிகளை நீவாதித்துபண்ணுந்தண்டனைகளை அரிபிர்மாக்களாலேயும் விலக்கப்படாது! இவர்கள்வாதையை நம்முடையபரமேஸ்வரனே விலக்கவல்லவன்; அதுநிற்க இந்தப்பாவிகளையெல்லாம் சரீரம் பிளந்துபோக அடித்தும், அம்பினலெய்தும்,கொய்தும், வறுத்து அம்மியில் வைத்தரைத்தரைத்தும்,இரண்டாகப்பிளந்தும், ஆணிகிடாவியும்,சருமமுரித்தெரிந்தும், ஆக்கைபோகஇரண்டாய்க்கிழித்தும், உரைத்தும், இப்படியழித்து விட்டாலும் உயிர்போகாமலிருப்பதென்னே! வென்றார் முனிவர்.—எ-று. ()

பொருவில் பொருந்துன்பமுறமரித்தவுடலழற்கொளுந்தப்
பொடியாய்த் தன்றே
விரவுதிற லுடையோய்நம் மிதையத்து ளதிசயமே
விளைத்த தம்மா
உரைசெயவிவ் வுடல்வந்த செயலேதிங் கொன் றொழியா
துரைத்தி யென்னப்
பரவுபெருந் தண்டத்தான் வாய் புதைத்து முனிவ னொடு
பகர லுற்றான்.

(எ-து.) ஒப்பற்றவெகுதுன்பமுற்றிறந்த வுடம்பை அக்கினியிலே கொளுத்தச் சாம்பலாகப்போயிற்றல்லவோ, இங்கேயிந்த உடம்புவந்தசெயல் நம்முடைய இருதயத்திலே அதிசயத்தையுண்டாக்குகிறது இதுவென்றுதப்பாமல் சொல்லென்றுகேழ்க்க இயமதர்மராஜன் வாய்பொத்திக்கொண்டுசானந்தமுனிவருடனே சொல்லுகிறான்.—எ-று.

(சக)

வரியரவு தோலுரித்துச் செல்வதுபோ லிறந்து விடு
மனித ரியாரும்
பிரிவரிய யாதனு சரீரமெடுத் தென் றூதர்
பிடிக்க வீண்டு
வருவரவர் வீவதிலர் வீய்ந்தாலுஞ் சஞ் சீவி
வாயு வந்து

பரிவுறவே யெழுப்புமிவ ணறமில்லோர் பெரு வாதைப்
படுவர் பின்னும்.

(எ-து.)வரிபொருந்தியபாம்பு சட்டைகழிற்றிவைத்துபோ கிறதுபோலே பூமியிலே செத்தமனுஷரெல்லாரும்பூதனுசரீரமா கியதூலத்தைவிட்டு(சத்தபரிசரூபரசகந்தம்மனம்புத்தியாங்கார மென்னு மிந்தப்புரியஷ்டக ரூபந்தானே பிரிதற்கரிய) யாதனு சரீரமாகவெடுப்பித்துஎன்னுடையதூதர்கள்பிடித்துக்கொண்டு வரஇங்கேவருவார்கள்,மரிக்கிறதில்லே,மரித்தாலும்சஞ்சீவிவாயு வந்து பிரவேசித்துஎழுப்பிவிடும்,இவடத்திலேபாவிகள்பின்னே யும் வெகுவாதைப்படுவார்கள்.—எ-று. (சஉ)

அரன்புனித வாலயத்தைப் பிடுங்கினவ னிவ னரனுக்
களித்தல் செய்யி
லிருந்தசிவ முத்திரையை மாற்றிமறு முத்திரை யிட்
டவனி வன்காண்
பொருந்துசிவா லயத்தினுறு போகத்தை மாற்றிய வெம்
புலேயனின் னேன்
சுரந்தசிவா லயப்பசுவின் பால்கறந்து குடித்த கொடுந்
துஷ்டனின்னேன்.

(எ-து.) பின்னும்நமன்சொல்லுகிருன்,நல்ல சிவாலயத்தை ப்பிடிங்கினவனிவன்;சிவனுக்குவிட்டவயலிலேகல்வெட்டியிருந் தசிவமுத்திரையைமாற்றிமறு முத்திரையிட்டவனிவன், சிவால யத்திற்குப்பொருந்திநடக்கும் போகத்தைத் தவிர்த்த நீச்சனிவ ன்,சிவாலயப்பசுவிற் சுரந்தபாலேக்கறந்து குடித்ததுஷ்டனிவன்.

சிவனணியு மணிகளேயும் பொருள்களேயுங் கவர்ந்த கொடுந்
தீய னின்னேன்
சிவனடியார் மடங்களுக்கு வருபயனே மாற்றி விடு
மவல னின்னேன்
பவமகற்றுந் தெய்வவுரு வத்தையெடுத் தழித்த பெரும்
பாவி யின்னேன்.
நவமுறுபுல் லருந்தாம லிடபத்தைக் கால் பிணித்த
நரகி யின்னேன்.

(எ-து.) சிவனுக்குத்தரிக்கிற ஆபரணங்களேயும், சிவதிரவி யங்களேயும் அபகரித்துக்கொண்ட பொல்லாதபாதகனிவன், சிவ ன டியார் மடங்களுக்கு வருகிறபிரயோசனத்தைத் தடுத்துக்கெ

டுத்துவிட்ட அவலமானவனிவன், பாவத்தைக்கெடுக்குந்தெய்வ வுருவத்தை யெடுத்தழித்தபெரும்பாவியிவன், புல்மேயாமல்ரிஷபத்தின்காலைக்கட்டின நரகனிவன்.—எ-று. (சச)

சங்கரன்ற னடியரொடுமோறிட்டோ னிவன் ருயர் தமையு ஞானப்
பொங்குமதி யோர்தமையுங் கொன்றவனு மிவன் விரதம் பொருந்தி னோரைத்
தங்குதவ விருத்தர்தமை யடித்தவனு மிவன் பூமி தனைத்தீ யன்பால்
அங்கணளித் துலகத்தை யழித்தவனு மிவ னெவர்க்கு மமுதம் போன்றோய்.

(எ-து.) சிவனடியார்களுடனே யெதிரிட்டு வாதுபண்ணினவனிவன், தாயர்களையும் ஞானமுள்ளவிவேகிகளையுங்கொன்றவனிவன், விரதமுள்ளபேர்களையும், தவமுடையவிருத்தசந்நியாசிகளையும் அடித்தவனிவன், இராச்சியபாரத்தைப்பாவிகளிடத்திலேகொடுத்து உலகத்தையழித்தவனிவன், எவர்க்குமமுதம்போலொத்த சானந்தமுநிவரே என்றான்.—எ-று. (சரு)

அயலவர்சொற் கேட்டுரிய தன்மனைவி தனைக் கொன்ற வவல னின்னோன்
கயமையுறு மரசன்பா லமைச்சாகி யிருந்த கொடுங் கடிய னின்னோன்
மயலொடுசெய் யாதகொடுந் தீமைகளே செய் திறந்த வலிய னின்னோ
னுயர்குருவை யுதாசினஞ்செய் தவனின்னோ னிணையில் தவத் [வத்
துரவோய் காண்டீ.

(எ-து.) அயலார்வார்த்தையைக்கேட்டுத் தனக்குரியபெண்சாதியைக்கொன்றஅவலமானவனிவன், ஈனகுணமுள்ளராஜாவினிடத்திலேமந்திரியாகியிருந்தபொல்லாதகடூரியிவன், ஆசையுடனே பண்ணாததீமைகளையே பண்ணியிறந்தபொல்லாதமுரடனிவன், மேலானகுருவைஉதாசினம்பேசினவனிவன், இணையில்லாதஞானமுள்ள சானந்தமுநிவரே பாருமென்றான்.—எ-று. ()

கோளென்ப தெவருக்குங் குலக்கேடு குணக் கேடு கொடுக்குங் கோளே

மூளுங்கோ பந்தனக்கு மூல முயர் கோபத்தால்
முடிவி லாத
நீளுந்தீ வினை பெருகுந் தீவினையே நிரையத்து
நிறுத்துங் கண்டாய
வேளங்க மெரிசெய்த பரமனையே தொழு துருகும்
விரதம் பூண்டோய்.

(எ-து.)கோளானது, எவர்களுக்கும்குலநாசமுங்குணநாசமும்பண்ணும்,மூண்டுவரப்பட்டகோபத்திற்குக்கோளேமூலமாயிருக்கும், கோபத்தினலே ஒழியாத வெகுதீவினைகள் வளரும், இந்தத்தீவினைகளே அவனை நரகத்திலேயழுத்தும் ஐயா மன்மதனங்கத்தையெரித்த பரமசிவனையே தொழுதுருகப்பட்ட தவமுள்ள சானந்தமுநிவரே என்றான் இயமதர்மராஜன்.—எ-று.()

வேறு.

கோபமே பாவ வேது கோபமே பயனை நீக்குங்
கோபமே துன்பங் காட்டும் கோபமே யருளை போட்டுங்
கோபமே யீன வீடு கோபமே நரகிற் றள்ளும்
கோபமே யென்றன் முன்னர் கொடுவருங்குணக்குன் றன்னய்.

(எ-து.) கோபமேபாவத்துக்குஏதுவாயிருக்கும், கோபமே பலத்தைக் கெடுக்கும், கோபமே துன்பங்களைக் கொண்டுவந்துவிடும், கோபமே திருவருளை நீக்கிவைக்கும்,கோபமேயீனத்துக்கெல்லாம்வீடாயிருக்கும்,கோபமேநரகத்திலேதள்ளும், கோபந்தானே யென்முன்னே கொண்டுவரும்,ஐயா? குணபர்வதம்போலொத்த முநிவரே என்றான்.—எ-று. (சஅ)

அருளரிச் சந்திரன் முன் னனவர் தீய ரான
மருளரைத் துறந்து நல்ல மதிஞரைப் புரந்து நின்றே
யிருளறு துறக்கத் தெய்தி யிருந்தன னிவர்க டமை
பொருளெனச் செய் திருந்தார் புன்னர கத்தில் வீழ.

(எ-து.) தயவுடைய அரிச்சந்திரன்முதலானஅரசர்களெல்லாம் பாவிகளாகிய துஷ்டரை நிக்கிரகம்பண்ணி நல்லவிவேகமுள்ளபுண்ணியாத்மாக்களைப்பரிபாலித்துராச்சியபாரஞ்செய்து இருளற்று ஜோதிமயமாயுள்ள சொர்க்கத்தில்போயிருந்தார்கள், இங்கேயிருக்கிறஇவர்களெல்லாம்பாதகமேபொருளாகவெண்ணி அசேதனமானநரகத்திலேவிழச் செய்யப்பட்டார்கள்:—எ-று.()

பேருல காண் டிறந்த பின்னரே நரகமென்ப
தாரியர் சொன்ன ரின்னே ரமையாவெவ் வினைகள் செய்த
பூரிய ரிவர்க்கு வீடு பொருந்தாதென் றியமன் கூறச்
சீரிய முனிவன் கேட்டுச் சிரித்ததி சயித்துச் சொல்வான்.

(எ-து.) பெரிய உலகத்தையாண்டு இறந்தபிறகோநரகமுண்டென்று ஆசாரியர்கள்சொல்லக்கேட்டு ஆராய்ச்சிசெய்துநன்னிலையினிற்காமல் மனம்பொருந்தாத பொல்லாதபாபங்களைப்பண்ணின இந்த நீசர்களுக்குமோக்ஷம் பொருந்தாதென்று நமன் சொல்ல, சிறப்புடைய சானந்த முனிவர்கேட்டு நகைத்து அதிசயித்துச் சொல்லுகிறார்.—எ-று. (ருo)

வாம்பரி யென்ப துள்ள மட்டும்வை யாளி யுண்டோ
தீம்பரா மிவர்க ளுக்குத் தீயவிவ் வாதை யென்று
போம்பக ரரிய முத்தி பொருந்துவ தென்று செய்ய
வாம்பலம் பகைஞன் பெற்றோ யறைகுதி யறிய வென்றான்.

(எ-து.) தாவப்பட்டகுதிரையுள்ளமட்டும்வையாளியுண்டாயிருப்பதுபோலத் தீயராகிய இப்பாவிகளுக்கு உக்கிரமானஇந்த வேதனையென்றைக்குப் போகும்? சொல்லுதற்கரிய முத்திமோக்ஷமென்றைக்குக்கிடைக்கும்? சிவந்த ஆம்பலுக்குப்பகைவனாகியசூரியன்புத்திரனேசொல்லும் நானறியவேண்டுமென்றார். ()

ஐயனெங் கோமான் சொன்ன வருண்மொழிசெவியி னேற்றுக்
கையினை மலர்கு வித்துக் கலைபிரி யாதொ டுக்கி
மெய்யனே கருணைக் குன்றே விமலமா தவனே கேளென்
றெய்யென விருள்சித் தோங்கு முத்தமன் பெற்றான் கூறும்.

(எ-து.) ஐயனாகிய எமது கர்த்தன்சொன்ன கிருபையுள்ள சொல்லைக்கேட்டு, கைகுவித்துகும்பிட்டுவஸ்திரங்கள்பறக்காமலொடுக்கிக்கொண்டு மெய்யுள்ளவனே? கருணைமலையே? பாவமில்லாத மகாதவத்தையுடையசானந்தமுனிவரே?கேளுமென்று பளீரென்றிருட்டுகளை நீக்கி ஓங்கியசூரியன்பெற்றநமன்சொல்லலுற்றான்.—எ-று. (ருஉ)

வேறு.

விடந்தனி முதல்வன் களத்தைநீங் கிடினும்
விநாயகன் வதுவைசெய் திடினு
மடைந்த வேழ்கிழமை யன்றியோர் கிழமை
யணுகினுங் கிரிகரைந் திடினு

மிடம்படு மவனி சுமந்திடா தனந்த
னேகினுங் கடலெலாஞ் சுவறி
மிடைந்தபே ருலகங் கெடினுமிங் கிவர்க்கு
மேற்கதி யில்லையென் றனனால்.

(எ-து.) ஆலகாலவிஷமானது ஒப்பற்றபரமேஸ்வரன்கண்டத்தைவிட்டு நீங்கினாலும், விநாயகமூர்த்திதிருக்கல்யாணஞ்செய்துகொண்டாலும், உண்டான ஏழுகிழமையல்லாமல்பின்னுமோர்கிழமைவந்தாலும், பர்வதங்களானதுகரைந்துபோனாலும விரிவானபூமியைச் சுமந்திடாமலாதிசேஷன் போய்விட்டாலும் சமுத்திரங்களெல்லாம் வற்றிநெருங்கியபெரியலோகங்களழிந்துபோனாலும் இங்கேயிருக்கிற இந்தப்பாவிகளுக்கு இதற்குமேற்பட்ட கதியில்லையென்றான்.—எ-று. (௫௩)

என்றுகூற் றுரைத்த வாசகங் கேளா
வெம்பிரான் சிறுநகை கொண்டு
மன்றுளான் மனுவிங் கிருக்கமற் றிவர்தம்
வல்வினை தீர்ப்பதோ ரரிதோ
நின்றபல் கோடி பாதக வரைக்கு
நெடுஞ் சதகோடிய தன்றோ
வொன்றுநல் லறிவின் றிவண்கண்மற் றிதனை
யுரைக்கொணா தெனவுளத் தெண்ணி.

(எ-து.) இந்தப்படிஇயமதர்மராஜன் சொன்னதைக்கேட்டளவிலே சானந்தமுனிவர் குறுநகைகொண்டுசபாநாயகருடைய பஞ்சாக்ஷரம்நம்மிடத்திலிருக்கப்பின்னையிவர்கள்வல்வினைத்தீர்க்கிறது ஒரு அருமையோ! பொருந்திநிற்கும்பலகோடிபாதகமலைகளுக்கு நெடிதான வச்சிராயுதமல்லவோ இந்த பஞ்சாக்ஷரம்! இதனை யிவ்விடத்திலே பொருந்திய நல்லறிவில்லை, ஆனபடியினாலே இங்கே சொல்லப்படாதென்று திருவுளத்தி லெண்ணிக்கொண்டு சொல்லுகிறார்.—எ-று. (௫௪)

கூற்றவெம் மிறைவன் றிருமுடி யிடத்தோர்க்
குளிர்மல ரணிந்தவ னெளிதி
னூற்றலாற் கோடி குலத்தைவுத் தரிப்ப
னமலவெண் ணீறணிந் தவன்றன்
மேற்றொடா தாது பவமென மறைநூல்
விளம்புதல் கேட்டன மிவர்பா

லேற்றவிச் செயல்சற் றில்லையோ யுரையா
யினியநூல் மொழிகள்பொய் யலவே.

(எ-து.) இயமதர்மனே ? நம்முடைய பரமேஸ்வரன்திருமுடியிலேயொருமலர் தரித்தவனந்தப்பலத்தில்தனது தலைமுறையிலுள்ள கோடிவங்கிஷத்தாரையும் சொர்க்கலோகத்தி லேற்றிவுற்றரிப்பன் நிர்மலமான திருவெண்ணீறு தரித்தவன்மேலே பாவந்தொடராதென்று வேதநூல்சொல்லக்கேட்டோம்,இந்தப் பாதகரிடத்திலேஇப்படிப்பட்டசெயல்கள்சற்றுகிலுமில்லையோ சொல்லும்இனிமையான வேதவாக்கியங்கள் பொய்யல்லவே யென்றார் சானந்தமுநிவர்.—எ-று. (ருரு)

அரிக்குநான் முகனுக் கெய்தொணு வமலர்க்
கணிந்திட வெங்கணுங் கிளரு
மெருக்கினோர் மலரும் முள்ளியின் மலரு
மெழுந்தபச் சறுகுமான் டிலையோ
தரிக்கநீ றிலையோ விவர் தமக் கன்று
தரிக்கிலித் துயரமேன்வருமென்
றுரைத்தசா னந்த முநிவனை நோக்கி
யொடுங்கிநின் றியம்புவ னடுவன்.

(எ-து.) விஷ்ணுவுக்கும் பிரமனுக்கும் காணக்கிடையாத பரமேஸ்வரனுக்குத்தரிக்க எவ்விடங்களிலு முண்டாகப்பட்ட ஒருஎருக்கமலர்,முள்ளிக்கத்திரிமலர்,பச்சையறுகுவேணுமென்றால் அவ்விடத்திலில்லையோ ! தரிக்கிறதற்கு நீறில்லையோ,இவர்களன்றைக்குதரித்தால் இந்ததுயரமேனிவர்களுக்குவருமென்று இப்படிசொல்லும் சானந்தமுநிவரைப்பார்த்து ஒடுங்கிநின்றுக்கொண்டு சொல்லுகிறார் இயமதர்மராஜன்.—எ-று. (ருசு)

நரகவாதைச்சருக்கம்முற்றிற்று.

ஆ பாயிரம் உட்பட சருக்கம்ரு-க்கு

திருவிருத்தம்-நடுசு.



கணபதிதுணை.



திருச்சிற்றம்பலம்.

# ஆருவது

# சிவமகிமைச்சருக்கம்.



மறைமொழி யதனைப் பொய்யெனப் படுமோ
　மதித்தொரு விலைமக டனக்கு
நறுமல ரெடுத்து வருகையில் விழுந்த
　நன்மலர் தனைச்சிவ னுக்கென்
றறிவிலா துரைத்த வேதியன் கதியி
　னடைந்திட வில்லையோ வையக்
குறைவிலித் தகைய கதைகள்பற் பலயான்
　கூறிடின் முடியுமோ முடியா.

(எ-து.) வேதவாக்கியத்தைப் பொய்யென்று சொல்லப்படுமோ! ஒரு தேவதாசிக்கு மணமுள்ள மலரெடுத்துவருகையில் கீழேவிழுந்த பூவைச் சிவனுக்கேயாகுமென்று அறிவில்லாமற் சொன்ன பிராமணன் கதிபெறவில்லையோ! ஐயா? சானந்தமுனிவரே ? இப்படிப்பட்டகதைகள் சொல்லவேணுமென்றுல்சொல்லிமுடியுமோ முடியாதென்ருனியமதர்மன்.—எ-று. (க)

திரையுடைக் கடல்சூழ் புவிமகட் கணியாய்ச்
　சிறந்தகாம் பீலிமா நகரில்
வரகுணன் றரும வாரிதி புரையில்
　வாய்மையன் றவநெறி விலகாப்
பெருமையன் புனித னறுதொழின் மறவாப்
　பெற்றிய னரனையே துதிக்கும்

விரகின னெச்ச தத்தனென் றெருவன்
மேதினி புகழவாழ்ந் தனனால்.

(எ-து.) சமுத்திரஞ்சூழ்ந்தபூமாதேவிக்கு ஆபரணம்போல சிறந்த காம்பிலிமாநகரத்திலே எச்சதத்தனென்றெரு பிராமணனவன் சிறந்தகுணமும், அறத்திற் கடல்போலும், குற்றமற்ற மெய்வார்த்தையும், தவநெறிதவறுதபெருமையும், பரிசுத்தமும், சட்கருமங்களையும் மறவாமல்செய்து, சிவனையேதுதிக்குநியமமுமுள்ளவனாய் பூமண்டலம் புகழும்படிக்கு வாழ்ந்தான்.—எ-று.

கண்ணுதற் கினியா னன்னவ னிடத்தே
கரும்பினிற் பிறந்தபூ வெனவும்
புண்ணிய சலத்திற் பேனமுற் பவித்த
தெனவுநீள் பொருதிரை சுருட்டுந்
தண்ணிரை யமுத வேலையிற் றேன்றுந்
தனிவிட மெனவுநன் கிலியாய்
உண்ணிறை கொடுமை பலபல வுளனு
யுதித்தனன் குணநிதி யென்போன்.

(எ-து.) சிவனுக்கன்பனான அந்தஎச்சதத்தனிடத்தே கரும்பினிற்பிறந்த பூப்போலும், புண்ணியதீர்த்தத்திலே பாச்சியுண்டானதுபோலும், திருப்பாற்கடலிலே உண்டான கொடிய ஆலகாலவிஷம்போலும்பலபலகொடுமைகள்நிறைந்தகுணநிதியென்றெரு பிள்ளைபிறந்தான்.—எ-று. (௩)

நித்திய கருமம் விதிமுறை புரியான்
நெறிமுறை யொன்றையு மறியான்
உத்தம மறைகள் படித்திடா னறிஞ
ருற்றுழிச் சென்றிடா னினிய
சத்திய முறையான் றன்னையொப் பவர்க
டம்மிடத் தனுதின மணுகி
மித்திய வுடம்பை மெய்யெனக் கருதி
விரகிலி யாயொழு கினனால்.

(எ-து.) அந்தகுணநிதியென்பவன் நித்தியகருமமானசந்தியாவந்தனம், காயத்திரிமுறைப்படி செய்யான்; நீதிமுறைமைகளொன்றையுமறியான்; உத்தமமானவேதங்களைப்படியான்; பெரியோர்களிருக்குமிடம்போகான்; உண்மையைச்சொல்லான்; தன்

னைப்போலொத்த துஷ்டர், மூர்க்கர்,காமிகளுமானஇவர்களிடத்திலே சினேகித்து பொய்யுடம்பைச் சதமாகவெண்ணி நியமம் நிஷ்டையில்லாதவனாய் திரிந்தான்.—எ-று. (ச)

அன்னையைத் தனது மொழிவசப் படுத்தி
யகத்திடைப் பொருளெலாங் கொடுபோய்த்
தன்னையொப் பவர்க்கு முலைவிலைப் பகருந்
தத்தைமென் மொழிமடந் தையர்க்கு
முன்னருங் கவறு டுதல்சிறி தேனு
மொழிந்திடாப் புல்லியர் தமக்கு
மன்னிரைக் கொடிய மனமுடைப் பதக
னளித்தளித் தேதமே புரிந்தான்.

(எ-து.) தாயாரைதன்வசப்படுத்திக்கொண்டுவீட்டிலுள்ள பொருள்களையெல்லாம் கொண்டுபோய்த் தன்னைப்போலொத்த பேர்களுக்கும், கிள்ளைபோலுமினிய மொழியையுடைய விலைமாதர்களுக்கும், சற்றேனுமொழியில்லாது சூதாடும் அற்பர்களுக்கும் அந்தப்பொல்லாதகுணநிதியென்பவன்கொடுத்துக் கொடுத்துப் பாதகமே செய்து வந்தான்.—எ-று. (ரு)

புல்லியல் புதல்வன் செய்வினைப் பெற்றோன்
புலப்பட வறிந்திவன் மகனோ
கொல்லவே வந்த தெவ்வென வுளத்திற்
குறித்தவன் மனைவியை நோக்கி
மெல்லியாய் கொடிய மகன்றனக் கொடுநல்
வீட்டினைக் கெடுத்தனை யணிகள்
சொல்லரு நிதியந் தூசுபோ யினவிற்
றாய்மையு மகன்றது நின்னால்.

(எ-து.) இப்படிஹீனமுள்ள நடத்தையையுடைய பிள்ளையைதகப்பனானவன்புலப்படவறிந்துஇவன்பிள்ளையோ!நம்மைக் கொல்லவந்த சத்துருவோ! என்று மனதிலெண்ணி, எச்சதத்தன் தன்பெண்சாதியைப்பார்த்து பெண்ணே? பாவியான மகனைக்கொண்டு நல்ல வீட்டைக்கெடுத்தாய்! நகைகள், அரிதான பணம், வஸ்திரமுதலியனவும் இல்லறசுற்றமும் போயிற்று உன்னால்.—எ-று. (சா)

என்னிடை யிருந்திப் படிசெய்வ தழகோ
வென்செய்தாய் பாவிநீ பெண்ணே

வன்னடை யரக்கி நன்னெறி தவரு
மைந்தனை மனைவியை நோக்கிற்
புன்னர கணுகு மிச்செய லறிந்தாற்
புதரெனை யிகழுவ ரிவண்விட்
டன்னையு மகனு மேகுமி னெனலு
மன்னைதாய் மனையினி லடைந்தாள்.

(எ-து.)என்னிடத்தே யிருந்துகொண்டு இப்படிசெய்வது னக்கழகோ ! பாவி ! நீயும் பெண்ணோ ! பொல்லாத அரக்கியல்லவோ! நல்லநெறிதப்பினபிள்ளையையும்பெண்சாதியையும் கண்டால் நரகம்வருமே! இந்த நடத்தையைப்பெரியோர்களறிந்தால் என்னையிகழ்வார்கள்ஆனபடியினால்இந்தவீட்டைவிட்டுத்தாயும் பிள்ளையும் போங்களென்று பிராமணன்சொல்லத் தாயானவள் தான்பிறந்த வீடுபோய்ச்சேர்ந்தாள்.—எ-று. (எ)

இவன்குண நிதியோ துர்க்குணநிதியின்
றியாவரு மிகழ்தலா லேங்கிச்
சவந்தனி நடந்த தெனவுயர் நகரந்
தனையகன் றிருகண் ணீரொழுக
உவந்தசுற் றமுமே பதரெனவொழித்தா
ரியானுமோர் விஞ்சையு மறியே
னவமதா யிருந்தேன் காசுமொன் றிலையென்
ருகுலத் தொடுமிக நடந்தான்.

(எ-து.) அதற்குமேல்இவன்குணநிதியோ! அல்லதுர்க்குணநிதியென்று எல்லாருமிகழ்ந்து விட்டபடியினாலே அவன் ஏங்கி ஒரு சவமானது தனியேநடந்ததுபோலே அந்தவுயர்ந்தகாம்பிலி மாநகரத்தைவிட்டுநீங்கி இரண்டுகண்ணிலுந் தண்ணீரொழுகும்படி யழுதுகொண்டு உற்றார், உறவின்முறையார் பதரென்றென்னைத் தள்ளிவிட்டார்கள். ஒருவித்தையுமறியாது அவலமாயிருந்தேன் கையிலொரு காசாகிலுமில்லையேயென்றிப்படிவிசாரத்துடன் நடந்தான்.—எ-று. (அ)

மிதித்திடு பணியும் பிடித்திடு பணியும்
விடுத்தவ னாகினே னந்தோ
கொதித்தெழு பசிக்கோ தனமது கிடைக்கக்
கூறலெவ் வாறெனக் கலங்கி

பதிக்குளே யுழகாமொரு பதிக் கருகே
பதந்தடு மாறமெல் லெனப்போய்
இதழ்படத் தழைத்த தொருதரு நிழலி
லிருந்தன னிவைபல நினைந்தே.

(எ-து.) மிதித்தகொம்பும் விட்டுப்பிடித்தகொம்பும்விட்டவனுகினேனே! ஐயோ! கொதித்தெழுந்தபசிக்கு சோறுஎந்தவிதத்திலே கிடைக்குமென்று மனதுகலங்கி அதிவருத்தமாய் செழிப்புள்ள ஒருகிராமத்தினருகே கால் தடுமாறினவனாய் மெல்லெனப்போய் ஒரு மரத்தினிழலிலேயிருந்து இப்படிபலவிதமாக நினைக்கிறன்.—எ-று. (௬)

பொற்கலத் திருத்தி யன்னையிடு சாலிப்
புழுக்கலும் பருப்புநன் னெய்யும்
நற்கறி வகையும் மப்பள முதலாய்
நறியசிற் றுண்டியுந் தயிரும்
சற்கரை கலந்த பாலுமுக் கனியும்
தனித்தனிக் கருதிவா யசைகொண்
டெற்கினி வருமோ விதிசெய லிதுவென்
றெண்ணியாங் கிருந்திடு மளவில்.

(எ-து.) பொற்கிண்ணியைவைத்து தன் தாயானவள் பரிமாருகிற சாதமும், பருப்பும், புத்துருக்குநெய்யும், நல்லகறிவகைகளும் அப்பளமுதலான பலகாரமும், தயிரும், சருக்கரைகலந்த பாலும், மாம்பழம், பெலாப்பழம், வாழைப்பழம், தனித்தனியே சாப்பிட்டதைநினைத்துவாயூரி எனக்கினியகப்படுமோவென்றும் பிரமன்லபி இப்படியோவென்று எண்ணிக்கொண்டு அவ்விடத்திலே யிருக்குமளவில்.—எ-று. (௧௦)

வேறு.

தந்தை யெள்ளப் படுமெத் தனையனை
வந்து தொட்டதன் புன்மையை மாற்றவே
முந்து மாதவர் மூழ்குதற் கேகல்போல்
சந்த வேலை யடைந்தனன் பானுவே.

(எ-து.) தகப்பனாலிகழ்ந்துவிட்ட இந்தப் பிள்ளையைசூரியனானவன் தன் கிரணத்தினால்வந்து தொட்டு அவன் பாவங்களை யொழிக்கவேண்டிச்சூரியன்ஸ்தானத்துக்குப்போகிறது போலே மேற்சமுத்திரத்திலே போயடைந்தான்.—எ-று. (௧௧)

துன்று கின்ற துயிலெனுந் தெவ்வினை
வென்று கண்கள் விழித்திருந் தோருழைக்
கன்று தாவுங் கரனருள் பெற்றுவாழ்
அன்று நல்ல சிவநிசி யானதால்.

(எ-து.)நெருங்கிவருத்தும்நித்திரையென்னுஞ்சத்துருவை வென்று கண்விழித்திருந்து ஒரு மான்கன்றைக்கரத்திற்றாங்கிய பரமசிவனருளைப் பெற்றுவாழும் நல்ல சிவராத்திரியானது அன்றைக்குவந்தது.—எ-று. (கஉ)

ஓங் கருக்க னளிக்கு மொளியெலாம்
வாங்கி மேற்கொடு வன்னி செழும்புகை
யாங்கு லாவநின் றாலென வந்திதா
னீங்கி யல்லொடு மேவி யெழுந்ததே.

(எ-து.) ஓங்கிய சூரியனது ஒளியெல்லாம் மேற்கொண்டு நெருப்பானது புகையுலாவமேற்றிசையிலேநின்றதுபோலேஅந்திச் செம்மானந்தோன்றியது நீங்கிஇருளுண்டாகியது.—எ-று.

நம்பனைத் தொழு வார்தமை நாடவே
அம்பரத் திரு மங்கைதன் னங்கமேற்
பம்பு கண்கள் படைத்துநின் றென்னநீ
டும்பர் தன்னி லுடுக்கண் மலிந்தவே.

(எ-து.) சிவராத்திரியிலே பரமசிவனைத் தரிசனம்பண்ணுகிறபேர்களைப் பார்க்கவேண்டிஆகாசவாணிதன்னுடம்பின்மேற் கண்கள் படைத்துநின்றதுபோல ஆகாயத்திலே நக்ஷத்திரமுண்டாகியது.—எ-று. (கச)

எண்ட ருஞ்சிவ ராத்திரி யென்றுபேர்
கொண்ட சாமிதன் கோலமு டிக்கணி
அண்டர் சாற்று மணிமல ரென்னவிண்
மண்டு தாரகை வானின் மலிந்தவே.

(எ-து.) சிவராத்திரியென்கிற சுவாமியினுடைய முடியினிடத்திலே தேவர்கள்சாத்திய புஷ்பங்கள்போல நக்ஷத்திரக்கூட்டங்களாகாசத்திலே மலிந்துதோன்றியது.—எ-று. (கரு)

திங்க ளெல்லைச் சிவனிசி வேளையி
லுங்கு நீங்குத லோரறி வன்றென
வங்கி பல்லுருக் கொண்டுநின் றாடல்போ
லெங்கு மல்லொளித் தீபமி லங்கின,

(எ-து.) சந்திரனுஞ் சூரியனும் சிவராத்திரிவேளையிலேயிங் கேயில்லாமல் நீங்கிப்போனது புத்தியில்லாதகாரியமென்று அக்கினியானது பலரூபங்கொண்டு நின்றுகொண் டாடுகிறதுபோல வெங்கும் தீபங்கள் விளங்கியது.—எ-று. (கசூ)

வாவி யென்னு மடந்தை சிவநிசித்
தேவை நோக்கித் தொழுதருள் செய்கைபோற்
காவி யெங்கு மலர்ந்தன காவொடு
மேவு கஞ்சங் குவிந்தன மென்மையால்.

(எ-து.) பூந்தடாகமென்னும் பெண்ணானவள், சிவராத்திரி யாகியதெய்வத்தைக் கண்ணாரத்தரிசித்துக் கையாரக்கும்பிட்ட துபோலத்தடாகத்திலிருக்கப்பட்ட ஆம்பல்பூக்களெல்லாம் மலர்ந்தன, தாமரைப்புஷ்பங்களெல்லாம்குவிந்தன.—எ-று. (கஎ)

இன்ன தன்மைச் சிவநிசி யெய்தலு
மன்ன பாவி யரும்பசி நோயினல்
தன் னுடம்பு தளர்ந்துப தந்தனை
யுன்னியேகடி தூர்புகுந்தானரோ.

(எ-து.) இப்படிப்பட்ட தன்மையுள்ள சிவராத்திரிவரவும் அந்தப்பாவியானகுணநிதி பசியுபாதையினலேதன்னுடம்பு தள்ளாடி அன்னத்தின்பேரில் நினைப்புண்டாகியந்தகிராமத்திற்குள் ளேபுகுந்தான்.—எ-று. (கஅ)

ஐய னன வமலனுக் கற்பிதஞ்
செய்ய வேண்டுமென் றெண்ணிச் செழும்பதம்
பெய்த பொற்கலங் கொண்டுபி றங்குமோர்
தெய்வ வேதியன் கோவிலிற் சென்றனன்.

(எ-து.)ஐயனாகியபரமசிவனுக்குநிவேதனம்பண்ணவேண்டி ஓதனம் அமைத்த பொற்பாத்திரத்தையெடுத்துக்கொண்டு ஒரு தெய்வப்பிராமணன் கோவிலுக்குள்ளேபோனன்.—எ-று.(கசூ)

நட்பு ருவரு நன்மணத் தாலதைப்
புட்ப மஞ்சரிச் சோறெனப் புந்திகொண்
டுட் புகுந்து கவர்ந்திட வுன்னியே
பெட் பினேடு பெயர்ந்தங் கிருந்தனன்.

(எ-து.) நட்புடனேவரப்பட்டஅந்தத்தளிகைச்சாதத்தின் நல்லமணத்தினலே அதுபுஷ்பமஞ்சரிச்சோறென்றுநினைவுகொண்டு கூடவே சிவாலயத்துக்குள்ளேபுகுந்து அந்தச்சாதத்தைத்

திருடித்தின்னவேண்டுமெனும்ஆசையுடனேகோவிலுக்குள்ளே புகுந்திருந்தான்.—எ-று. (உ0)

ஈச னன்முடிக் கெண்ணெய்நன் னீர்கனி
யாசி லையமு தாதிகின் ரூடினர்
வாச மென்மல ராதிய ணங்கொடு
நேச மோட ருச் சித்தனர் நீர்மையால்.

(எ-து.) அப்படியிருக்க, அங்குள்ளபேர்கள் பரமசிவனுடையதிருமுடிக்குநல்லெண்ணெய், சுத்தஜலம், இளநீர், எலுமிச்சம், பழச்சாறும், பால், பழம், தேன், சருக்கரை, நெய்யாகியபஞ்சாமிர்தமுதலானஅபிஷேகங்களைச்செய்துவாசனையுள்ளமிருதுவான புஷ்பங்கள், வில்வங்களைக்கொண்டு பயபத்தியுடனேஅர்ச்சனைபண்ணினார்கள்.—எ-று. (உக)

அற்றமின்னுய ராகம நூல்விதி
கற்ற தூயர் கமழ்நறுந் தூபமும்
பெற்ற சோதியுந் தீபமும் பேரொலி
யுற்ற கண்டை யொடுபணி மாறினர்.

(எ-து.) பின்னும் உயர்ந்த ஆகமசாஸ்திரவிதியையோர்ந்த சைவவேதியர்கள் பரமசிவனுக்குபரிமளதூபமும்கர்ப்பூர தீபங்களும் கண்டனாதத்துடன் உபசரித்தார்கள்.—எ-று. (உஉ)

என்னை யாளுடை யீசனுக் கெண்ணரும்
அன்ன மாதிய வற்பிதஞ் செய்தனர்
துன்னு மன்பர் துதித்து வணங்கினர்
முன்னர் பஞ்ச வியங்கள் முழங்கவே.

(எ-து.) என்னையாண்டருளிய பரமசிவனுக்கு அன்னமுதலானதை நிவேதனஞ் செய்தனர்கள், அன்பர்கள், பத்தியுடனே சிவனைத்தோத்திரஞ்செய்து வணங்கினார்கள், சந்நிதிக்குமுன்னே பஞ்சவாத்தியமும் முழங்கினார்கள்.—எ-று. (உங)

மெல்ல வாலவட் டம்பணி வீசினர்
எல்லு லாவு கவரி யிரட்டினர்
நல்ல தர்ப்பணம் நாட்டியே காட்டினர்
தொல்லை சீர்முடித் தூயவன் முன்னரே.

(எ-து.) பின்னும் கங்கையைத்தரித்த சடையையுடைய பரமசிவனுக்குமுன்னே ஆலவட்டம்பணிமாறினார்கள், வெண்சாமரைவீசினார்கள், நல்லகண்ணாடி காட்டினார்கள்.—எ-று. (உச)

இறந் திடாத விறையவன் கோயிலைச்
சிறந்த நல்வலஞ் செய்குன ரோசிலர்
நிறைந்த வீசனை நெஞ்சிடை வைத்தவ
ருறைந்த பாவனை செய்குன ரோசிலர்.

(எ-து.) பிறப்பிறப்பில்லாத பரமேஸ்வரனுடைய கோவிலைச் சிலபேர்கள்வலமாகப்பிரதக்ஷணம்வருவார்கள்,சிலர்பரமேஸ்வரனை மனதினிடமாகவைத்து தியானம் பண்ணுவார்கள். ()

போத நல்கு புராதன சங்கர
நாத கீத நடேச பரம்பர
சீத நீர்முடிச் சின்மய நான்மறை
யோது நம்பவென் றேதின ரோசிலர்.

(எ-து.) ஞானந்தரப்பட்ட புராதனு!சங்கரா! நடேசாபரம்பரனே! கங்காதரனே!சின்மயரூபனே! சதுர்வேதமுந்துதிக்கும் சிவனே! என்றுசொல்லிச் சிலபேர்கள் துதித்தார்கள்.—எ-று.

தேசு பெற்றருள் சித்துரு வானநம்
மீச னாலயத் தங்கங் கிருந்துவெம்
பாச நீக்கு மவன்கதை பற்பலப்
பேசினார் சிலர் பெட்படைந் தார்சிலர்.

(எ-து.) பிரகாசமுள்ள ஞானசொரூபனான நமதுபரமேஸ்வரன் கோவிலுக்குள்ளே அங்கங்கே யிருந்துகொண்டு சிலபேர்கள் சிவபுராணங்களைப் படித்தார்கள், அதைக்கேட்டு சிலபேர் ஆநந்தமடைந்தார்கள்.—எ-று. (உஎ)

நீற்றி னுண்கதை நின்மலன் கண்மணிப்
பேற்றின் மாக்கதை பேசரு மீசன்றன்
தேற்ற மாகிய மந்திரத் தின்கதை
யூற்ற மோடு புகன்றன ரோசிலர்.

(எ-து.) பின்னையும்விபூதிமான்மியம், உருத்திராக்ஷமான்மியம் உச்சரித்தவர் பாவத்தை நீக்குமெனத்தெளிவாக விளங்கிய பஞ்சாக்ஷர மான்மியமுமாகிய இவைகளைச்சிலபேர் உற்சாகத்துடனே அந்த ஆலயத்திற்படித்துச்சொன்னார்கள்.—எ-று.(உஅ)

பாடினார் சிலர் பாணியைக் கூப்பிநின்
றாடினார் சில ரன்பிற் பரவசங்
கூடினார் சிலர் கூறரு மீசனை
நாடினார் சிலர் நன்றிதென் றார்சிலர்.

(எ-து.) சிலபேர் பாடினார்கள், சிலபேர் சிரசின்மேல் கையைக்குவித்துக்கொண்டு நின்றார்கள், சிலபேர் அன்பிற் பரவசராயிருந்தார்கள் சிலபேர்கருணையுள்ள பரமசிவனை தரிசித்தார்கள், சிலபேரிதுவே நல்ல தென்றார்கள்.—எ-று. (உஅ)

ஜாம மூன்றினு மின்னன செய்துபின்
றேமில் கோயிலுட் டுன்னி நெருங்கினோர்
தாம யர்ந்து துயின்றனர் சாலவக்
காமி யன்னது கண்டெழுந் தானரோ.

(எ-து.)இந்தப்படியாகமூன்றுசாமம்வரையில்தோத்திரமுதலியனவும்நடந்தேறினபின்புசிவாலயத்துக் குள்ளேவந்துநெருங்கியிருந்த ஜனங்கள் அயர்ந்து கண்ணுறங்கினார்கள், அச்சமயம் அந்தக்கொடும்பாவிஅந்தஅன்னத்தைக்கவருஞ்சமயமிது வெனக்கண்டு எழுந்திருந்தான்.—எ-று. (ஙு௦)

வேறு.

எந்தைகருப்பமனையிடத்தி னேகிச்சிறிதேகதவுதிறந்
தந்தத்தளிகைகாணும லவிபவருமோர்தீபத்தை
முந்தவிரலாற்றூண்டிநறு மூரற்றளிகைதனைக்கண்டு
பந்தவினைகளகன்றிடுவோன் பற்றியெடுத்துவருங்காலை.

(எ-து.) பரமசிவனெழுந்தருளிய கர்ப்பகிரகத்திலேபோய் சற்றே கதவைத்திறந்து உள்ளேபுகுந்துபார்க்க, அந்தத்தளிகையைக் காணாதபடியினாலே அப்போது சுடர்மழுங்கி வரப்பட்ட தீபத்தைத் தன் விரலினாலேதூண்டி வெளிச்சமுண்டானதின் பிறகு தளிகையைக்கண்டுபந்தபாசமென்னும்வினைநீங்கப்போகிறவனதைதொட்டெடுத்துக்கொண்டுவருகின்றவேளையில்.எ-று.

உறங்குமவரைமிதித்துமிதித் தோடுங்கால்கள் தடுமாறிச்
சிறந்தகோயிற்றனைநீங்கிச் செல்லு மவனையெழுந்தெவரு
மறங்கொள்கரவன்போகின்றான்பிடிமின்பிடிமின்வதைமினென
வறைந்துதுறத்துங்காலொருவ னம்பரலெய்யவிழுந்தனனால்.

(எ-து.)அப்படிதளிகையையெடுத்துக்கொண்டுவோடிவருகையில், பயத்தினால் கால்கள்தடுமாறி நித்திரைசெய்யு மவர்களை மிதித்து மிதித்துக்கொண்டு கோவிலைவிட்டுநீங்கிப்போகிறவனை எல்லாரும் எழுந்து அதோதிருடன்போகிறான் பிடியுங்கள்பிடியுங்கள்கொல்லுங்கள்என்றுசொல்லித்துறத்திவருகிறவேளையில் ஒருவன் அவனை அம்பினாலெய்ய,அந்த அம்புபட்டுவிழுந்தான்.

விழுந்துகுருதிபொங்கவுயிர் விடுத்தபதகன்றனைச்சினத்தீக்
கொடுந்துபடரென்றூதர்மறங் கொண்டுபிடித்துவருங்காலை
யெழுந்துவந்துசிவதூத ரென்றூதுவர்கைவிடுவித்தாங்
கொழிந்தபவத்தீயவனுக்கீ தொல்லாதென்றுகொடுசென்றார்.

(எ-து.) கீழேவிழுந்து இரத்தம்வழிந்தோடச் சீவன்விட்ட அந்தப்பார்ப்பானைக்கோபாக்கினிமூண்ட எனது தூதர்கள்வர்மங்கொண்டு அவனைப்பிடித்துவருகிறவேளையில், கைலாசத்திலிருந்துசிவதூதர்கள்வந்து என்றூதர்கையிலே யகப்பட்டவனை அங்கேவிடுவித்துஇவனுக்குஇந்தஇயமவாதனை தகாதென்றுகைலாயத்திற்குக் கொண்டுபோனார்கள்.—எ-று. (௩௩)

சென்றகணங்கள்பின்போகிச் செறிந்தவென்றூதுவர்தாழ்ந்து
நின்றுகேண்மின்பெரியோர்கா ணிமலமுடைத்தாமக்கமணி [ன்
யொன்றுமணிந்தோனலனுதலி னொளிவெண்ணீறிட்டோனல்ல
மன்றுளாடிமுடியினொரு மலர்பேர்கேட்டவவனல்லன்.

(எ-து.)அவனைக்கொண்டுபோகப்பட்ட சிவதூதர்கள் பின்என்றூதர்கள்தொடர்ந்துபோய்கும்பிட்டுஓகோ,பெரியோர்களே? சற்றேநின்றுகேளுங்கள்.இந்தப்பார்ப்பான் நிர்மலமானஉருத்திராக்ஷமணியொன்றேனும் பூண்டவனல்லன், நெற்றியிலே விபூதிதரித்தவனல்லன் பரமசிவத்தின் சிரசிலே சாத்தப்பட்ட பூவிலொருபூவின்பேராயினுங் கேட்டவனல்லன்.—எ-று. (௩௪)

துட்டன்கொடியன்துராசாரி தூர்த்தனிவனைநீவிரெமைக்
கிட்டிக்கவர்ந்துகொடுசெலுங் கேண்மையென்னவிதுதகுமோ
மட்டில்யாமோசிவதூதர் நமக்கிங்கெதிரார்மறிக்கவெனத்
திட்டிக்காணவநீதிநெறி செல்லாநின்றீரறிவுள்ளீர்.

(எ-து.) இந்தப்பார்ப்பானவன் மஹாதுஷ்டன், பொல்லாததுராசாரமுள்ளவன், தூர்த்தநடத்தையுள்ளவன், இவனைநீங்கள்எங்கள்கிட்டவந்து விடுவித்துக்கொண்டுபோகிறது என்னஞாயம்!நாமோ சிவதூதர்கள்,நமக்கெதிராய்யார்மறிப்பார்களென்றுஅநியாயமாய்கண்காணஅறிவுள்ளநீங்களிப்படிஅநியாயவழியில்செல்லுவது தகுமோவென்றுபின்னையுஞ்சொல்லுகிறார்கள்.

வேலைபரந்துகரைகடக்கில் வேந்தரானோர்கொடுமைசெயிற்
சீலமுடையோர்பவம்புரியிற் சென்றுநின்றுதடுப்பவரார்
ஆலமனையவிவன்றனைநீ ரழைத்தங்கேகவழக்கேதென்
றேலமிடுமென்றூதர்தமை நோக்கிக்கணங்களுரைசெய்வார்.

(எ-து.) சமுத்திரம்பெருகிக்கரைகடந்தாலும், இராஜாக்கள்கொடுமைசெய்தாலும்,ஒழுக்கமுள்ளோர்கள் பாவஞ்செய்தாலும்எதிர்நின்றுதடுக்கிறவர்களார்! விஷம்போலப்பொல்லாதபாதகனை இவனை நீங்கள் கைலாயத்துக்கு அழைத்துப்போகஞாயமேதென்றுஓலமிடுகிறஎன்றூதர்களைப்பார்த்துச்சிவதூதர்கள் சொல்லுகிறார்கள்.—எ-று. (௩௬)

விரும்பும்பரமனிசிதன்னி லாரவன்னங்கிடையாமல்
இருந்ததேநன்னெறியாயிற் றெழுந்துதிருடநினைத்தேனும்
பொருந்துதுயிலைமறுத்தனன்மெய்ப் பூசைபண்ணுதவனேனுந்
திருந்துபூசைபணக்கண்டான் றீமையுளனோவிவனம்மா.

(எ-து.) மேலோர்களால் விரும்பப்பட்ட சிவராத்திரித்தினத்தில் இவன்பொசிக்க அன்னங்கிடையாமலிருந்ததே நல்லவுபாசனையாயிற்று, அன்னத்தைத்திருட நினைத்தாயினும்,சிவராத்திரியில்நித்திரைவிட்டவனாயினான்;சிவனைப் பூசைபண்ணுதவனானாலும்சிவனுக்குப் பூசைவரிசைப்படிபண்ணுகிறதைக்கண்டானானபடியினாலே, இவன் பாவமுள்ளவனோஎன்று சொல்லிப்பின்னையுஞ்சொல்லுகிறார்கள் சிவதூதர்கள்.—எ-று. (௩௭)

அன்றியிறைமுன்னத்தளிகை காணக்கருதியானாலுங்
குன்றியிருந்தசுடர்தூண்டிக் கொடுத்தான்விதிமுற்றியதேனு
மின்றிசிவசன்னிதிமுன்ன ரிறந்தானிதினுந்தவமுண்டோ
நின்றியாங்கடோழத்தக்க நீர்மையுடையனிவனாமால்.

(எ-து.) இதுவல்லாமலுஞ்சிவனுக்குமுன்னாகஅன்னந்தெரியநினைத்தாகிலும் சுடர்மழுங்கியிருந்தவிளக்கைவிரலினாலே தூண்டினான், விதிமுடிந்துபோனாலும் சிவராத்திரியாகிய இன்றைக்குசிவசன்னிதிக்குமுன்னே யிறந்தான், இதுகளைவிடவேறேதவமுண்டோ!சிவதூதர்களாகப்பட்ட நாங்களும் நின்று சேவிக்கப்பட்ட குணத்தையுள்ளவனிவனென்று பின்னுஞ் சொல்லுகிறார்கள்.—எ-று. (௩௮)

எந்தைக்கினியானிவன்றனை யிறைஞ்சினுங்கள்வினைதீர்ந்து
வந்தவழியேபோமினெனக் கூறிக்கனகமணிமானத்
தந்தமறையோன்றனையேற்றி யனந்தமானசிறப்பினொடு
முந்துபவமில்சிவதூதர் முதல்வனிடத்திலிருத்தினரால்.

(எ-து.)பரமசிவனுக்குஇனிமையானவனிவன்! இயமதூதர்களே? இவனுடைய பாதத்தைவணங்கிஉங்கள்வினைதீர்ந்துவந்தடமே போங்களென்று சிவதூதர்கள் சொல்லிப்பொன்னாலும் இரத்தினமணியாலும்செய்தவிமானத்திலே அந்தப்பிராமணனையேற்றிவைத்துக்கொண்டு அனேகசிறப்புடனேசிவதூதர்கள் பரமேஸ்வரனிடத்திலே அந்தப் பிராமணனைக்கொண்டுபோய்விட்டார்கள்.—எ-று. (ஙகூ)

இன்னுமுயரித்தகையகதை யெந்தைகேட்டியாவருக்கு
மன்னைநிகரோர்சிவபத்தன் கயிறற்றுறுமோரக்கமணி
தன்னைமுடிந்துகலைவண்ணான் கரத்திலளிப்பச்சலத்துறையின்
முன்னியேகிக்கலைதலையின் முடிந்தமணியையவிழ்த்தனனால்.

(எ-து.) இப்படி இயமதர்மராஜன் சானந்தமுனிவருக்கு இந்த கதையைச்சொல்லிப் பின்னையும்சொல்லுகிறான்.ஐயனே? கேளும் என்று எல்லாருக்குந்தாயையொத்தவொரு சிவபத்தன் கயிறற்றுத் தனியேயிருக்கும் ஒரு உருத்திராக்ஷமணிமுடிந்து இருந்தசீலையை வண்ணான்கையில் வெளுக்கக்கொடுத்தான், அதை அவன்வாங்கிப்பொய்ச்சலத்துறையிலே அந்தச்சீலையைவிரித்துப்பார்க்கையில் சீலையின் முந்தானையிலேமுடியிருக்கக்கண்டு அதை யவிழ்த்தான்.—எ-று. (சo)

அத்தன்மணியைக்கண்டனவே யறியகலையைமடித்ததன்மேல்
வைத்துநிகரிற்சிவபத்தன் துகிலும்வெளுத்தவ்வாசனத்தின்
சுத்தமணிதன்னையுமுடிந்து சென்னிமீதுசுற்றியொளிர்
முத்தமெனவேவெளுத்தகலை முற்றுஞ்சுமைகட்டியபின்னர்.

(எ-து.) உருத்திராக்ஷமணியைக் கண்டளவிலே சீலையை மடித்து அதன்மேலே யந்தஉருத்திராக்ஷமணியைவைத்து அந்த சிவபத்தனது சீலையையும்வெளுத்து அந்த முந்தானையிற்றானே அந்த மணியைமுடிந்து கன்றலையிலே அந்தச்சீலையை சுற்றிக்கொண்டுமுத்துப்போல்வெளுத்தமற்றசீலைகளையெல்லாஞ்சுமையாய்க்கட்டியபிறகு.—எ-று. (சக)

இனியமனைநைகொடுத்துமனை யேகென்றொருகூர்பரசுகொடு
தனிலேமுனிந்தமரமொன்றைத் தறிக்கும்போதுகாலதனில்
முனைகொள்பரசுவிழுந்திடவு மிறந்தானுயிரைத்தூதர்வௌவப்
புனிதமணியைமுடிந்தகலை தலையிலிருந்தபுண்ணியத்தால்.

(எ-து.) அந்த சீலேசுமையைப்பெண்சாதிகையிலேகொடுத்து நீ வீட்டுக்குப்போவென்று அனுப்பிவிட்டு, ஒரு கூரியகோடாலி யெடுத்துக்கொண்டு தானைக் காய்ந்துபோன வொரு மரத்தை வெட்டுகிறபோது அந்த வண்ணான்காலிலே அந்தக்கோடாலிதவ றிப்படவு மிறந்துபோனான், அவனை இயமதூதர்கள் பாசத்தாற் கட்டிப்பிடித்தார்கள், அப்போ தவன்றலையில்உருத்திராக்ஷமுடி ந்த சீலையிருந்த புண்ணியத்தினாலே.—எ-று. (சஉ)

மெய்யரானசிவதூதர் விரைந்துவந்தென்றூதர்தமை
கையினாலேபுடைத்தவனைக் கவர்ந்துவிமானந்தனிலேற்றி
பொய்யிலாதபரமவறஞ் செய்தோர்க்கன்றிப்புகவொண்ணாத்
துய்யகைலேக்கிரிமீது தொலைவில்சிறப்போடிருத்தினரால்.

(எ-து.)மெய்மையுள்ளசிவதூதர்கள்சீக்கிரமாய்வந்து என் னுடையதூதர்களைக்கையினாலேயடித்து அந்த வண்ணானைமீட்டு க்கொண்டு விமானத்திலேற்றிப்பொய்யில்லாதமேலானதருமஞ் செய்தவர்களுக்கே யல்லாமல், மற்றபேர்கள் போகப்படாத கைலாசகிரிமேலே வொழிவில்லாத சிறப்புடனேவைத்தார்கள்.

அண்ணலின்னங்கேள்கதையொன் றறிவில்லாதவொருசதுர்த்தன்
வண்ணமதனம்புடற்றுதலால் மையல்பொருதோர்பார்ப்பினியை
நண்ணவேண்டிச்செலுமெல்லை நாகங்கடித்ததது கண்டு
மெண்ணமின்றியவள்மீது விழுந்து சாதுமெனச்செலுங்கால்.

(எ-து.) அண்ணலாகிய சானந்தமுநிவரே ? இன்னமொரு கதைகேளுமென்று இயமதருமன் சொல்லுகிறான்;அறிவில்லாத ஒரு சூத்திர னைவன்,மன்மதபாணத்தினாலேபொருக்கமாட்டா மல் ஒருபார்ப்பினியை யனுபவிக்கவேண்டிபோகிறபோது,வழி யில் ஒரு நாகங்கடிக்க அதைக்கண்டுமெண்ணமில்லாமல்அவள் மேல்விழுந்து சாவோமென்று போகிறவேளையில்.—எ-று. ()

ஆடைத்தலையின்முடித்திருந்த நீற்றைநுதலினகலத்தி
னீடத்தரித்துவழிபார்க்கு நேயமுடையமெல்லியல்பா
லோடிக்கடித்தரவெனையென் றேருதியிருகவணைத்தளவி
லாடற்பணியின்விடந்தலைமட் டேறமரித்தானவனம்மா.

(எ-து.) தன்முன்றானையிலே முடிந்திருந்த விபூதியைநெற் றியிலு மார்பிலும்நிறையப்பூசிக்கொண்டு இவன்வருவானென்று வழிபார்த்துக்கொண்டிருந்தஆசையுடையஅந்தப்பார்ப்பினியரு

கிற்சென்று என்னைப்பாம்பு கடித்ததென்றுசொல்லி அந்தசூத்தி ரன் அவளைக்கெட்டியா யணைத்தவளவிலேபாம்பின்விஷம்தலை மட்டுமேறிச் சூத்திரன் இறந்தான்.—எ-று. (சரு)

கடுநேர்விழியமடவாளுங் காமவிடஞ்சென்னியிலேறி
யுடனேமரித்தாளவள்தனத்தி லுரத்திற்சாற்றுந்திருநீறு
படலாலிவர்கள்நீறுதரித் தவரென்றணுகப்பயந்தவராய்
விடமேயனையதூதுவர்வந் தென்முன்னின்றுவிளம்பினரால்.

(எ-து.) விஷம்போலொத்தகண்களையுடையபார்ப்பினியும் விஷங்கலந்த காமந் தலைமண்டைஏறி அவளுமுடனேசெத்தாள் அவள் ஸ்தனனியத்திலேயும்மார்பிலேயும்பூசினவிபூதிபட்டிருந் தபடியினாலே இவர்களிருவரும்நீறுபூசினபேர்களென்று பிடிக்க வந்ததூதர்கள் கிட்டப்போகப்பயந்து என்முன்னேவந்துநின்று கொண்டு சொன்னார்கள்.—எ-று. (சசா)

விளம்புமெனதுதூதர்தமை விரைந்துநோக்கிப்பாவிகாள்
களங்கமில்லாத்திருநீறு யாவர்நுதலிற்கண்டாலுந்
துளங்குமக்கமணிதரித்தோ ரியாவரேனுந்தூரத்தே [ன்.
வளங்கொளவரைக்கரங்கூப்பி வணங்கிப்போகிரெனவறைந்தே

(எ-து.) அப்படிசொல்லியஎனதுதூதர்களைவிரைந்துப்பா ர்த்து அடாபாவிகளே? களங்கமில்லாததிருநீறுயார்நெற்றியிலே பூசியிருக்கக்கண்டாலும், உருத்திராக்ஷமணிதரித்த யாவரானாலு ம்தூரத்தே நீங்கள் நின்றுகொண்டு அவர்களைக்கைகுவித்துகும் பிட்டுவணங்கிப்போங்கள் என்று என்னுடைய தூதர்களுக்குப் புத்திசொன்னேன்.—எ-று. (சஎ)

அறையுமமையத்திருவரையு மமலன்றூதர்கைலைதனில்
குறைவிலாதசிறப்பினொடு கொடுபோய்வைத்தாரவ்விடத்தின்
மறவனொருவனேதிமமொன்றியைந்துசென்றவான்கதையொ
றிறைவபுனிதமுநிநாத கேட்டியடியேனியம்புகேன். [ன்

(எ-து.) இப்படி நான்சொல்லுகிற சமையத்திலே அந்தப் பார்ப்பினியையும் சூத்திரனையும் சிவதூதர்கள் கைலாயத்திலே சிறப்புடனே கொண்டுபோய் வைத்தார்கள்; அந்தக்கைலாயத்தி னிடத்திலே ஒரு வேடனும் ஒரு அன்னப்பட்சியும் இசைந்து போய்ச்சேர்ந்த கதையொன்று சானந்தமுனிவரே?கேளும்அடி யேன்சொல்லுகிறேனென்றுபின்னையுமியமதர்மராஜன்சொல்லு கிறான்.—எ-று. (சஅ)

வனத்திலுறும்வேட்டுவனொருவன் வலியவிடையிற்கச்சிறுக்கி
முனைக்கையம் புசிறு தூணி முதுகிற்றூக்கியிருகரத்தாற் [ச்
குனித்தசிலையொன்றேந்திவலி கொண்டதொடுதோல்பதத்திட்டு
சினத்தவிலங்குதனைத்தேடி வேட்டைக்காட்டிற்சென்றனனால்.

(எ-து.) வனத்திலே யிருக்கப்பட்ட ஒருவேடனானவன்இடையிலே கச்சையிறுக்கிஅம்புறுத்தூணிமுதுகிற்றூக்கிஇரண்டு கையாலும் வளைத்து நாணியேற்றின வில்லொன்றுகையிலேந்திவலியசெருப்புங் காலிலேமாட்டியுக்கிரமானமிருகங்களைத்தேடிக்கொண்டுவேட்டையாடக்காட்டிலேசென்றான்.—எ-று. (சகூ)

செறிந்தவனத்தினெவ்விடத்துந் தேடிவிலங்கைக்காணாது
மறிந்தவுளத்தனாகியொரு மான்கன்றேனும்புதறன்னி
லுறங்குஞ்சிறியமுயலேனுங் கண்டேனில்லையுறும்போதி
லறைந்தவாய்ச்சொல்யாதோமற் றறியேனென்றுமறியேனால்.

(எ-து.) நெருங்கிய வனமெங்குந்தேடி மிருகங்களைக்காணாமல்மனோதுக்கமுள்ளவனாகி, ஒரு மான்குட்டியாகிலுஞ்செடியிலேவுறங்குகிற சிறியமுசலாகிலுங்கண்டேனில்லையே ! நான்வருகிறவேளையிலேசொன்ன சகுனமெப்படிப்பட்டதோ ! பின்னையொன்றுமறியேன்! அறியேனென்றுவேடன்வியசனப்பட்டான்.

நெறியில்வலியான்வழிவிட்டு நின்றதாந்தைகிளைக்கூடிற்
றுறுசிர்க்கருடன்றனைக்கண்டேன் காடையிடமாயோடியது
மறையோரிருவரெதிர்வந்தார் வாரந்தானுநல்லதென்றார்
கறையிறசகுனமெலாநன்றே கண்டசகுனம்பொய்யாமோ.

(எ-து.) வருகிறவழியிலே வலியான்குருவி வழிவிட்டது, ஆந்தைகிளைக்கூடியது, கருடன்தரிசனமுண்டாச்சுது,காடையிடமாயோடியது,இரட்டைபிராமணர்கள்எதிர்வந்தார்கள்,அவர்களின்றுநல்லதினமென்றார்கள்,இப்படிகுற்றமில்லாதசகுனமெல்லாம் நன்மையாயிருந்ததே ! இதுவெல்லாம்பொய்யாகுமா! என்றான்.—எ-று. (ருக)

அலகில்கொலைசெய்தூன்விற்றா லன்றிச்சோறுகிடையாதிங்
கிலகுபொழுதுமாயிறறே யெடுத்தமிருகங்கண்டலதென்
குலநன்னாரிவரவொட்டாள் குருவியேனுமெய்திலனியான்
சலனமகல்வதெவ்வாறென் றெண்ணியிருந்து தளர்காலை.

(எ-து.) அளவில்லாத கொலைகள்பண்ணி மாம்சம்விற்றாலொழியச் சோறுகிடையாதே !இங்கே பொழுதுமாயிற்றேநான்

சுமந்துக்கொண்டுவருகிற மிருகங்கண்டாலொழிய நற்குலத்தவளாகியஎன்பெண்சாதிவீட்டுக்குவரவொட்டாளே! குருவியானும் அம்பினு லெய்ய வில்லையே ! நான்சஞ்சலநீங்குவ தெவ்வாறே ! என்று இப்படியெல்லாமெண்ணி வேடனனவனிருந்து மனந்தளருகிறவேளையில்.—எ-று. (ருஉ)

வானினிடையேதன்குடம்பைக் கெய்தவேண்டிவாயலகா
லானகமலப்பூவொன்று கவ்விவருமோரன்னத்தைக்
கானவேடனெய்தனனு லெய்தவளவேகண்பட்டுத்
தானமதனிலுயிரயர்நது தாளுந்தளர்ந்துவிழுந்ததால்.

(எ-து.) ஆகாசத்திலே தன்னிடகூட்டுக்குப் போகவேண்டிவாயாகிய மூக்கினுலொருதாமரைப்பூவைக்கவ்விக்கொண்டுபறந்துவருகிறஒரு அன்னபட்சியைஇந்தக்கானவேடன் அம்பினுற்போட்டான், போட்டளவிலே அம்பு தானத்திலேபட்டுசீவன்றளர்ந்து தாளும்விலவிலத்து அந்தஅன்னம்விழுந்து.—எ-று. ()

அன்னமெடுத்துக்கொடுவந்த கமலப்பூவுமதனிடத்தே
மன்னுமொருநீர்த்திவலையுமவ் வனத்தார்சிவலிங்கப்பெருமான்
சென்னிமிசையேவீழ்ந்தனமா தேவனதுகண்டுளமகிழ்ந்து
முன்னிநெடியசிலைவேடன் முன்னர்விடைமேல்வந்தனனல்

(எ-து.) அன்னப்பட்சிவாயினுற் கவ்விக்கொண்டுவந்ததாமரைப்பூவும்,அந்தத் தாமரைப் பூவினிடத்திலேபொருந்தியிருந்த ஒருதுளிதண்ணீரும் தவறிப்போய் அந்தவனத்திலேகோவிலெல்லாமழிந்துபோ யிருக்கப்பட்ட சிவலிங்கத்தின் முடிமேல்விழுந்தது ; அதனை மகாதேவரானபரமசிவன்கண்டுமனமகிழ்ந்துவேடனுக்கு முன்பதாக இரிஷபவாகனத்தின்மேல் வந்து காக்ஷிகொடுத்தார்.—எ-று. (ருச)

வந்துநின்றுபுனிதருநம் மணியாலயமுமுயர்மதிலு
முந்துசிகரகோபுரமு முன்மண்டபமுஞ்சிதைந்துபோய்
இந்தவெளியில்வெயில்காய விருந்தோம்பன்னீருகமாக
வுந்துமன்பர்நமைப்பூசை செய்தாரில்லையுண்மையால்.

(எ-து.) அப்படி காக்ஷிகொடுத்த பரமசிவன்வந்து அடா வேடனே ? நாமிருக்கிற நம்மிடகோயிலும், உயர்ந்தமதிலும், கோபுரமும், முன்மண்டபமும், இதுகளெல்லா மழிந்துபோய்

இந்த வெறுவெளியிலே வெயிலடிக்கப்பன்னிரண்டியுகமா யிருந்தோம், இந்நாள்வரைக்கும் அன்புடனேநம்மைப்பூசைபண்ணினபேரில்லை.—எ-று. (ருரு)

உன்னால்நமக்கோர்நறும்போது மொருநீர்த்துளியுங்கிடைத்தது காண், மின்னார்கணையோயுனைமகிழ்ந்தோம்விருப்பமானதெத்தனையு, முன்னாவினிதுகேளெனவே முதல்வனறிவுகொடுத்தளவி, லென்னாயகனேயெனவேட னெழுந்துநடித்துவணங்கினனால்.

(எ-து.) அடாவேடா? நமக்கொருபூவும் ஒரு நீர்த்துளியும் உன்னாற்கிடைத்தது, பிரகாசமுள்ளவில்லையுடையவனே? நாம் சந்தோஷப்பட்டோம்! உனக்குவிருப்பமானவரம் எவ்விளவுண்டோ அவ்வளவும் நினைத்துக்கேளென்று பரமசிவ னறிவைக் கொடுத்தார், அப்போது வேடனானவன் எழுந்துதுள்ளித்தீர்க்க தெண்டம்பண்ணி.—எ-று. (ருசு)

அங்கம்புளகித்தானந்த மடைந்துசிரமேற்கரங்கூப்பிப்
பங்கமலத்தின்றடைநீங்கிப் பாய்ந்துகுதித்துக்கூத்தாடி
உங்குநிலத்திற்பணிந்துபணிந் தெழுந்துகண்ணாலுறநோக்கி
யெங்கள்பிரானையெதிர்நின்றுதுதித்தல்செய்தாணிணையில்லான்.

(எ-து.) அந்தவேடன் சரீரம்பூரித்துஆனந்தமடைந்துதலைமேல் கையைக்குவித்துஆணவமலத்தின் மறைவுநீங்கிப்பாய்ந்து குதித்து கூத்தாடி அங்கே நிலத்தில் தெண்டனாகப்பணிந்து பணிந்து தன் கண்ணாற்பொருந்தப் பரமசிவனைப்பார்த்து எதிராக நின்றுகொண்டு தோத்திரஞ்செய்தான் இணையில்லாதஅந்த வேடன்.—எ-று. (ருஎ)

வேறு.

வெறிமேவுகடுக்கையணி வேணிமகுடந்தனையும்
பிறியாதமலமகற்றும் பெற்றிகொணின்பதத்தினையும்
நெறியோடுபடைப்பவனும் நிலைபாகப்புரப்பவனு
மறியார்களெனிலெந்தா யறிபவர்மற்றியாவரே.

(எ-து.) வாசனைபொருந்தியகொன்றைமாலையணிந்தஉமது சடாமகுடத்தையும் சிவனைவிட்டுப் பிரியாத மலங்களையகற்றப்பட்ட குணமுடைய உமது பாதத்தையும் நெறியுடனே யுலகத்தைப்படைக்கப்பட்டபிரமதேவனும், நிலையாகவுலகத்தைஇரட்சிக்கப்பட்ட நாராயணமூர்த்தியும், அறியமாட்டார்களென்றால் எந்தையாகிய பரமசிவனே! உம்மையறிகின்றபேர்கள் பின்னை யாரென்றான்.—எ-று. (ருஅ)

செம்மைநலஞ்சிறிதின்றி சிறுபுலிபோற்கொலைசெய்துண்
டம்மையறியாதுழ்லு மெளியேனுக்கருள்செய்தாய்
இம்மைதனிற்செய்தநல மியாதுமில்லையிலையெந்தா
யும்மையிடை செய்தவ மியாதோமற்றுணரேனே.

(எ-து.) செம்மையானநன்னடக்கைச்சிறிதேனுமில்லாமல் சிறியபுலிபோல் சீவனைக்கொலைசெய்துதின்று இனிவருங்காரியந் தெரியாமலுழலுகிறவேழைக்குக்கிருபைசெய்தீர். யானேஇப்பிறப்பிற்செய்த நன்மையேதுமில்லை பூர்வஜென்மத்திற்பண்ணினதவ மென்னமோ வறியேன் ஐயனே.—எ-று. (ருகூ)

அரிதேடவயன்றேட அமரர் முனிவரர்தேட
விரிவாயமறைதேடக் கிடையாதவிமலாநீ
பொருமூரிவிடையேறிப் பரிவோடுந்தமியேன்றன்
னிருபார்வைமுன்னின்ற யென்னதவஞ்செய்தேனே.

(எ-து.) சுவாமி ! உம்மைபிரமன் விஷ்ணுமுதலிய தேவர்களும், முனிவர்களும், விஸ்தாரமானவேதங்களும், தேடிக்கிடையாத பரமேஸ்வரனே! நீரிப்போயுத்தசன்னுகப் பலமுடையவிடபத்தின்மேலேறிக்கொண்டுசந்தோஷத்துடனே அடியேனிரண்டு கண்களுங்காணத் தரிசனந்தந்து நின்றீர், நானென்னதவஞ்செய்தேனே அறியேனென்றான்.—எ-று. (சூo)

வாரிதியைமந்தரத்தில் வாசுகியாற்கடைந்திடுநாள்
கோரமொடுசகமலற கொதித்துவரும்விடந்தன்னைச்
சேரமிசைந்தருளியரி திசைமுகனிந்திரன்முதலோ
ராருயிரையளித்தனைநின் னருட்பெருமைக்களவுண்டோ.

(எ-து.) பின்னும் சமுத்திரத்தைமந்தரகிரியென்னும்மத்தில் வாசுகியென்னுந் தாம்பைப்பூட்டிக்கடைந்த நாளையில், உக்கிரத்துடனே உலகமலறகொதித்துப்பிறந்த விஷமுழுமையுமுண்டருளி விஷ்ணு பிரமாவும்தேவேந்திரன்முதலியோருடையசீவனையெல்லா மிரட்சித்த உமது அருட்பெருமைக்கு அளவுண்டோ.—எ-று. (சூக)

கதிர்ச்சடையுமிளம்பிறையுங் கண்மூன்றுமணிமிடறு
முதித்தவிளம்பொற்சோதி யுமிழ்வடிவுங்கரநான்கும்
புதுக்கமலநிகர்பதமும் புனிதவிழியானோக்கி [னே.
மதித்துநினைத்தொழுங்கையான் மற்றொன்றைத்தொழுவே

(எ-து.) சுவாமி! உமது பிரகாசமுள்ளசடையும், அதில் தவழுமிளமையான மூன்றாம்பிறையும், மூன்றுகண்ணும், கறுத்த

கண்டமும், உதையமான சூரியனைப்போலப்பிரகாசிக்கின்றவடி வமும், நான்குபுசமும், புதிய தாமரைமலரை யொத்தபாதமும் என்னிட புனிதமானகண்ணாற்கண்டுஉம்மைநினைத்துத்தொழுத வென்னுடைய கையினாலே மற்றொருதெய்வத்தையுந்தொழுவே னோ வென்றான்.—எ-று. (சுஉ)

விலங்கினொடுங்குருகிற்கும் விரிந்தசுடுகாடான
மலங்கொள்வயிறுடைப்புலையன் வரங்கோடற்குரியேனோ
விலங்கவுனைப்பூசித்த தெகினமதற்கேயினிய
நலங்கொள்வரமருளென்று னல்வினையின்றலைநின்றான்.

(எ-து.) இந்தப்படி பரமசிவனைப்புகழ்ந்துசுவாமி! மிருகசா திகளுக்கும் பறவைகளுக்கும் பெரிய சுடலையாகியவயிறும்.மும் மலங்களும் நிறைந்த புலையனான நான் உம்மிடத்தில் வரங்கேழ் க்கத்தக்கவனோ! உம்மை விளங்கப் பூசைபண்ணினது அந்த அ ன்னப்பட்சி ஆகையா லதற்கேயினிமையான நல்வரத்தைக்கொ டுத்தருள வேண்டுமென்றான் தரு'மத்தின் முடியில் நின்ற அந்த வேடன்.—எ-று. (சுங)

என்றுரைசெயவ்வேட னிறந்தவதற்குளமகிழ்ந்து
பொன்றுமனந்தனக்குயிரும் பேறறிவும்புகுத்துயிரை
நன்றுநீயனமேயோர் துளிநீரும்நளினமுங்கொண்
டின்றுபூசனைசெய்தா யெம்மைவரங்கேளென்றார்.

(எ-து.) வேடன் இவ்விதமாகச்சொல்லி வேண்டிக்கொ ண் டதற்குத் திருவுளமகிழ்ந்து இறந்துபோன அன்னப்பட்சிக்கு சீ வனும் பேறறிவுங்கொடுத்து பரமேஸ்வர ரானவர் நல்லதுஓ அ ன்னப்பட்சியே? நீயொருதுளிஜலமும்.ஒருதாமரைப் பூவுங்கொ ண்டு இன்றைக்கு நம்மைப் பூசைபண்ணின படியினால்உனக்கு வேண்டியவரத்தைக்கேள் என்றார்.—எ-று. (சுச)

அய்யவுனைப் பூசிக்கக் கொடுவந்தேனலனிந்தச்
செய்யமலர்ப்பார்ப்புக்காய் கொடுவந்தேன்சிலைவேடன்
எய்யுமதனாலுனது மேல்விழுந்ததெனக்கேதுக்கு
உய்யவரமவனுக்கே யருள்கின்றதொளிரன்னம்.

(எ-து.) ஐயனே? இந்த செந்தாமரைப்பூ உம்மைப் பூசிக்க வல்ல, எனது குஞ்சுக்கு வேண்டு மென்று கொண்டு வந்தேன், அப்போ இந்த வில்வேடன் அம்பினா லெய்தபடியினால் அந்த

தாமரைப்பூ உமது பேரில் விழுந்த படியினால் எனக்கேதுக்கு வரம், அந்த வேடனுக்கே வேண்டியவரம் கொடுத்தருளவேண்டுமென்று அந்தப் பிரகாசமுள்ள அன்னம் சொல்ல.—எ-று. ()

அன்னமினிதுரைத்தவுரை யகமகிழ்ந்தவ்வேடனுக்கு
நன்னிலையோதிமத்துக்குஞ் சுரர்தமக்குநாடரியத்
தன்னிகரில்பரமபதங் கொடுத்தருளித்தனிக்கருணை
மன்னுகடலாகியநம் மாதேவன்மறைதனனுல்.

(எ-து.) இப்படி அந்தப் பட்சி இனிமையாகச்சொன்னவார்த்தைக்கு சுவாமி மனமகிழ்ந்து அந்த வேடனுக்கும் நல்லநிலைமையுள்ள அந்த அன்னப்பட்சிக்கும் தேவர்களுக்கும் நாடுதற்கருமையான வொப்பற்ற மேலான பதவியைக்கொடுத்தருளிஒத்தாரு மிக்காருமில்லாதகிருபாசமுத்திரமாகிய நம்மிடமகாதேவர் மறைந்தருளினர்.—எ-று. (சுசு)

இத்தகையசெயலிலொரு செயலேனுமிவர்செய்தால்
உத்தமவிவ்வாதையுரு ரென்னவுரைத்துயர்முநியைப்
பத்தியொடுகூற்றுவனப் பாலழைத்துப்போமளவில்
அத்தலையினிகழ்ந்தபரி சறிந்தவாறுரைசெய்வாம்.

(எ-து.) இப்படிக் கொத்த செய்கை யேதாகிலும் இப்பாவிகள் செய்திருந்தால், உத்தமராகிய சானந்த மூநிவரே! இந்தவாதைப்படார்கள் என்று இயமதர்மராஜன் சொல்லி உயர்ந்த அம்முநிவரைபத்தியுடனேஅப்பாலழைத்துக்கொண்டுபோமளவில் அவடத்தில் நடந்தவிதஞ் சொல்லுகிறேம்.—எ-று. (சுஎ)

சோரமடவார்தம்மை நமன்றூதர் தனங்களிலே
கூரியமுள்ளேற்றிடுவர் கொழுங்கனலிற்புரட்டிடுவர்
பாரவசிதலைமீது கடாவுவர்மேற்பணிசெறிப்ப
ராரவழற்கம்பத்தை மருவுகவென்றடிப்பரால்.

(எ-து.) விபசாரஞ்செய்த சிலபெண்களை இயமதூதர்கள்தனபாரத்லே கூர்மையுள்ள இருப்புமுள்ளை யேற்றுவார்கள், சிலபெண்களைக் கனிந்த நெருப்பிலேபோட்டுப் புரட்டுவார்கள்,சிலபெண்களிட தலைமேற் பாரமான இருப்புவசியைக் கடாவுவார்கள், சிலபெண்கள்மேற் பாம்புகளைப் பூட்டுவார்கள்,சிவக்கக்காய்ந்த இருப்புக்கம்பத்தை நிறுத்தி அலைக் கட்டித் தருவும்படி சொல்லிச் சிலபெண்களையடிப்பார்கள்.—எ-று. (சுஅ)

அயர்ந்துவிழுந்தார்ப்படைகொண் டங்கத்தைக்கொய்திடுவர்
பயந்தலறவலறவர் பல்லேயொடித்திடுவர்கரக்
குயங்கொடுவெட்டுவர்குதியைக் குதியினுலுறத்திடிப்ப
ருயர்ந்தவடுப்பிடைவைத்துப் புகைப்பரவரொழியாமல்.

(எ-து.)சிலபெண்கள் உபத்திரம் பொறுக்காம லயர்ந்து விழுந்தால் அவர்களை ஆயுதங்கொண்டு உடம்பின்தசைகளை யறுப்பார்கள், பயந்து அலற அலறக் குறட்டினுலேசிலபெண்களிடபல்லைப்பிடுங்கி உடைப்பார்கள், சிலபெண்களிடகையை கூர்வாள்கொண்டு வெட்டுவார்கள்,சிலபெண்களுடையகுதிக்காலைத் தங்கள்குதியினுலே பலமாயிடிப்பார்கள், பெரியஅடுப்பினிடத்தேயிருக்கிற இருப்புத்தாளியிற் சிலபெண்களை வொழியாமல்வைத்துப் புகைப்பார்கள்.—எ-று. (சுகூ)

கண்ணிணையைமரக்கோலால்கிண்டிடுவர்கைங்ஙகத்திற்
புண்ணுதிரமொழுகவிருப் பூசிகளைப்புதைப்பரால்
வண்ணநெடுங்குறடுகொடு பல்நாவைவாங்கிடுவ
ரெண்ணமறமார்பைவகிர்ந் திரலேயேபிடுங்குவரால்.

(எ-து.)சிலபெண்களிட இரண்டு கண்ணையும்குச்சியாற்குத்திக்கிளருவார்கள், சிலபெண்களுடைய கைநகங்களிலே யுதிரமொழுக இருப்பூசிகளை யேற்றுவார்கள், சில பெண்களுடையபல்லையும் நாக்கையும் குறடுகொண்டு வாங்குவார்கள்;சிலபெண்களிடமார்பை பிளந்து ஈரலேப் பிடுங்குவார்கள்.—எ-று. (எ0)

காதினெடுமூக்குமுலே களைந்துவிருச்சிகவணேமே
லாதரவிற்றூங்குமினென் றறைகுலர்கீழுதட்டையுரித்
தோதுகவென்ருருப்பர்கொடிறுடைப்பர்தலேகளை பிளப்
ஊதியுருக்கியசெம்பையொழுகிடுவரகித்திடையே. [பர்

(எ-து.) சிலபெண்களைக் காதுடனே மூக்குமுலேகளையறுத்து தேள்மெத்தைமேல் ஆசையாகத் தூங்குங்களென்று அடிப்பார்கள், சிலபெண்களைக்கீழுதட்டை யுரித்துப்போட்டுப்பேசுங்களென்றடிப்பார்கள், சிலபெண்களைத் தாடைகளை யுடைப்பார்கள், சிலபெண்களைத்தலையையுடைப்பார்கள்,சிலபெண்களுடையதேகத்தில் ஊதியுருக்கின செம்பை வூத்துவார்கள்.—எ-று. ()

அகத்திடையேகொடுதூண்டில்பதித்தெடுத்துச்சுற்றிடுவர்
சினைத்தமுவிற்காய்ந்தசலா கைக்குழுவைச்செறித்திடுவா

மிகப்பெரியமுசலத்தால் விழுந்தலறநருக்கிடுவர்
புகப்படைகளேற்றிடுவர் பொதித்திடுவர்கிருத்திடுவர்.

(எ-து.) சிலபெண்களிட சரீரத்தில் தூண்டிலிட்டுஉயர்ந் தசுழமரத்தில் தூக்கிச் சுற்றுவார்கள், அச்சரீரத்திலேயே நெருப்பிற்காய்ந்தஇருப்புலக்கைகளைவெகுவாய்ச்சொருகுவார்கள், சிலபெண்களின் உடம்பில் விழுந்தலறும்படி வுலக்கையினால் இடிப்பார்கள், சிலபெண்களின் நவத்துவாரங்களில் புகுநஆயுதத்தையேற்றுவார்கள், பொதிப்பார்கள், கிழிப்பார்கள் இயமதூதர்கள்.—எ-று. (எஉ)

நிறையற்றமடமாரை நெடியநமன்றூதரினுங்
குறைவற்றபலவாதை செயக்கண்டுகூற்றுவனை
மறைகற்றமுநிநோக்கி வனிதையர்க்கித்தனைவாதை
பொறையற்றுச்செயலாமோவிவர்செய்வினைபுகலென்றான்.

(எ-து.) நெறியில்லாத பெண்களை கொடிய இயமதூதர்களிப்படியாக அனேகவாதைகள்பண்ணக்கண்டுஇயமதருமராசாவைச் சானந்தமுநிவர் பார்த்துப்பெண்பிள்ளைகளுக்கித்தனையுபத்திரவம் பொறுமையில்லாமல் பண்ணலாமோ !இவர்கள் பண்ணினபாவத்தைச்சொல்லவேண்டுமென்றுகேட்டார்சானந்தமுநிவர்.—எ-று. (எங)

பரபுருஷன்றனக்குமனைப் பொருள்கொடுத்தபாவியிவள்
ஒருதிருடன்பின்னேகிச் சுகங்கண்டவுடம்பியிவள்
வரனிடத்தேசுரதநலம் வஞ்சித்துமற்றொருவன்
விரவுசுகங்கண்டிருந்த வீணியிவள்காணையா.

(எ-து.) இவளன்னியபுருஷனுக்குத்தன்வீட்டிலுள்ளபொருளைக்கொடுத்தபாவி, இவள்ஒரு திருட்டுப்புருஷன்பின்சென்றுபோய் சுகத்தையனுபவித்தவுடம்புள்ளவள், இவள்தன்பத்தாவிடசுகத்தை வஞ்சித்து வேறொருவனோடு மனம்பிரிதியாயனுபவித்துக்கொண்டிருந்த வீணி, இவர்களைபபாரும் ஐயனே! யென்றான்.—எ-று. (எச)

மற்றொருவனெழில்கண்டு மணந்திடவேண்டினவளிவள்
பற்றுமடிப்பெரியாதே விரல்நெரித்தபாவியிவள்
செற்றமில்சோறிடுகென்ற தலைவனைமோதினவளிவள்
குற்றமிலாமாமிதனைப் பிடித்தடித்தகொடியளிவள்,

(எ-து.) இவள்வேறொருவன் அழகைக்கண்டு அவனைச்சேர வேண்டுமென்று ஆசைப்பட்டவள், சமையல்செய்யு மடுப்புளரி யாதேபோனால் அடுப்பைப்பார்த்து விரலைநெறித்தபாவியிவள், சாந்தமாய் சோறுபோடென்றுகேட்ட தன் புருஷனை மோதி யடித்தவளிவள், குற்றமில்லாத தன் மாமியாரைப் பிடித்தடித்த பொல்லாதபாவியிவள் என்றான்.—எ-று. (எரு)

ஓரகத்திதனைவைது காதறுத்தவுலுத்தியிவள்
சீரியமாமனையெதிர்த்து செருத்தகொடுங்கலதியிவள்
நேரிலாக்கொழுந்தன்வரி லெதிர்நின்றநீலியிவள்
ஈரமுடைக்கணவன்வரி லுளங்கலங்கநடப்பளிவள்.

(எ-து.) இவள் தன்வோரகத்தியைவைதுகாதறுத்தஉலுத்தி,இவள் சிறப்புடையநல்லமாமனாரையெதிர்த்து சண்டைபண்ணினபொல்லாதகலகக்காரி,இவள்ஒப்பில்லாததன் கொழுந்தன் வந்தால் நாணமின்றி எதிரேநின்றநீலி, இவளிதக்கமுடையதன் புருஷன்மனதுகலங்க அலங்கோலமாக நடந்துகொண்டவள் என்றான்.—எ-று. (எசு)

இறைவனொடுகொழுந்தனெனைப் பிடித்தானென்றில்லாத
குறிபலகாட்டினவளிவள் கொங்கையிடத்தியாவரையு
முறைபுவரக்கலந்தபெரு மூடியிவள்பசித்தேனென்
றருமனைக்கண்வந்தவரை யொறுத்தவள்மற்றிவள்கண்டாய்.

(எ-து.) இவள் தன்புருஷனுடனே கொழுந்தன் என்னைக் கையைப்பிடித்தானென்று பொய்சொல்லி யில்லாதஅடையாளங்காட்டினவள், இவள் முறைமைதப்பி யாவரையுஞ்சேர்ந்தமிக்கமூடத்தன்மையானவள், இவள் பசிக்கிறதென்று தன்வீட்டிற்குவந்த வர்களை யடித்துவைதவள் இவர்களைப்பாருமென்றான்.

மலிமனைவாய்ப்பிக்ஷையென வந்தவர்க்குப்பிட்சையிடாக்
கலதியிவள்பெரியோரைக் காணாதமறத்தியிவள்
தலைவனுடனொருத்திபே சிடக்கண்டுதானவனை
விலகரியநிந்தனைகள் பலசொன்னவெளிறியிவள்.

(எ-து.) செல்வத்துடனே வாழ்கின்றவீடென்றுபிட்சைக்காக வந்தபேர்களுக்கு பிட்சைபோடாத சண்டாளியிவள்,பெரியோர்களைத் தரிசனம்பண்ணாத பாவியிவள்,தன் புருஷனுடனே யொருத்திபேசியிருக்கக்கண்ட அவனைத்தான் வேறுந்தூராகப்பலநிந்தனைகள் சொன்னதுரோகியிவள்.—எ-று. (எஅ)

ஆரையும்போய்த்தான்கலத்த லாருமறியாபடிக்
கூருடையகாவலருக் குடம்பயிற்றகயிற்றியிவ
ளோரிடத்தில்வதுவையெனி லுயர்பணிகள்வாங்கியணிந்
தேரொடுசென்றியாவரையும்புணர்ந்திருந்தவிளிக்கியிவள்.

(எ-து.) இவள் எவர்களிடத்திலும்போய்த்தானேசேருகிற தையொருத்தருமறியாதபடிக்குஇருக்கவேணுமென்று ஊர்காவலாளிகளைச்சேர்ந்து அனுகூலம் பண்ணிக்கொண்ட ஈனமுள்ளவள், இவள் ஒரு இடத்தில் கலியாணமாகிறதானால் எறவலாக ஆபரணங்களை வாங்கிப்போட்டுக்கொண்டு அழகாகஅங்கேயாவரையுஞ்சேர்ந்துகொண்டுதிரிந்தஇழுக்குடைய ளென்று சொன்னான்.—எ-று. (எகூ)

அன்னைமனைக்கேபலகா லோடியகையாளியிவ
ளுன்னியயலார்மனைக் கணுற்றிருந்தபதிதியிவள்
தன்னுளமேதடுமாற மதுகுடித்தசளக்கியிவள்.
தன்னெறியோசிறிதுமிலா நரகிவள்விரகிபிவள்.

(எ-து.) இவள் தன்தாய் வீட்டிற்கேயென்னேரமும்ஓடிக் கொண்டிருக்கும் துர்ச்சனமுடையவள்,இவள் என்னேரமும் அசலார் வீட்டினிடத்தில் நிலையாகவிருக்கிற கெட்டகுணமுள்ளவள், இவள் தன்மனதுதடுமாறும்படிகள்ளைக்குடித்தகோர்வி, இவளுக்கு நல்ல நடத்தை சறறேனுமில்லாதநரகி, இவள் பொய்சூதுபிரட்டுமுள்ளவள் என்றான்.—எ-று. (அ0)

இக்கொடியோர்செய்தவினை யின்னுமுளநன்மறையோய்
துக்கமிவர்க்கிவ்வளவோ தொலையாததீவினைஞர்
புக்குடையவிருபத்தெண் கோடியெனும்புலைநிரையந்
தொக்கனமற்றவற்றின்னும் பெயர்சிறிதுசொலக்கேட்டீ.

(எ-து.) நல்லவேதோத்தமரே?இந்தப்பாவிகள்செய்தபாவங்களின்னமுமுண்டு அதற்குத்தக்கதுக்கமிவவளவுதானோ!இந்த தொலையாத பாவிகள் எல்லா விழுந்துகிடக்க இருபத்தெட்டு கோடிநரகங்களிருக்கின்றன, பின்னையந்தநரகத்தினிடபேர்களில்சிலதுசொல்லுகிறேன்கேளுமென்று சொல்லுகிறான்.—எ-று.

உருகியவங்கக்குடிஞை யரத்தின்வீடுயர்சதலம்
பெருகுமசகாலயமே பிறழ்கிவற்றினரவணமே

பொருதயிலபாத்திரமே புழுங்குசிலாவருடமொடு
விரவியசிவாலகுண்டம் வியாக்கிரமத்திரமன்றி.

(எ-து.) உருகியிருக்கப்பட்ட வங்கக்குடிநை யென்றும், அரத்தின் வீடென்றும், சதலமென்றும், மசகாயமென்றும், இவற்றிரவன மென்றும், தயிலபாத்திர மென்றும்,சிலாவருஷ மென்றும், சுவாலகுண்டமென்றும், வியாக்கிரமமுகமென்றும் இவைகளல்லாமலும்.—எ-று. (அஉ)

தத்தகும்பம்நெடுங்கூட சரமலியுட்டீர்ப்பாகம்
வைத்தகும்பிபாகமற வுறவமெல்வரையே
பொய்த்தடறுமலோசங்கு மொழிகாலசூத்திரமே
யுய்த்தமந்தகூவமுத லுலவாதநிரையத்தில்.

(எ-து.) தத்தகும்ப மென்றும், கூடசரமென்றும்,முட்டீர்ப்பாகமென்றும், கும்பிபாகமென்றும்,மறவுறவமென்றும், மெல்வரையென்றும், மலோசங்கமென்றும்,கால சூஸ்திர மென்றும்,மந்த கூவமென்றும்இதுமுதலாகச்சொல்லப்பட்ட நரகங்களிலே.—எ-று. (அங)

கலைவளருமதியுமொளிர் கதிரவனுமுளகாறும்
நிலையொழியாதிருப்பவர்க ளிவர்களெனநிகழ்த்தினனுல்
குலவுமுயிர்கொலைசெய்துங் கோடாததருமனென
விலகுபெயர்பெற்றுமகிழ்ந் திருந்தருளிந்தனிக்கூற்றன்.

(எ-து.) கலைவளருகின்றசந்திரனும், பிரகாசமுள்ள சூரியனும்,உள்ளவரைக்கும் இப்படிப்பட்ட நரகங்களில்விழுந்தொழியாமற் கிடப்பார்களிவர்கள்;என்றுசொன்னுன்குலாவப்பட்ட சீவன்களை யெல்லாங்கொலைசெய்தும் கோணுததருமவானென்றும்பேர்பெற்று மகிழ்ந்தருளிய வொப்பற்ற கூற்றுவனுனஇயமதர்மராஜன்.—எ-று. (அச)

கூற்றுரைத்தமொழிகேளாக் குறைவில்முநியருள்கூர்ந்து
சாற்றருமிப்பாவிகளைத் தனிநிகரில்சிவமனுவா
லேற்றமுடைச்சிவபுரியி லேற்றியிடாதேகுவனேற்
றேற்றமுடைச்சிவபத்தர் சரிப்பரெனச்சிந்தித்தார்.

(எ-து.) இப்படி இயமதர்மராஜன் சொன்னவார்த்தைகளைக்கேட்டு குறைவில்லாத சானந்தமுநிவர் அருளுண்டாகிச்சொல்லுதற்கரிய இந்தப்பாவிகளை ஒப்பில்லாத சிவமந்திரத்தினுல்

எல்லாப்பதவிகளிலுயர்ந்த சிவலோகத்தில் ஏற்றிடாமற் போவோமாகில் தெளிவுடைய சிவபத்தர்கள் நம்மை நகைப்பார்களென்று நினைத்தார்.—எ-று. (அ௬)

முதிரிருபத்தெண்கோடி நரகருயிர்முத்தராய்
நிதியமணிமானத்தி னிடையேறிநிகரில்லாக்
கதியினிடபுகவருடி யென்றினியகவினிலகு
மிதையகமலப்பொகுட்டி னிருஞ்சிவனைத்தியானித்து.

(எ-து.) அதிககொடுமையுள்ள இருபத்தெட்டுகோடிநரகத்திலுள்ளவர்களெல்லாம்சீவன்முத்தராய் கனகரத்தினவிமானத்திலேறிக்கொண்டு வொப்பில்லாத சிவகதியினிடத்திற் போய்ச்சேர்ந்திருக்கத்தயவுபண்ணவேண்டுமென்றுசிவனை இருதையகமலத்தில்தியானம்பண்ணிச் சொல்லுகிறார்சானந்தமுனிவர்.எ-று.

பொருவில்கொடுந்தீவினைஞர் செவிகடொறும்புகுந்தேற
வரியதெனும்பிரணவமுன் னாகியபஞ்சாக்கிரத்தை
யுரிமையொடுசானந்த முனிமுழங்கவுரைத்தனனால்
கருதிமுனிவரயாருங் கடல்போலமுழக்கினரால்.

(எ-து.) ஒப்பற்றஅந்தமகாபாவிகளுடையகாதுகள்தோறும்போய்கேழ்க்கத்தக்கதாய்மந்திரங்களிலுயர்வாகியபிரணவமுதலாகிய பஞ்சாக்ஷரத்தை யுரிமையுடன் சானந்தமுனிவ ரோசைபிறக்கவுரத்துச்சொன்னார், அதையறிந்து கூடநின்ற முனிவர்களெல்லாஞ் சமுத்திரகோஷ்டம்போல அந்தப்பஞ்சாக்ஷரத்தை முழங்கச்சொன்னார்கள்.—எ-று. (அஎ)

நவிலரியசடாக்கரமா மந்திரம்போய்நரகிடத்தோர்
செவியிலணுவாமுன்னந் தீவினைபோய்நிர்மலராய்த்
தவலருநீரக்கமணி சிவலிங்கந்தரித்தவராய்
கவினுறுபேரொளியுளராய் கடிதுகரையேறினரால்.

(எ-து.) சொல்லுதற்கரிய பஞ்சாக்கரமெனு மகாமந்திரம் போய் நரகத்திற் கிடக்கிறபேர்கள் காதிற் கேழ்க்கிறதற்கு முன்னமே அவர்கள் பண்ணின பாவமெல்லாம் போய்நிர்மலாளாய் விபூதிருத்திராட்சம் சிவலிங்கந்தரித்து அழகியபேரொளியுள்ளவர்களாகிச் சீக்கிரமாகநரகத்தைவிட்டுகரையேறினார்கள்.எ-று.

அஞ்சலித்துநடந்தெதிர்வந் தைந்தெழுத்தைசெபித்துநறுங்
கஞ்சமொத்தசேவடியிற் களங்கமிலார்பணிந்திடலும்

நெஞ்சிவப்பினெடுசால நிறைந்தவவர்தமைநோக்கி
பஞ்சுறுநற்பதத்துமைகோன் பத்தியுளமுனிகூறும்.

(எ-து.) இயமவாதனையிலகப்பட்டிருந்தஅத்தனைபேர்களும்அஞ்சலியஸ்தராக எதிராகநடந்துவந்து பஞ்சாக்ஷரத்தை செபித்து வாசனையுள்ள தாமரைபோன்றசானந்தமுனிவருடையபாதத்திற் பாவம் நீங்கினபேர்கள் மனதில் சந்தோக்ஷமடைந்து தெண்டம்பண்ண, அவர்களைப்பார்த்து செம்பஞ்சுபதித்த இன்பத்தைத்தரும் பாதத்தையுடையஉமையவள்புருஷனான பரமசிவனுடைய பக்தியிற்சிறந்தசானந்தமுனிவர்சொல்லுகிறார்.-எ-று.

வேறு.

வருசத கோடியான பாதக வரைகளைத் தான்
ஒருசத கோடியாகி யொழிப்பது குனிக் கொணாத
கருவெனு மாழிக் கென்றுங் கருதரி தாகி யங்கிப்
புரைவது மாது பங்கன் புனிதமந் திரமே யன்றோ.

(எ-து.) வரப்பட்டநூறுகோடிபாதகமலைகளைஒருவச்சிராயுதமாகி அழிக்கவல்லதும்,அளக்கவொண்ணாதபிறவியென்னுஞ் சமுத்திரத்தை அழிக்கும் வடவாக்கினியையும்போன்ற பெண்ணொருபாதியான பரமேஸ்வரனுடைய புனிதபஞ்சாக்ஷரமந்திரமல்லவோ ! என்றார்.—எ-று. (கூ0)

மாற்றருந் தீ வினைக்கு மாபரி கார மென்றே
யாற்றுதற் கரிய சாந்தி ராயண மாதி செய்து
போற்றிய வுடம்பை வாட்டிவருந்துவர் புவியி லென்றும்
ஏற்றுவா கனன்ற னாமத் தியல்பினை யறியார் தாமே.

(எ-து.) மாற்றுதற்கரிய தீவினைகளுக்கு மகாபரிகாரமென்றுசொல்லி, பண்ணுதற்கரிய சாந்திராயணவிரதமுதலானதுகளைச்செய்துதான்வளர்த்த சரீரத்தைவாட்டிப் பூமியில் என்றைக்கும்வருத்தப்படுபவர்கள்ரிஷபவாகனனாகிய பரமேஸ்வரனுடையசிவநாமத்தின்பெருமையை யறியாதபேர்கள்.—எ-று. (கூக)

பரசிவ மந்தி ரத்தைப் பகர்ந்திடார் மகஞ்செய் தாலும்
தரைநதி களிற்றோய்ந் தாலுஞ் சருகினை யருந்தி னாலும்
முரனெடு தேச கால பாத்திர முணர்ந்து பூமி
அருநிதி முத லீய்ந்தாலு மவைதரும் பயனென் றில்லை.

(எ-து.) பரமசிவனிடபஞ்சாக்ஷரமந்திரத்தைச் செபிக்காத பேர்கள், யாகங்களைப்பண்ணினாலும்பூலோகத்திலுள்ளதீர்த்தங்களில்முழுங்கினாலும்,சருகுபக்ஷணைபண்ணித் தவமிருந்தாலும், அறிவுடனே தேசகாலபாத்திரமறிந்து பூதானம் சொன்னதானமுதலியவைகளை கொடுத்தாலும் அதுகள் கொடுக்கப்பட்ட பலனென்றுமில்லை என்றார்.—எ-று. (௯௨)

கந்தரங் கறுத்தமுக்கட்கடவுள்மந் திரமே மிக்க
பந்தமில் வீடுநல்கு மென மறைப் பகரக் கேட்டுப்
புந்தியோர் சிறிது மின்றிப் புகுந்துமற் றொருதெய் வத்தின்
மந்திர முரைப்போர் தாமே மக்களுட் பதடி யாவார்.

(எ-து.) கண்டங்கறுத்து மூன்றுகண்ணுள்ள பரமேஸ்வரனதுமந்திரமே, பாசமில்லாத மேலானமோக்ஷத்தைக்கொடுக்குமென்று வேதஞ்சொல்லக் கேட்டும் புத்திசற்றாகிலு மில்லாமற்போய் மற்றொருதெய்வத்தினுடைய மந்திரத்தைச் செபிக்கிறபேர்களே மனிதருக்குள்பதரானவர்களென்றுசொன்னார்.எ-று.

உற்றநம் மனுவின் பாலியா முறைகுவ மருள் மிகுந்து
மற்றுழி யுரையோ மென்று மணிக்கள னுரைத்த லாலே
அற்றமில் சரண ரியாருந்தன்னையேபொருளாய்க் கொண்டார்
பற்றிய பாச மூலம் பரிப்பது மதுவே யன்றோ.

(எ-து.) பொருந்திய நம்முடையபஞ்சாக்ஷரமான மந்திரத்தினிடத்தில்நாம்அருள்மிகுந்திருப்போம்,மற்றவிடத்தில் இரோமென்று நீலகண்டபரமேஸ்வரன் சொல்லியிருக்கிறபடியினால் பொய்யில்லாதசிவனடியார் எவர்களும் அந்தபஞ்சாக்ஷரத்தையேபொருளாய்க்கொண்டார்கள், பின்னையும் அந்தப்பஞ்சாக்ஷரமானதுவே சீவனைப்பற்றிய பாசவேர்களைப் பரித்தெரிவதல்லவோவென்று சொன்னார்.—எ-று. (௯௪)

ஆரமு துண்ட போதே நரைதிரை யகலுமா போற்
றேரின னெழுந்த போதே செரியிரு ணீங்குமா போல்
வாரிவல் விடத்தை யுண்டோன் மந்திர முரைத்த போதே
வேரொடு பிறவி தீர்ந்து விளங்குதல் திண்ண மாமே.

(எ-து.) பொருந்திய தேவாமிர்தத்தைச்சாப்பிட்டபோதே நரைதிரையில்லாமற் போவதுபோலவும், சூரியனுதையமான

போதேசெறிந்தவிருணீங்குவதுபோலவும், சமுத்திரத்திற்பிறந் தவலிவுள்ள ஆலகாலவிஷத்தையுண்டபரமேஸ்வரன் மந்திரத் தைச்செபித்தபோதே வேருடனேபிறவிகளெல்லாந்தீர்ந்துவிள ங்குவது சத்தியமென்றார் சானந்தமுனிவர்.—எ-று. (கூரு)

நும்பெரு வாதை நீத்து நுவலரு மின்பந் தந்த
தெம்பிரான் மனுவே யன்றோ வினிமதிப் பிரிய னீவீர்
வம்பவிழ் கைலைக் கேகி மகிழ்ந்துவீற் றிருமி னென்றாங்
கும்பரு மிறைஞ்சு மைய னுரைத்தன னுரைத்தலோடும்.

(எ-து.) உங்களுடைபெரிதானஇயமவாதனைகளையெல்லாம் நீக்கிச் சொல்லுதற்கரிய சுகத்தைக்கொடுத்ததுநம்மிடபரமேஸ் வரருடையபஞ்சாக்ஷரமந்திரமல்லவோ! ஆகையால், இனிமேல் மதிக்கவரிய நீங்களெல்லாரும்வாசனைவீசுகிற கைலாசத்துக்குப் போய் சந்தோஷமாக வீற்றிருங்களென்று முன்நரகத்தில் உபத் திரவப்பட்ட பேர்களைப்பார்த்து தேவர்களும் வணங்கப்பட்ட சானந்தமுனிவர் சொன்னமாத்திரத்தில்.—எ-று. (கூசு)

சிவமகிமைச்சருக்கம்முற்றிற்று.

ஆ பாயிரம் உட்பட சருக்கம் சூ-க்கு

திருவிருத்தம்-சருஉ.

---



கணபதிதுணை.



திருச்சிற்றம்பலம்.

ஏழாவது

# கைவலச்சருக்கம்.



அரகணி கைய ரோடீ ரிலாதநற் கணங்கள் சூழப்
பொருவில்சீ ரோடு மெண்ணிற் பொன்மலை வருவ தெய்ப்ப
மருவளர் பலவிமானம் வருதலு மவற்றின் மீதே
பரசிவ சங்கரா வென் றேறினர் பரிந்தெல் லோரும்.

(எ-து.) இப்படி சானந்தமுனிவர், அந்த இயமலோகவாசிகளுக்குப் பஞ்சாக்ஷரமும் அதின் மகத்துவமும் உபதேசித்து, நீங்களெல்லாரும் கைலாயத்துக்குப்போங்களென்றுவிடைகொடுக்கவும், அப்போது உருத்திரகணிகைகளுடனே அளவிலாத கணநாதர்கள்சூழ ஒப்பற்ற சிறப்புடன்பொன்மலைகள்வருகிறது போல் அனேக விமானங்கள் வரவும், அதுகளில் சந்தோஷத்துடனே யாவருஞ் சிவசங்கராவென்று சொல்லிக்கொண்டேறினார்கள்.—எ-று. (௧)

துந்துமி பல முழங்கத் தூயபூ மாரி சிந்த
வந்தகன் மூக்கின் மீது விரனீட்டி யதி சயிப்ப
வந்தியம னூரி னுள்ளே வதிந்தவ ரியாருங் கூடிச்
சுந்தர மணி விமானத் தேறினர் தொகையி லாதோர்.

(எ-து.) அனேக தேவதுந்திமிமுழங்கவும், சுத்தமானபுஷ்பமாரி பொழியவும், இயமதர்மராஜன் மூக்கின்பேரில்விரலைவைத்துக்கொண்டு அதிசயிக்கவும்! பூமியிலிருந்துவந்து இயமபுரியில் இருந்தபேர்க ளெல்லாரும்கூடி அழகுபொருந்திய இரத்தின விமானத்திலேறினார்கள் கணக்கில்லாதபேர்கள்.—எ-று. (௨)

ஏறிய பின்னர் மாறு விருங்கயி லாய வெற்பி
னூறுமன் பொடுசென் றெங்க ளுமாபதி தாள் வணங்கிக்
கூறருங் கருணை பெற்று குழுமினின் றமரர் போற்ற
வீறிலா வின்பந் துய்த்தாங் கிருந்தன ரொழிவி லாது.

(எ-து.) விமானங்களிலேறினபின்பு ஒருகாலத்திலும்மாறு படா பெருமையுள்ள கைலாசகிரியில் மிகவுமுதிர்ந்தபக்தியுடன் விமானங்களி லேறிப்போய் நமது பார்வதிசமேதரான பரம சிவனைவணங்கி அவருடைய சொல்லுதற்கரிய கிருபாகடாட்சம் பெற்றுகூடிநின்று தேவர்கள் துதிக்க கெடுதலில்லாத சுகத்தை யனுபவித்துக்கொண்டு கைலாசத்திற்றானே வொழிவில்லாமல் அவர்கள் எல்லாருமிருந்தார்கள்.—எ-று. (௩)

ஆங்கவர் போய பின்றை யந்தக நில்லென் றன்பு
தேங்கு சானந்த னென்னுஞ் சிவமுனி முனிவ ரோடு
தாங்குதன் புஷ்ப கத்தின் சார்தருங் கைலை நோக்கி
யோங்குவிண் ணெறிகட் சென்றா னும்பர் கைகூப்பி நிற்ப.

(எ-து.) அவ்விடத்திலிருந்தவர்களெல்லாம் போனபிறகு, சானந்தமுனிவரானவர் இயமதர்மராஜனைப்பார்த்து நில்லும்என் றுசொல்லி முனிவர்களுடனே தம்மிட புஷ்பகவிமானத்திலேறி எய்தற்கரிய கைலாயத்தைநோக்கி ஆகாசமார்க்கத்தில் தேவர்க ளெல்லாங் கைகுவித்துநிற்கநடந்தார்.—எ-று. (௪)

சென்றிடு மளவி லாண்டு தேசுடைக் கயிலை யென்னுங்
குன்றுடை முடிகண் டெங்கள் கோமுனி கரங் குவித்து
முன்றிகழ் வுட னிருந்த முனிவரை யுவந்து நோக்கி
நின்றவக் கயிலை யின்சீர் சிற்சில நிகழ்த்த லுற்றான்.

(எ-து.) இப்படி போகுங்கால் எதிரில் பிரகாசமுடையகை லையின் கொடுமுடியைக்கண்டு கைகுவித்துநின்று கும்பிட்டுதம் முன்னாகவிருந்த முனிவர்களைச் சந்தோஷமாய்ப்பார்த்து அந்த கைலாசகிரியினுடைய சிறப்புகளிற் சிலதைசொல்லத்தலைப்பட் டார் சானந்தமுனிவர்.—எ-று. (௫)

வே று.

கேடிலா னுறு முயர்வரைச் சாரலிற் கிளர்ந்து
நீடு சந்தனத் தண்பொழில் நெடுநில மடந்தை
சூடு நித்தில முடிமுதல் சூழவோர் பசும்பட்
டாடை சுற்றிய தன்மையி லிலங்குதல் பாரீர்.

(எ-து.) பிறப்பிறப்பில்லாத பரமேஸ்வர னிருக்கப்பட்ட வெள்ளியங்கிரியின் பக்கத்தில் சூழ்ந்திருக்கும் சந்தனத்தோப்புகளானது, பூமாதேவிதரித்த முத்துக்கிரீடத்தினைச்சூழவொரு பச்சைப்பட்டு வஸ்திரஞ் சுற்றினதுபோல இருக்கின்றதைப்பாருங்கள் என்றார்.—எ-று. (சு)

ஆதிமாலையன் வரையெனை நண்புகொண் டருளென்
றேத்தி யேமவெற் பணுகிநின் றிரந்திடு மியல்போல்
வாய்த்த சாரலிற் பசுங்கிளி மிழற்றுற வயங்கிப்
பூத்த கோங்கினின் றெதிருறப் பொதிவது பாரீர்.

(எ-து.) ஆத்திமாலையைதரித்தபரமசிவனிருக்கப்பட்ட வெள்ளியங்கிரியே என்னைத்தோழனாகக்கொண்டருளென்றுபுகழ்ந்து பொன்மலையானது நின்றுகொண்டு கேழ்க்கிறதுபோல், கைலாசகிரிப்பக்கத்திற் கிளிப்பிள்ளைகளிருந்து சத்திக்கக் கோங்கு மரங்கள் பூத்துநிற்கிறதைப்பாருங்கள் என்றார்.—எ-று. (எ)

கழைகொள் சாரலிற் கிடந்தபன் மரகதக் கதிரை
யுழைகள் புல்லென நாவளைத் துழல்வது பாரீ
ரெழிலியைக் கடவா ரணமென்று பாய்ந்தி கலிச்
செழுமுடக் குளை நாணொடு செலுமியல் பாரீர்.

(எ-து.) மூங்கில்கள் முளைத்திருக்கும் சாரலிற் கிடக்கிற மரகதமணியினது பிரகாசத்தை மான்கள் புல்லென்றெண்ணி நாவைநீட்டிவளைத்து மேய்ந்து பார்த்துழலுவதைப்பாருங்கள், மேகங்கள் தவழுகிறதை யானை யென்றெண்ணிச் சிங்கமானது பாய்ந்து அகப்படாதபடியினால் நாணிப்போகிறதைப்பாருங்கள் என்றார்.—எ-று. (அ)

முழைகளிற் புகுவளி யொலிமுழ வொலியாகச்
செழுமயிற் கணம் நடித்திடுஞ் செயலினைப் பாரீர்
வழுவிலார் வரக் கண்டுளங் குழைத்து கண்வழிநீ
ரொழுகல் போற்சுனை யருவிக ளொழுகுதல் பாரீர்.

(எ-து.) வெள்ளியங்கிரியினிட முழைகளிலே நுழையும் வாயுவின் சத்தமே மத்தளத்தொனியாகமயில்கூட்டம் நடனம் பண்ணுகிறதைப்பாருங்கள், குற்றமற்ற பெரியோர்கள் வருகிறதைக்கண்டு நெஞ்சுருகிக் கண்ணீ ரொழுகிறதுபோலச் சுனையினின்று அருவிவருகிறதைப் பாருங்கள்.—எ-று. (கூ)

நீடிரு றனைச் சிதைத்த நன்னெடுங் கடக்கரிதா
னூடழுந் திட னரியதே னொழுகுதல் பாரீர்
சேறுங் கழை மிசைமயி லசைகுதல் சிறப்பி
னேடுறுங் கழைக் கோதையை யொத்தது பாரீர்

(எ-து.) அந்தக்கிரியிலுள்ள தேன்கூட்டை யழித்தயானை கள் அத்தேனிலேயேமூழ்கத்தக்கதாகஒழுகுகிறதைப்பாருங்கள் மூங்கிலின்பேரில்மயிலிருந்தசைகிறதுகம்பத்திலிருந்துநடிக்கும் பெண்கள்போல விருக்கின்றதுபாருங்கள்என்றார்.—எ-று. (கo)

வெள்ளியங் கிரிப் பேரொளிமிசைபரந் தெழுதல்
கொள்ளை வானதி வந்திரை முடிதனிற் கொளுமோர்
பிள்ளை வெண்மதி தனைக்கணு ளேக்கிய பினைத்தன்
றெள்ளி தாமிடத் தேகல்போற் றிகழ்வது பாரீர்.

(எ-து.) வெள்ளிமலையின் பிரகாசம் ஆகாசத்திற் பாவியெ ழுந்திருப்பது, ஆகாயகங்கைவந்து பரமேஸ்வரன் சடையின் மூன்றாம்பிறையைக் கண்ணாற் பார்த்துப் பிறகு தன்னிடத்துக் குப்போகிறதுபோல விருக்கின்றதைப்பாருங்களென்றார். எ-று.

செம்பொ னாயக னம்புயன் றேடுதற் கரிய
சம்பு வாழ்கிரிப் பேரொளி யெங்கணுந் தயங்க
வும்பர் போற்றுமப் பெருங்கிரி யுடைப்புகழ் வெள் ளம்
பம்பு கின்றது போன்றதிவ் வதுகளைப் பாரீர்.

(எ-து.) இலட்சுமிசமேதரான விஷ்ணுவும், தாமரைவாச னான பிரமதேவனும், தேடுதற்கரியபரமேஸ்வரன் வாழப்பட்ட வெள்ளியங்கிரியினுடைய பிரகாச மெவ்விடங்களிலும் வீசுவது தேவர்கள்துதிக்குமக்கயிலாசகிரியின்கீர்த்தியாகியவெள்ளம்எங் கும்பரவினதுபோல இருந்தது.—எ-று. (கஉ)

என்றுரைத்து நன் முனிவரோ டேகியக் கயிலைங்
குன்றின்மேற் புகுந் தெம்பிரான் கோயின்முன்னனுசிப்
பொன்றயங்கு புஷ்பகத்தி னின்றிறங்கி யுட் புகுந்தான்
கொன்றை வேணியன் வார்கழல் வணங்கவே குறித்து.

(எ-து.) இப்படி சானந்தமுனிவர்கைலாசகிரியினது சிறப்பு களைச்சொல்லி முனிவர்களுடனேபோய் அந்தக்கைலாசகிரியின் கொடுமுடியிற்புகுந்து பரமேஸ்வரன்கோயிலுக்கு முன்பாகப்

போய் பிரகாசமான புஷ்பகவிமானத்தில் நின்றிறங்கிகோயிலுக்குள்ளேபுகுந்து கொன்றைமாலைதரித்த சடையினையுடைய பரமேஸ்வரன் பாதத்தை தண்டன்பண்ணபினைத்து.—எ-று. (கங)

புலவர் விஞ்சையர் சாரணர் சித்தர் கிம்புருடர்
கலைகொள் சந்திர ராதவர் முனிவரர் கருடர்
இலகு ருத்திரர் மாயவ ரம்புய ரியக்கர்
அலகிலார் மிடைந்துரு மரனவை யிடை யடைந்தார்.

(எ-து.) தேவர்கள், வித்தியாதரர், சாரணர், சித்தர்கள், கிம்புருடர், கலைநிறைந்தசந்திரர் சூரியர், முனிவர்கள், கருடர்கள், மேன்மையடைந்த உருத்திரர், நாராயணர்கள், பிரமதேவர்கள், இயக்கர்முதலியஎண்ணிறந்தபேர்கள், நெருங்கியிருக்கிறபரமேஸ்வரன் சபையிலேயடைந்தார் சானந்தமுனிவர்.—எ-று. (கச)

அடைந்து நம்பிரான் றிருவடி யஞ்சலி புரிந்து
மிடைந்தபேறருள் பொங்கிமேல் வழிந்தன விழிநீ
ரிடங்கொள் மார்பிடை யொழுகநின் றெழுந்தெழுந் திறை
உடம்பு முள்ளமு முருகுநற் பலதுதி யுரைக்கும். [ஞ்சி

(எ-து.) அந்த சபையிலடைந்து நமதுகர்த்தாவானபரமேஸ்வரன்திருவடியைத் தண்டன்பண்ணிமனதுக்குள்நிறைந்தபேறருளானதுபொங்கிய மேலேவழிந்ததுபோலஆனந்தக்கண்ணீர் மார்பினிடத்திலொழுக நின்று எழுந்தெழுந்து தோத்திரஞ்செய்துஉடம்பு முள்ளமுமுருகப் பலமுறைத்துதிக்கின்றார்.—எ-று.

பால லோசன விமல கங்காதர பரம
வால போசன சங்கர சுந்தர வனந்த
சூல பாணிய காரண வாரண துறங்க
சீல மாதவ ருளத்துறை சின்மய சரணம்.

(எ-து.) நெற்றிக்கண்ணனே! அமலனே! கங்கையைத்தரித்தவனே! யாவர்க்கு மேலானவனே! ஆலகாலவிஷத்தையுண்டவனே! சங்கரனே! சௌந்தரியமுள்ளவனே! ஆதியந்த மில்லாதவனே! சூலந்தரித்தவனே! காரணமானவனே! வேதக்குதிரையேறினவனே! சற்குணமுள்ள மகத்துக்களுள்ளத்தில்வசிக்கும் ஞானசுருபனே! சரணம்.—எ-று. (கரு)

மறை புகன்றவாய்ச் சிவலன தூவிக்கொள வந்த
[illegible]

தெறுக டங்கலுழ் புகர்முகப் பணைகர் செழுங்கை
கறைய டிக்கரி யுரித்தருள் கண்ணுதல் சரணம்.

(எ-து.)வேதங்களோதும்வாயுள்ளமார்க்கண்டனென்னும் பிள்ளையினுயிரை வாங்கவந்த கொடிய இயமனைஉதைத்ததற்பரனே! சரணம், அழகுபொருந்தியமதங்களொழுகப்பட்டவுதெங்கியமுகமும், பனையையொத்த துதிக்கையையும், உரல்போன்ற அடியுமுள்ளயானையையுரித்தருளும்கண்ணுதலே! சரணம் என்றார்.—எ-று. (கஎ)

புண்ணி யத்தனி விடையிவர் புதனே சரணம்
கண்ண னம்புயன் றேடருங் கடவுளே சரணம்
திண்ண னெச்சிலுக் குகந்தருள் செல்வனே சரணம்
தண்ணிறைந்த நீறணிந்த செஞ் சடையனே சரணம்.

(எ-து.) தருமதேவதையைத்தானேரிஷபமாயேறிநடத்தப் பட்ட பரிசுத்தனே ! சரணம், நாராயணனும்பிரமனும் தேடுதற்கரிய கர்த்தாவானவனே! சரணம், கண்ணப்பனென்னும் வேடனெச்சிலுக்குமகிழ்ந்தசெல்வனே!சரணம் குளிர்ந்தகங்கையைச் சிவந்த சடாபாரத்திலுடையவனே! சரணம்.—எ-று. (கஅ)

இனனுடன் றினமிருத்தல் போல்மதி கலை யிருந்த
வனனெடுஞ் சடை முடியுடை வள்ளலே சரணம்
நனிசிறந்த மால் விடைதனை நடத்திவங் தடியார்
முனமெழுந் தரு ளண்ணலே முதல்வனே சரணம்.

(எ-து.) சூரியனுடனே நிதஞ்சந்திரனிருப்பதுபோல, மூன்றாம்பிறையோடு அழகுபொருந்தியநெடியசடாமகுடமுள்ளவள்ளலே! சரணம், மிகச்சிறந்து உயர்ந்த ரிஷபத்தின்மீது அடியார் முன்பாக வெழுந்தருளும்பெருமையுள்ளவனே! முதல்மையானவனே! சரணம்.—எ-று. (ககூ)

வனமுடிப் பிறை யல்லது மார்பினும் பிறையுண்
டெனவ ராகவெண் கோடணி யிறைவனே சரணம்
கனலொளிச் சுடர் மூன்றையுள் கண்களாய்ப் படைத்த
உனலருஞ் சுடரே யருளு ததியே சரணம்.

(எ-து.) அழகுபொருந்திய முடியினிடத்திலிருக்கிற மூன்றாம்பிறையையல்லாமல்மார்பிலேயும்பிறையுண்டென்று சொல்லவராகத்தின்வெண்கொம்பையணிந்தஇறைவனேசரணம்மிக்க

பிரகாசத்தையுடைய சூரியன்,சந்திரன், அக்கினி, இம்மூன்றை யுங்கண்ணாகப்படைத்தநினைக்கவரிய ஜோதியே! கிருபாசமுத்தி ரமே ! உனக்குச் சரணமென்றார்சானந்தமுனிவர்.—எ-று. (உ0)

வேறு.

என்றுதுதி செய்தமுனி தனைநோக்கி நின் செயலுக்
கின்ப முற்றாம்
உன்றனது பேருலகஞ் சானந்த கணேச னென
வுரைக்க நந்தம்
முன்றிகழ்வுற் றுரைகுதியாலெனவமலன்மொழிந்தனனம்
முறையை யெந்தாய்
நன்றிகுதென் றொழியாத வானந்தத் துட னிருந்தா
னவையி லாதான்.

(எ-து.) இப்படி தோத்திரம்பண்ணின சானந்தமுனியைப் பார்த்து உனதரியசெய்கைக்கு சந்தோஷங்கொண்டோம்! இனி உலகமெல்லாம் உன்னை சானந்தகணேசனென்றுசொல்ல நம்மு ன்னாக விளங்கியிருமென்றுபரமேஸ்வரன்அனுக்கிரகம்பண்ணி னார் அதைகேட்டகுற்றமற்றஎமதையனாகியசானந்தமுனிவர்ஒழி யாத பேரானந்தத்துடனே அக்கைலாசத்தில் சுவாமியருகில் இருந்தார்.—எ-று. (உக)

பெருங்கருணைக் கடலனைய சானந்த கணேச னெனும்
பெரியோன் மிக்க
வருங்கயிலைக் கேகியபின் னுருயிரின் கால விதி
யறியுங் கூற்றன்
திருந்தமுடி தலையசைக்கி யுயிர்ப் பெறிந்து முகத்தினொடு
சிந்தை சேர்ந்து
பொருந்தியதன் னமைச்ச னெனுங் காலனுடனிவ்வாறு
புகல லுற்றான்.

(எ-து.) கிருபைக்கடலாகிய சானந்தகணேசரென்னும்பெ ரியவர்கைலாசகிரிக்குவந்ததின்பிறகு சீவாத்துமாக்களுடையகா லங்களையும் விதிகளையுமறியப்பட்டஇயமதர்மராஜன்தன்கிரீடத் தையசைத்துபெருமூச்செறிந்துமுகமும்மனதுஞ் சோர்ந்துதன துமந்திரியான காலனுடனே இவ்வாறாகச்சொல்லத் தொடங் கினான்.—எ-று. (உஉ)

ஒரு முனிவன் வந்துநம தாயமொடு காவலையு
மொருங்கு நீக்கி
விரியு நிரை யத்துள்ளார் புரத்துள்ளா ரனைவரையும்
விரவி னேடு
பொரு வரிய கைலைவரைக் கேற்றிமகிழ் வொடுதானும்
போயி னனன்
முரு கிதழிச் சடையோன்ற னருள்வரமு மிவ்வளவாய்
முடிந்த தேயோ.

(எ-து.) ஒருமுனிவரானவர் வந்து நமக்குரிய அதிகாரமுழு மையுமொழித்து,வித்தாரமானநரகங்களிலும்பட்டணங்களிலு முள்ளபேர்களனைவரையும், அதிசீக்கிரமாகவொப்பற்றகைலைய ங்கிரிக்குப்போக்கித்தானும்மகிட்சியுடனேபோய்விட்டார்! ஆன படியினல்,தேனெழுகியகொன்றைமாலையைத்தரித்த சடையை யுடையபரமேஸ்வரன் கொடுத்தவரமுமிந்த மட்டில் முடிந்ததே யென்றான் இயமதர்மன்.—எ-று. (உங)

வேறு.

மங்கல மிழந்ததோர் மங்கை யாக்கமுந்
தங்கிய புனலறு தக்க வாவியு
மங்கிளர் விழியிலா முகமு மானதே
பொங்குநம் மூர்க்குடிப் போன பின்னரே.

(எ-து.) மங்கிலியமிழந்த ஒரு பெண்ணினுடைய நிலைமை யும் தண்ணீர்வற்றிப்போன தடாகமும்அழகைத்தருங்கண்ணில் லாதமுகமும்!எப்படியோ நமதூதருங்குடிகள்போனபிறகு அப் படியாச்சுதேயென்றான் இயமதர்மராஜன்.—எ-று. (உச)

தருமனென் றுலகெலாஞ் சாற்றப் பட்டதுந்
திருநகர் தனக்குமோர் வறுமை யெய்தலாற்
பெருகிய திருவுளே மென்று பெட்பினல்
மருவிய வாழ்வினை மதிப்ப தென்னரே.

(எ-து.) இயமதருமனென்றுஉலகமெல்லாஞ்சொல்லப்பட் டபேரும்அழிந்துஅழகிய நமதுபட்டணத்துக்கும்தரித்திரம்வந் தபடியினல் பெருஞ்செல்வமுள்ள நாமென்று பொருளாசை பொருந்திவாழ்ந்து மதிக்கப்படுவதினல் பலனென்னவென்றான் இயமதர்மன்.—எ-று. (உரு)

சாலவிவ் விடநிகழ் தன்மை யாவையு
மாலொடு போதனு மறையுங் காணெணப்

பாலலோ சனனொடு பகரப் போதுமாற்
கோலநம் மூர்த்தியைக் கொணர்தி யென்றனன்.

(எ-து.) இவ்விடத்தில் நடந்தவெல்லாவற்றையும்விஷ்ணுவும் பிரமனும் வேதமும்அறியப்படாதநெற்றிக்கண்ணுள்ள பரமேஸ்வரருடனே அறிக்கைப் பண்ணப்போறோம், அழகுள்ள நமது வாகனத்தைக் கொண்டுவாவென்றான்.—எ-று. (உசூ)

நடைபெரு நீலமா னுகமீ தொரு
படியிவர் புயலினற் பான்மைத் தாமென
விடலருஞ் சினமிகு மேதிமீ மிசை
யடல்புனை தென்றிசைக் கரச னேறினன்.

(எ-து.) நடையுள்ளநீலகிரியின்மேற்படிந்துஒரு மேகமண்டலம்நடத்துவதுபோல்நீக்கதற்கரியகோபமிகுந்த எருமைக்கடாவாகனத்தின் பேரில் இயமதருமராஜன் ஏறிநடத்தினன். எ-று.

படையுறு கையுடைப் படர்க ளாயினோர்
புடைகளி லன்பொடு பெயர்ந்து சூழ்வர
வடைதரு துன்பமோ டமல மாகிய
விடையவன் கைலையை மேவின னரோ.

(எ-து.) ஆயுதபாணிகளாகிய இயமபடாக்கள் பக்கத்தில் அன்புடனே சூழ்ந்துவர,பொருந்தியதுன்பத்தோடுநிர்மலமான இரிஷபவாகனனது கைலையங்கிரிக்குப்போயினன்.—எ-று. ()

மேயபின் னெம்பிரான் மிக்க கோயிலின்
வாயிலி னிறுத்தியே வாகனந் தனை
யோய்வரு மிந்திய புலனொ டுக்கியே
தாயிலா னவையிடை சார்ந்திறைஞ் சினன்.

(எ-து.) கைலயங்கிரிவாசனான வெமதுகர்த்தன் வீற்றிராநின்ற கோயிலின் வாசலினருகில் தன்வாகனத்தை நிறுத்திப்போட்டு,ஓய்வில்லாமல் இந்திரியவழிசெல்லாதுஐம்புலன்களையுமொடுக்கி தாயிலாத பரமேஸ்வரன் சபையினிடத்தில்போய் தண்டம்பண்ணினன்.—எ-று. (உகூ)

துதிபல சொல்லியே தூயநம் பசு
பதியரு சந்நிதி தன்னிற் பாசமுங்
கதிருடைச் சூலமுங் கதையும் வைத்துநின்
றெதிர்தொழு தந்தக னியம்பு வானரோ.

(எ-து.) பல தோத்திரங்களுஞ்சொல்லி நம்பரமேஸ்வரன் சந்நிதிமுன்பாகபாசமும், பிரகாசமுள்ளசூலமும், காலதண்டாயுதமும்வைத்து, சுவாமிக்கெதிராகநின்றுகொண்டுவணக்கமாகச் சொல்லுகிறான்.—எ-று. (௯o)

உன்னுடை யருளெலா மொருங்கு பெற்றுனை
யுன்னுசா னந்தமா முனிவர் தென்வயி
னென்னர சுரிமையை யொழித்திங் கெய்தினார்
அன்னது நானுனக் குரைதல் வேண்டுமோ.

(எ-து.) சுவாமி! தேவரீருடையவருளெல்லாமொருமிக்கப் பெற்று தமது பாதத்தையே சிந்தித்திருக்கும் சானந்தமகாமுநிவர்வந்து என்னிடத்திலிருந்த அதிகார உரிமையையொழித்து இங்கேவந்துவிட்டார்! அதனைநான்தேவரீருக்குச்சொல்லவேண்டுமோ! என்றான்.—எ-று. (௯க)

எனதிடை யளித்தவிவ் விறைமை தன்னைநீ
யுனதுளக் கேற்றவர்க் களித்தி யொப்பிலாய்
நினதரு ளேவலை நின்று செய்குவ
னினியவ ணேகலை னென்று கூறினான்.

(எ-து.) அடியேனிடத்திற்கொடுத்த இந்த எமதருமபட்டத்தைத் தேவரீர்திருவுளத்திற்கேற்ற பேர்களுக்குக் கட்டளை பண்ணவேண்டும் ஒப்பில்லாதசுவாமி! அடியேன்தேவரீர்இட்ட ஏவற்றொழில்களை இங்குசெய்துவருகிறேன், இனி அவ்விடத்திற்குப்போகேனென்று சொன்னான்.—எ-று. (௯உ)

கூறிய வியமனை நோக்கிக் கோதிலாய்
பேறரு ளெம்முடை யடியர் பெற்றியை
யூறுற முன்னுனக் குணர்த்தினே மெனுந்
தேறலைத் தேறலைச் சிந்தை தன்னினீ.

(எ-து.) இப்படிசொன்ன இயமதருமராஜனைப்பார்த்துஓ கோசுற்றமில்லாஇயமதர்மனே? அருள்பெற்றநமது அடியார்கள் மகிமையை முன்னுலே உனக்குநாம்சொல்லியிருந்தும்உன்மனதில் உணரவில்லை என்றார் பரமேஸ்வரர்.—எ-று. (௯௩)

நன்னெறி யடியரு நாமும் வேறல
மென்னநின் றுணர்பவ ரெம்மை யெய்துவார்
நன்னெறி யடியரும் நாமும் வேறுமற்
றென்னநின் றுணர்பவர் நிரையத் தெய்துவார்.

(எ-து.) நல்ல நெறியையுள்ள நமது அடியாரும் நாமும் வேறல்லவென் றறிந்தவர்கள் நம்மைவந்தடைவார்கள், நமதடியாரையும் நம்மையும் பேதமாக வெண்ணுவோர்கள், நரகத்திலடைவார்கள் என்றார்.—எ-று. (ருச)

தீதிலெம் மடியவர் சிந்தை வாழுமேன்
மேதினி யெங்கணும் விரவி வாழுமால்
தீதிலெம் மடியவர் சிந்தை வாடுமேன்
மேதினி யெங்கணும் விரவி வாடுமால்.

(எ-து.) குற்றமற்ற நமது அடியாருடைய சிந்தைமகிழ்ந்ததேயுண்டானால், பூலோகமெங்கும்மகிழ்ச்சியடைந்துவாழும், குற்றமற்ற நம்மடியார்களுடையசிந்தைவாடுமேயானால் பூலோகமெங்கும்வாடி இளைக்குமென்றார்.—எ-று. (ருரு)

மாசொடு கூடிய மனத்த ராயினுந்
தேசொடு கூடிய செய்ய ராயினும்
பூசனை செய்தெதைப் போற்றினோர் தமை
நேசமோடியாமென நின்றுகாண்டியால்.

(எ-து.) அசுத்தம் பொருந்தியமனதுள்ளோரானாலும், பரிசுத்தமனதையுடையஞானவான்களானாலும், பூசைபண்ணி நம்மை துதிக்கப்பட்டபேர்களைப் பக்தியுடனே நாமென்று நின்று தெரிசனம் பண்ணென்றார்.—எ-று. (ருசு)

உன்றனக் கரசிய லொழிந்திடா மலே
நின்றிட மனத்திடை நினைத்தி யேற்பிறி
தொன்றிலை யெம்பத முன்னி னோரைநா
மென்றுநீ கோடிமற் றெண்ணம் வேறற.

(எ-து.) இயமதர்மனே? உன்னிட அரசியல்புவிலகிப்போகாமல் நிற்கவேணுமென்று மனதிலே நினைத்தாயாகில், அதற்கு வேறொன்றில்லை, நமது திருவடியை யிடைவிடாதுநினைக்குமடியார்களை நாமாகவெண்ணிக்கொள் மனதிலேஐயமில்லாமல்என்றார்.—எ-று. (ருஎ)

தரைபுகழ் பத்திர தத்தைபெற் றருள்
ஒருகண னுதனெம் மிடத்தி லுற்றனன்
பொருவரு நினதுமா புரத்திற் கின்னமும்
வருவனென் றுளத்திடை மதித்தல் செய்கலே.

(எ-து.) பூலோகம்புகழப்பட்டபத்திரதத்தையம்மைபெற்றவொப்பற்ற சானந்தகணேசன் நம்மண்டையிலிருந்துவிட்டான்,இனிஉனதுஇயமபுரத்துக்குவருவானென்று மனதிலேஎண்ணவேண்டாமென்றார்.—எ-று. (ங அ)

நின்பதி யெங்கணு நிறைந்த நல்லர்வந்
தின்பமுற் றிடுவரின் னேரமே செலாய்
வன்புரை நரகினும் வந்து வீழ்ந்துளந்
துன்பமுற் றிடுவர்க டொக்க தீயவர்.

(எ-து.)உன்பட்டணமெங்கும் நிறைந்துநல்லவர்கள், இப்பொழுதே வந்துஇன்பம்பெறுவார்கள், கொடிய நரகத்திலேயும் வந்து விழுந்து மனது துன்பப்படுவார்கள்அனேகம் பாவிகள் என்றார் பரமேஸ்வரர்.—எ-று. (ஙகூ)

திருந்துநின் னரசியல்சிதறிடா வகை
பொருந்துநிற் களித்தனம் போகிநின் னகர்க்
கருந்திறற் பாசமு மடல்வெஞ் சூலமு
மிருங்கதை தன்னையு மெடுத்துக் கொண்டியால்.

(எ-து.)திருத்தமான உன் அரசின்தன்மைசிதறுதபடியிருக்கவுனக்குக்கொடுத்தோம்போவாய், உன் பட்டணத்துக்குரிய பலமுள்ள பாசமும். வெற்றிபொருந்திய வெய்யசூலாயுதமும், பெருமையுள்ள தண்டாயுதமும் எடுத்துக்கொள்ளென்றார் பரமேஸ்வரர்.—எ-று. (சo)

என்றருள் செய்தன னெம்பிரா னவன்
பொன்றிகழ் திருவடி பணிந்து போற்றியே
நின்றுன தேவலி னிற்பனி யானெனத்
தென்றிசைக் காவலன் செப்பி மீண்டனன்

(எ-து.) இப்படியாகபரமேஸ்வரனருளிச்செய்ததின்பிறகு பொன்போலப் பிரகாசிக்கப்பட்டசுவாமி திருவடியிலேபணிந்து துதித்து தேவரீர்சொன்ன ஏவற்படிக்கு நிற்கிறேன் அடியேனென்றுதெட்சணதிசைக்குக் காவலான இயமதர்மன் சொல்லிக்கொண்டு திரும்பினான்.—எ-று. (சக)

மீண்டுதன் வாகனத் தேறி வெம்பட
ரீண்டுமுன் பின்செறிந் தேத்தி வந்திட

மாண்டவங் கத்துயிர் வந்ததொத் தெழில்
பூண்டதன் னகரிடைப் பொருந்தி நோக்கினன்.

(எ-து.) இயமதர்மராஜனனவன் மீண்டுந்தன் வாகனமான மயிடத்தின்மே லேறிக்கொண்டு பொல்லாத இயமபடாக்கள் முன்னும் பின்னுங்கூடிச் சேவித்துவர இறந்த உடம்பில் சீவன்வந்ததுபோல் அழகுபெற்ற தன்பட்டணத்தில் வந்துபார்த்தான்.—எ-று. (சஉ)

ஐயுடை முடங்குளை அரிசுமந் திடும்
துய்யபே ராசனத் திருந்து தோமிலான்
செய்யதன் னரசியல் செலுத்தி வாழ்ந்தனன்
வையக மெங்கணும் மதித்து போற்றவே.

(எ-து.) அழகுள்ள பிடரிமயிரோடுங்கூடிய சிங்கஞ்சுமந்த சுத்தமான சிங்காசனத்தில் இருந்துகொண்டு குற்றமில்லாத இயமதர்மராஜனனவன் செம்மையான தன்னிட அதிகாரஞ் செலுத்திகொண்டு பூலோகத்திலெங்கும் மதித்து போற்றும்படி வாழ்ந்தான்.—எ-று. (சங)

நற்றவர் பரவுசானந்தன் மாக்கதை
கற்றவர் கேட்டவர் கருத்தின் புற்றவர்
புற்றிய பவந்தனை நீக்கிப் பண்பொடு
செற்றமி லின்பவீ டுறுவர் திண்ணமே.

(எ-து.) நல்ல தவமுடைய பேர்கள் பரவப்பட்ட சானந்த கணேசருடைய இந்த மகாகதையைகற்றபேர்களும்கேட்டபேர்களும், மனதில் சந்தோஷித்தபேர்களும், தங்களைப் பிடித்த பாவத்தொடர்ச்சி நீங்கி பண்புடனேஅழிவில்லாத இன்பமுள்ள மோட்சமடைவார்கள் இது சத்தியம்.—எ-று. (சச)

நிருமல முடையவெண் ணீறு வாழ்கவே
வருமருள் கண்டிகை மாலை வாழ்கவே
ஒருதிற லஞ்செழுத் தோங்கி வாழ்கவே
அரனருள் பெற்றவ ரன்பர் வாழ்கவே.

(எ-து.) நிர்மலமான விபூதிவாழ்க, இஷ்ட காமியங்களைக் கொடுக்கப்பட்ட உருத்திராக்ஷமாலிகைவாழ்க, ஒப்பற்ற சாபானுக்கிரகமுள்ள பஞ்சாக்ஷரமோங்கிவாழ்க, பரமேஸ்வரனருளைப் பெற்ற அடியார்கள்வாழ்க.—எ-று. (சரு)

வேறு.

மதிசூடி யருள் மிகுந்த சானந்தகணேசன் வர
 லாற்றை யெல்லாம்
பதிமேவு பவழப் பாடிப் புலவன் நற் றமிழாற்
 பாடல் செய்தான்
சதுர்வேத தாத்பரிய சங்கரக பாடல்புரி
 சங்க மேசன்
றுதிமேவு வீரய்ய தேசிகரங் கதற்கு முரை
 செய்தா ரன்றே.

(எ-து.) சந்திரனைத்தரித்தபரமேஸ்வரருடைய யருள்மிகப் பெற்ற சானந்தகணேசருடையசரித்திரங்களையெல்லாம்பவளப் பாடிப்பதியில் எழுந்தருளியிருந்த புலவரான பெரியவர் தமிழில் செய்யுளாகச் செய்தனர். அதை சதுர்வேததாத்பரிய சங்கிரக மென்னுஞ்சாஸ்திரப்பாடல்சொன்னவீரய்யரென்னும்பேர்கொண்ட சங்கமதேசிகன் உரைபடுத்தினர்.—எ-று. (சசு)

கைலேச்சருக்கம் முற்றிற்று.

ஆ பாயிரம் உட்பட சருக்கம் எ-க்கு

திருவிருத்தம்-சகூஅ.

திருச்சிற்றம்பலம்.





